பொருளடக்கம்




எம்.எஸ்.முஹம்மது தம்பி




140, T.P.S. நகர், மருத்துவக்கல்லூரி சாலை,
தஞ்சாவூர் - 613007 ☎ 04362 - 24626

# பொருளடக்கம்

# தானைத் தலைவர்
## ஹழ்லரத்
# ஸஅது இப்னு அபீவக்காஸ் (ரலி)

அல்லாஹ்வின் திருத்தூதராம் அஹமதெங்கள் நபிகள் மாமணியின் திருமுன் அவர்களின் தோழர்கள் கொண்டிருந்த ஒழுக்கமும் பேணுதலும் உவமை கூறமுடியாத அளவு உயர்வு படைத்தவையாகும். அண்ணலார் (ஸல்) அவர்களோடு உரையாடத் துவங்குமுன் அவர்களில் எவருமே, 'என் தந்தையும் தாயும் தங்களுக்கர்ப்பணம்' எனக் கூறியே தம் ஏந்தலரை விளிப்பார்கள். அண்ணலரின் கண்ணியத்தையும் சிறப்பையும் பேணி, மேற்கொள்ளப்பட்ட அந்த ஒழுக்கமே அச்சிலர்களை—ஸஹாபாப் பெருமக்களை—மனித சமுதாயங்களின் மகுடதாரிகளாக்கி வைத்தது எனலாம். பெற்றெடுத்த தாயையும் பேணி வளர்த்த தந்தையையும் விட மேலாக அந் நற்றவத் தோழர்கள் ஒவ்வொருவராலும் ஏற்றிப் போற்றப்பெற்ற நபிகளுக்கரசர் நாயகத் திருமேனி (ஸல்) அவர்களே தங்கள் திருவாயால், ''என் தந்தையும் தாயும் உமக்கர்ப்பணம்'' என நன்றியுணர்வுடன் பாராட்டிய ஒரு பெருந்தோழரே அபூஇஸ்ஹாக் ஸையிதினா ஸஅது இப்னு அபீவக்காஸ் (ரலி) அவர்கள்.

உஹதுடைய போர்க்களத்தில் அண்ணலார் (ஸல்) அவர்களின் அருகே நின்று ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் தங்கள் அம்புகளை எடுத்து ''இறைவா! உன்னுடைய அம்புகளை உன் எதிரிகளின் மீது பாயச் செய்வாயாக'' என இறைஞ்சிய வண்ணமே வீசத் துவங்கியபோது அண்ணலார் (ஸல்) அவர்களும்,

اَللّٰهُمَّ اشْدُدْ رَمْيَتَهُ وَاَجِبْ دَعْوَتَهُ

''இறைவா! இவரின் அம்புகளை குறிதவறாது பாயச் செய். அவரது வேண்டுதல்களை அங்கீகரித்தருள்'' என இறைஞ்சினார்கள்.

அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களையே குறியாகக் கொண்டு மழையெனப் பொழியப்பட்ட அம்புகளை தம் நெஞ்சத்தையே கேடயமாகக் கொண்டு தாங்கி அவ்வேந்தலரைக் காத்த ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்கள் தங்களிடமிருந்த அம்புகளெல்லாம் தீர்ந்த பின்னரும், தம் நெஞ்சத்தில் குத்திட்டு நின்ற-எதிரிகளால் வீசப்பட்ட-அம்புகளையும் வேகமாகப் பிடுங்கிப் பிடுங்கி அவ்வெதிரிகளின் மீதே மீண்டும் வீசிக் கொண்டிருந்தார்கள். நெஞ்சத்தின் சதைகளெல்லாம் பிய்ந்து இரத்தம் கசிந்து வழிய, அஞ்சாது துஞ்சி நின்ற அவர்களின் ஆண்மையையும் அர்ப்பண உணர்வையும் கண்டு நன்றிப் பெருக்கால் உணர்வின் பிழம்பாகவே பிரதிபலித்த நபிகளார் (ஸல்) அவர்கள், தங்களருகே வந்து விழுந்த அம்புகளையெல்லாம் தங்கள் திருக்கரங்களாலேயே எடுத்தெடுத்துத் தந்தவர்களாக,

يَا سَعْدُ ارْمِ فِدَاكَ أَبِيْ وَأُمِّيْ -

"ஸஅதே! (இதோ) அம்புகள் எய்வீராக. என் தந்தையும் தாயும் உமக்கர்ப்பணம்" எனக் கூறிக் கொண்டிருந்தார்கள். ஒரு முறை இரு முறையல்ல, ஒரு நூறு முறைகளுக்கும் மேலாக அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களின் திருவாய்வழியாக அன்று வெளிப்பட்ட புகழ்மொழியே ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களின் வாழ்நாளெல்லாம் மகிழ்மொழியாக ஒலித்துக் கொண்டிருந்தது. "பெருமானார் (ஸல்) அவர்களே தங்கள் தந்தையையும் தாயையும் எனக்காக அர்ப்பணித்து விட்டார்கள்" எனப் பெருமிதத்தோடு ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் பிந்திய நாட்களில் கூறி மகிழ்வார்கள்.

சீவனப் பூங்காவின் சுந்தர மலர்கள் என புவன வாழ்விலேயே நன்மாராயம் பெற்ற பதின்மரில் ஒருவராகிய ஹழ்லரத் ஸஅது இப்னு அபீவக்காஸ் (ரலி) அவர்கள் மக்க மாநகரத்தில் 'ஸொஹ்ரா' என்ற ஒரு குரைஷிக் கோத்திரத்தில் மாலிக் இப்னு வஹீப் என்பவருக்கும்

ஹூப்னா என்ற பெண்மணிக்கும் பிறந்தார்கள். அபீவக் காஸ் என்பது அவர்களின் தந்தை மாலிக் உடைய புனை பெயரேயாகும். அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர் களின் ஐந்தாவது தலைமுறைப் பாட்டனாராகிய 'கிலாப் இப்னு முர்ராஹ்'விலிருந்து இவர்களின் கொடி வழி பிரிகிறது.

கிலாபின் மக்களாக ஒரே தாயின் வயிற்றில் பிறந்த வர்கள் ஸொஹ்ரா—ஸைது சகோதரர்கள். யத்ரிபில் கழிந்த இவர்களின் இளமையிலேயே தந்தை கிலாப் இறந்து விட்டதால் தாய் ஃபாத்திமா, ரபீஆ என்பவரை மறுமணம் புரிந்து கொண்டார். இளைஞர் ஸொஹ்ரா மக்காவுக்கு வந்து விட்டார். சிறுவராக இருந்த ஸைது பனீ குஸாஆக் களுக்கிடையே தம் தாயிடமே-தாய் பெற்ற மற்ற சகோ தரர்களோடு வளரலானார். வயது ஏற ஏற சகோதரர் களை விட்டும் உறவினர்களை விட்டும் தனித்து வாழத் துவங்கிய ஸைது தனித்தவர்—ஒதுங்கியவர் எனப் பொருள் பட 'குஸ்ஸா' என்றழைக்கப்பட்டார்.

வளர்ந்து வாலிபமடைந்த குஸ்ஸா தம் உடன் பிறந்த ஸொஹ்ராவுடன் வாழ நாடி மக்காவுக்கே வந்து விட்டார். பருவச் செழிப்போடும் பராக்கிரமத்தோடும் விளங்கிய அவர், அக்காலை ஹரமின் மேலாளராக விளங்கிய 'அபூ கஃப்ஷான்' என்பவரோடு மல்லாடி அவரை வென்று கஅ பாவின் நிர்வாகப் பொறுப்பை வெகு மலிவாக—ஒரு மது நிறைந்த துருத்தியையும், வாசனைப் புகையூட்டும் ஒரு கழியையுமே விலையாகக் கொடுத்து—கைப்பற்றிக் கொண் டார், அதன் பின் அவரே குரைஷிகளின் தலைவர். மக்கா வின் மார்க்க, சமூக, அரசியல் தலைமை அவருடைய தாகவே ஆகிவிட்டது. அவர் நிர்மாணித்து வாழ்ந்த வீடே பின்னர் அவரின் வழிவாறுகள் கூடி ஆலோசனை நடத்தும் மன்றமாக - தாருன் னத்வா என்றபெயரோடு—விளங்கியது.

நபி இஸ்மாயீல் (அலை) அவர்களின் வழிவாறாக விளங்கிய குஸ்ஸா, 'என் மூதாதையர் இழந்து விட்ட— என் பாட்டனின் சொத்தையே நான் கைப்பற்றிக் கொண்

டேன். இனி இது என் வழிவாறுகளுக்கே சொந்தம்' எனப் பெருமை கொண்டார். அவ்வாறே நடந்தும் முடிந்தது. குஸ் ஸாவை அடுத்து கஅபாவின் பொறுப்பு அவருடைய மகன் அப்து மனாஃபிடம் வந்தது. பின்னர் அவரின் மகன் ஹாஷி மின் மூலம் அவரின் மகன்—அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் பாட்டனார்—அப்துல் முத்தலிபுக்கும், அவரை யடுத்து அவரின் மகன் அபூ தாலிபுக்கும் கிடைத்தது.

குஸ்ஸாவின் உடன் பிறந்த ஸொஹ்ராவின் மகன் அப்து மனாஃப். அவரின் மகன் உஹைப், அவரின் மகன் மாலிக், அவரின் மகனாரே ஹழ்லரத் ஸஅது (ரலி) ஆவார்கள். உஹைபின் உடன் பிறந்த வஹபின் வழி வந்தவரே அண்ண லார் (ஸல்) அவர்களைப் பெற்ற ஆமினா அம்மையார். இவ்வாறாக ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களின் தந்தை அபூவக்காஸ் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களுக்கு தாய் மாமன் முறையாகிறார். அண்ணலார் (ஸல்) அவர் களின் முப்பாட்டனார் ஹாஷிமின் நெற்றியோடு ஒட்டிப் பிறந்த அப்துஷ் ஷம்ஸின் மகன் உமையாவுக்குப் பிறந்த ஸுஃப்யானின் மகளே ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களின் அன்னை ஹம்னா (ரலி). அவ்வகையில் ஹழ்லரத் உஃஸ்மான் கனீ (ரலி), முஆவியா (ரலி) ஆகியோருடனும் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களுக்கு உறவு நெருக்கமிருந்தது.

ஆரம்ப காலத்திலேயே இஸ்லாத்தில் இணைந்து விட்ட பதினேழே வயதுகளடைந்த அப்பேரழகர் அண்ண லெம் பெருமான் (ஸல்) அவர்களின் இறுதிக்காலம் வரை யிலும் அமரிலும் சமரிலும் இணைபிரியாது ஒன்றித்து நின்றனர். 'அல்லாஹ்வின் பாதையில் நிராகரிப்போர் மீது அம்பை வீசிய முதல் மனிதன் நானேயாவேன்' எனப் பெரு மிதங் கொள்ளும் அவர்கள், 'உதிர்ந்து விழுந்த இலைகளை யும் சருகுகளையும் தவிர்த்து உண்பதற்கு வேறெதுவுமே கிடைக்காத நிலையிலும் அண்ணலார் (ஸல்) அவர் களோடு அணி சேர்ந்து நாங்கள் போராடினோம்' என, குரைஷிகளால் புறக்கணிக்கப்பட்டு பனீ ஹாஷிம்கள்

ஷுஅபே அபீதாலிபில் தங்கித் தவித்த காலத்தை நினைவு கூர்வார்கள்.

''தவ்ஹீதின் திருவிளக்கை என் நாயகர் (ஸல்) அவர்கள் ஏற்றிவைத்த காலை அதன் ஒளியை என் இதயம் ஏற்க ஒரு வாரத்துக்குமேல் ஆகவில்லை'' என ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்களே தங்களைப் பற்றி கூறியுள்ளார்கள். அத்துணைத் துரிதமாக அவர்களை இஸ்லாத்தில் இணையச் செய்த இறைவனின் பேரருளை அவர்களே விளக்கியுள்ளார்கள்.

பெற்றோர்களிடத்தில், அதிலும் குறிப்பாகத் தம் தாயிடத்தில் பெரும் பாசமும், மற்றவர்களோடு பழகுவதில் சீரிய அறிவும் சிறந்த குண நலனும் இணைந்து காணப்பெற்ற ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்கள் தங்களின் சிறு பிராயத்திலும்கூட மற்ற சிறுவர்களைப்போல் வேடிக்கைகளிலும் வீண் விளையாட்டுகளிலும் பொழுதைக் கழித்தவர்களல்லர். வில்வீச்சுப் பயிற்சியே அவர்களின் ஒரே பொழுது போக்காக இருந்தது. ஏதோ ஒரு காரிய சாதனைக்காகவே தம்மை உருவாக்கிக் கொள்வதாகவே அவர்களின் இளமைக்காலம் காட்டியது. ஒழுக்கக் கேடுகளும் மதியீனக் கொள்கைகளும் கொண்ட தமது சமூகத்திலிருந்து ஒதுங்கியே நின்ற அவர்களின் இளமைச் சுபாவம் அந்தகாரப் படுகுழியிலிருந்து ஒரு மேட்டின் மீது தம்மை ஏற்றிவிட ஒரு துணைக் கரத்திற்காகக் காத்திருப்பவர்களாகவே அவர்களைப் புலப்படுத்தியது. மறுவிலா தொளிர்ந்த பேரொளியாய்த் திருமறையை ஏந்திவந்த அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் அருட்கரமே விரைந்து அவர்களுக்குத் துணை புரிந்தது.

''இஸ்லாத்தை ஏற்பதற்கு முந்திய மூன்று இரவுகளிலும் நான் தொடர்ச்சியாக ஒரு கனவு கண்டேன். ஒரு வகை இருளால் நான் சூழப்பட்டிருப்பதுபோல் தோன்றியது. அந்தகாரக் கடலிலிருந்து நான் என் தலையை உயர்த்தி நோக்கியபோது என் கண்களுக்கு நிலவின் ஒளி போல் ஒரு தோற்றம் தெரிந்தது. எனக்கு முன்னதாகவே

ஒரு மனிதர் அவ்வொளியை எத்திவிட்டதையும் கண்டேன். அவருக்கருகே அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அலீ இப்னு அபீதாலிப் (ரலி) ஸைது இப்னு ஹாரிஃஸ் (ரலி) ஆகியவர்களையும் கண்டேன். நீங்கள் எப்போது இங்கு வந்தீர்கள்? என நான் வினவ, 'சற்று முன்னர்' என்றனர் அம்மூவரும். மூன்று இரவுகளும் இவ்வாறே கனவு கண்ட என் செவிகளுக்கு நான்காம் நாளே அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களின் நபித்துவம் பற்றிய செய்தி எட்டியது. என் கனவுக்கான விளக்கமும் அறிவுக்குப் புலப்பட்டது. அண்ணலார் (ஸல்) அவர்கள் மூலம் இருளிலிருந்து ஒளியின் புறம் என்னை நகர்த்தும் இறைவனின் பேரருளை என் நெஞ்சம் உணர்ந்தது. என் கால்கள் பெருமானார் (ஸல்) அவர்களின் இருப்பிடம் நோக்கி நடந்தன. அவர்களை நான் அடைந்தபோது மாலை நேரமாக இருந்தது. கனவில் நான் கண்ட அதே மூன்று தோழர்களை அங்கும் நான் கண்டேன். அக்கணமே அண்ணலார் (ஸல்) அவர்களின் திருக்கரம் பற்றி இஸ்லாத்தை ஏற்றேன்'' என்கிறார்கள் ஹழ்ரத் ஸஅது (ரலி).

இவ்வாறாக, அன்னை கதீஜா (ரலி) அவர்களை யடுத்து நபி பெருமான் (ஸல்) அவர்களின் கரம் பற்றி இஸ்லாத்தை ஏற்றவர்களில் தாம் நான்காமவர் என அவர்கள் சுட்டிக் காட்டுகிறார்கள்.

மெய்ஞ்ஞானப் பேரொளியை மூன்று நாட்கள் வரை கனவிலேயே கண்டுவந்த ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்களுக்கு நாயகத் திருமேனி (ஸல்) அவர்களின் நுபுவ்வத்தைப் பற்றிய செய்தியை எத்தி வைத்தவர்கள் ஹழ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களே. அண்ணலார் (ஸல்) அவர்கள் காட்டிய இஸ்லாமிய மார்க்கம் ஒரு சத்திய மார்க்கம் - சாந்தி மார்க்கம்—சமாதான நல்லெண்ணக் கருவூலமாகும். எவருடைய இதயம் அதனைக் கொண்டு வெளிச்சம் பெற்றதோ அவர் விவேகத்தையும் பெற்று விடுகிறார். தாம் பெற்ற இன்பத்தை பெறட்டும் இவ் வையகமும் என்ற வேணவா அவரைப் பற்றிக் கொள்கிறது. பயணப் பாதையில் தன்

னோடு இணைத்துக் கொள்ள நெருங்கிய தோழமையும் உறவு முறையுமுடையவர்களையே முதலில் நாடுவது இதயத்தின் இயல்பு. அவ்வாறாகவே அன்று தாம் கற்ற ஏகத்துவத் திருமந்திரத்தை ஏற்பவர் எவரோ என விரைந்த ஹழ்லரத் அபூ பக்கர் (ரலி) அவர்களுக்கு முதன் முதலாக ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களே கிடைத்திருக்க வேண்டும் என்பதை 'புகாரீ'யில் காணப்படும் 'இஸ்லாத்தில் என்னை நான் வரிசையில் மூன்றாமவனாகக் கண்டேன்' என்ற ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களுடைய அறிவிப்பின் மூலம் உணர முடிகிறது. அச்சமயம் அடிமையாக இருந்த ஹழ்லரத் ஸைது இப்னு ஹாரிஃஸ் (ரலி) அவர்களையும் சிறுவராக இருந்த ஹழ்லரத் அலீ (ரலி) அவர்களையும் சேர்க்காமல் கணிக்கப்பட்ட கூற்றாக இது இருக்கலாம்.

ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களின் வருகையால் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் உள்ளம் பெருமகிழ்வடைந்தது. ஏனெனில் அவர்களின் தூர நோக்கில் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களின் எதிர்காலம் முழுமதியாய் ஒளி வீசிக் கொண்டிருந்தது.

தார்மீகச் சோதனைகளுக்கு முன்னதாகவே ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் ஆன்மீகச் சோதனைக்கு உட்பட வேண்டியவர்களாயிருந்தார்கள். எந்தத் தாயிடத்தில் அவர்கள் நேசமும் பாசமும் மிகுதியாகக் கொண்டிருந்தார்களோ அந்த அன்னை தம் மகனார் இஸ்லாத்தை ஏற்ற செய்தியறிந்து துடிதுடித்தே போனார். ''மகனே! நீ எங்கிருந்து இம்மார்க்கத்தை ஏற்றாய்? உன் முன்னோர்கள் கடைபிடித்த மார்க்கத்தை நீ வழுவ விட்டு விட்டாயா?'' என புலம்பலானார் தாய். ''அன்னையே! அகிலங்களனைத்தையும் படைத்தாளும் ஆண்டவனின் மார்க்கமே இது. நம்முடைய மூதாதை ஹழ்லரத் இப்ராஹீம் (அலை) அவர்களால் அறிமுகப்படுத்தப்பட்ட ஆரம்ப மார்க்கம் இதுவேயாகும். இடையிலே மறக்கப்பட்டு விட்ட இதனை அல்-அமீன் முஹம்மதிப்னு அபதுல்லாஹ் (ஸல்) அவர்களிட

மிருந்தே நான் அறிந்தேன். தாயே! நரகின் வேதனை யிலிருந்து தப்பிக்க தாங்களும் இதனை ஏற்கவே நான் விழைகின்றேன்'' என ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் தம் தாய்க்கு இதமாக எடுத்துரைத்தார்கள்.

''இல்லை, ஒருக்காலும் இதனை நான் ஏற்கப்போவ தில்லை. நீயும் அதனைப் புறக்கணித்து மீளாத வரை நான் உண்ணவும் போவதில்லை; பருகவும் போவதில்லை; நிழலுக்காக ஒதுங்கவும் போவதில்லை'' என்றவராக, தாய் ஹம்னா வெய்யிலில் போய் அமர்ந்துக் கொண்டனர்.

என்ன சங்கடம் இது!

ஊணையும் உறக்கத்தையும் புறக்கணித்து உயிரை வதைக்கும் தம் தாயின் நிலை கண்டு ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் வீட்டின் ஒரு புறம் அமர்ந்து அழுதார் கள். நாட்கள் ஒன்றிரண்டெனக் கழிந்தன. அதன்பின் ஹம்னா அம்மையார் நடக்கவும் திறனிழந்தனர். ஊர் மக்களோ கூடி ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களைப் பழிக் கலானார்கள். அப்பழிச் சொற்களையெல்லாம் சுட்டிக் காட்டி அழுத தம் மகனிடத்தில் ஹம்னா அம்மையார் உறுதியோடு பேசினார், ''முஹம்மதின் மார்க்கத்தை நீ விடு. அல்லது நான் என் உயிரையே விடுவேன். பெற்ற தாயின் உயிரை அழித்தவன் என உலகம் உன்னைப் பழிக் கட்டும்'' என்று.

ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் அண்ணலார் (ஸல்) அவர்களைச் சந்தித்து தங்களுக்கேற்பட்டுள்ள சோதனை நிலையை விவரித்தார்கள். அதை அமைதியுடன் செவி யேற்ற அண்ணலார் (ஸல்) அவர்களின் பால் விண்ணவர் கோன் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் வந்தனர் இறைவனின் செய்தியுடன்;

وَوَصَّيْنَا الْإِنسَانَ بِوَالِدَيْهِ حُسْنًا ۖ وَإِن جَاهَدَاكَ لِتُشْرِكَ بِي مَا لَيْسَ لَكَ بِهِ عِلْمٌ
فَلَا تُطِعْهُمَا ۚ إِلَيَّ مَرْجِعُكُمْ فَأُنَبِّئُكُم بِمَا كُنتُمْ تَعْمَلُونَ ۝

"தாய் தந்தையருக்கு நன்மை செய்யும்படியாக நாம் மனிதனுக்கு நல்லுபதேசம் செய்திருக்கிறோம். (எனி னும் ஆண்டவனென்பதற்கு) நீ அறியாத (எவ்வித ஆதார மும் இல்லாத)வற்றை எனக்கு இணையாக்கும்படி (மனி தனே!) அவர்கள் உன்னை நிர்ப்பந்தித்தால் (அவ்விஷயத் தில்) நீ அவ்விருவருக்கும் வழிப்பட்டு விடாதே. என்னி டமே நீங்கள் திரும்பவேண்டியதிருக்கிறது. நீங்கள் செய் துக் கொண்டிருந்தவற்றைப் பற்றி அதுசமயம் உங்களுக்கு நான் அறிவிப்பேன்." என அண்ணலார் (ஸல்) அவர்கள் ஓதிக்காட்டிய (29 : 08) திருவசனத்தைக் கேட்டு ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்கள் உறுதியான முடிவோடு திரும்பி னார்கள். அவர்களிடமிருந்த கலக்கம் விலகிவிட்டிருந்தது. அன்னையின் முன் நின்ற அவர்களின் வார்த்தைகள் உறுதி யுடனும் தெளிவுடனும் ஒலித்தன. "தாயே! உங்கள் மணி வயிறு பெற்ற மகன் அமைதியும் சாந்தமும் நிறைந்த ஒரு மார்க்கத்தை பற்றி நிற்கும் பேறு பெற்றமைக்காக மகிழுங் கள். அதே நேர்வழியைத் தாங்களும் ஏற்று இறைவன் அருளியுள்ள உணவை உட்கொள்ளுங்கள். இந்த என் வேண்டுகோளைப் புறக்கணிப்பீர்களானால்.........!

"அன்னையே! உங்கள் மீது நான் கொண்டுள்ள பாசம் எத்தகையது என்பதை தாங்கள் அறிந்தே இருக்கிறீர்கள். உங்களைப் போன்ற ஒரு நூறு தாய்கள் எனக்கிருந்து அவர் களனைவருமே உண்ணாமலும் பருகாமலும் ஒருவர் பின் ஒருவராய் மரிப்பார்களாயினும் அவர்களத்தனை பேரை யும் நான் இழக்கத் துணிவேனேயன்றி அண்ணலார் (ஸல்) அவர்களின் தோழமையை விட்டும் விலகவே மாட்டேன்" என்ற உறுதியான குரல் ஹம்னா அம்மையாரின் இதயத் தையே உலுக்கியது. தம் மைந்தரின் மன உறுதியைக் கண்டு வியப்படைந்த அவ்வம்மையார் அவரின் மூலமே இஸ்லாத்தின் பெருமைகளைக் கேட்டறிந்து தாமும் முஸ்லி மானார். ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்களின் உடன் பிறந் தவரான உமைர் இப்னு அபீவக்காஸ் (ரலி) அவர்களும் தம் அன்னைக்கு முன்னதாகவே இஸ்லாத்தை ஏற்றிருந்தனர்.

ஹிஜ்ரத்தின் காலம் வரையிலும் மக்க மாநகரிலேயே வாழ்ந்த ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் குரைஷியர் களின் கொடுமைகளையும் பழிப்புகளையும் சகித்தார்கள். முஸ்லிம்களானோர் வீதிகளில் ஒருவரையொருவர் சந்தித்து உரையாடவே முடியாதிருந்த கொடூர நாட்களவை. மறை விடங்களையும் மனித நடமாட்டமற்ற அமைதியான பள்ளத் தாக்குகளையும் தேடிச் சென்று அவர்கள் தாங்கள் கற்ற வணக்க வழிபாட்டுப் பயிற்சிகளைச் செயல்படுத்திக் கொண் டிருந்தனர். அவ்வழமையின் படியே ஒரு பள்ளத்தாக்கில் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் தம் தோழர்களோடு தொழுதுக் கொண்டிருந்த ஒரு சமயம் தற்செயலாக அவ் வழியே வந்து விட்ட குரைஷியர்களின் பார்வை அவர்கள் மீது பட்டுவிட்டது. அவர்களின் தொழுகை முறையை அக் குரைஷிகள் நையாண்டி செய்தனர். அதனைக் கண்டு ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களின் வீரியம் பீறிட்டெழுந் தது. சினமடைந்த அவர்கள் அருகே கிடந்த ஓர் ஒட்டகை எலும்பை எடுத்து அதனைக் கொண்டே குரைஷிகளை பல மாகத் தாக்கினார்கள். தாக்குதல் பட்ட ஒருவனின் தலை பிளந்து இரத்தமும் கொட்டியது. மக்காவில் தாங்கள் இருந்த அப்போதைய நிராதரவான நிலையில் குரைஷிகளை எதிர்த் துத் தாக்கிய முதல் மனிதர் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர் களே. இஸ்லாத்தில் முதன் முதலாக இரத்தம் சிந்தப்பட்ட நிகழ்ச்சியும் அதுவேயாகும்.

இளமைத் துடிப்பின் இத்தகைய துணிகரங்கள் தொடர அண்ணலார் (ஸல்) அவர்கள் தம் தோழர்களை அனு மதிக்கவில்லை. ஏளனங்களையும் எகத்தாளங்களையும் சகித்துக்கொண்டு பொறுமையுடன் விலகியிருக்கவே அக் காலை வேத வெளிப்பாடுகளால் அவர்கள் எச்சரிக்கப்பட் டிருந்தார்கள்.

"(நபியே!) அவர்கள் கூறுவதைச் சகித்துக் கொண்டு, கண்ணியமான முறையில் அவர்களை விட்டு விலகி இரும்" என்பதே அல்லாஹ்வின் அப்போதைய கட்டளை—அல்குர் ஆன்-73 : 10

அந்த சகிப்புத் தன்மைக்கும் மிகச் சோதனையான காலம் அண்ணலார் (ஸல்) அவர்கள் தம் குடும்பத்தாரோடு, மக்க நகரக் குரைஷிகளால் 'ஷுஅபெ அபூதாலிபில்' புறமொதுக்கப்பட்டிருந்த மூன்றாண்டு காலமாகும்!

எந்தப் பொருள்களையும் அவர்களுக்கு விற்கவும் கூடாது; அவர்களிடமிருந்து வாங்கவும் கூடாது. அவர்களின் பெண்களை மணக்கவும் கூடாது; அவர்களுக்கு பெண் தரவும் கூடாது. அவர்களோடு எந்த உறவும் கூடாது— என்றெல்லாம் குரைஷிகள் மேற்கொண்ட புறக்கணிப்பு ஹாஷிம், முத்தலிப் குடும்பத்தாருக்கு எதிராக மட்டுமே. ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் 'ஸொஹ்றா' கோத்திரத்தைச் சார்ந்தவர்களாகவே இருந்த நிலையிலும், அண்ணலார் (ஸல்) அவர்களோடேயே இணைந்திருந்து தம் தாயாதிக் கோத்திரத்தார் ஏற்ற துன்பங்களனைத்தையும் தாங்களும் ஏற்றுச் சகித்தார்கள். அக்கால கட்டத்தில் தாம் ஏற்க நேர்ந்த ஒரு கோர அனுபவத்தை,

".........பசியும் பட்டினியும் எங்களுக்குப் பழக்கப்பட்டுப் போயின. நாங்கள் மிகப் பொறுமையுடன் சகித்து வந்தோம். ஓர் இரவு நான் சிறுநீர் கழிக்க எழுந்தேன். நடந்து சென்றபோது ஏதோ ஒரு பொருளின் மீது என் கால் பட்டு கரகரத்த ஒலி கேட்டது. இருட்டில் துழாவி அதனை எடுத்தேன்; ஒட்டகைத் தொலியின் ஒரு துண்டு! அதனைக் கழுவினேன்; நெருப்பில் பொசுக்கினேன்; இரண்டு கற்களுக்கிடையில் வைத்து மாவாக அரைத்தேன்; பின்னர் தண்ணீரில் கரைத்துக் குடித்து விட்டேன். அதோடேயே பிந்திய மூன்று நாட்களைக் கழித்தேன்" என ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களே பிந்திய காலத்தில் குறிப்பிட்டுள்ளார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்கள் தோழர்களை யத்ரிபின் புறம் ஹிஜ்ரத்துச் செய்யப் பணித்த காலை முந்திச் சென்ற ஹழ்லரத் முஸ்அப் இப்னு உமைர், இப்னு உம்மி மக்தூம் (ரலி) ஆகியோரையடுத்து ஹழ்லரத் பிலால், அம்மார் இப்னு யாஸிர், உமைர் இப்னு அபீ வக்காஸ்

(ரலி) ஆகியோரோடிணைந்து ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் இரண்டாம் குழுவாக மக்காவை விட்டும் வெளியேறினார்கள். உத்பா இப்னு அபீவக்காஸ் என்ற அவர்களின் மூத்த சகோதரர் ஒரு கொலைக் குற்றத்தின் காரணமாக முன்னதாகவே மக்காவிலிருந்து வெளியேறி மதீனாவில் அம்ரு இப்னு அவ்ஃப் குடும்பத்தாரிடையே வாழ்ந்து வந்தார். அவர் இஸ்லாத்தை ஏற்கவில்லையாயினும் முஸ்லிம்களாகி விட்டிருந்த தம் சகோதரர்களைப் புறக்கணிக்கவில்லை. எனவே, மதீனா வந்த ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களும் அவர்களின் உடன் பிறந்த உமைர் இப்னு அபீ வக்காஸ் (ரலி) அவர்களும் அவரின் இல்லத்திலேயே தங்கிக் கொள்ள முடிந்தது.

ஜிஹாத் என்னும் மார்க்கப் போரால் மிக மேலான தகுதிகளைப் பெற வாய்ப்புகள் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களுக்கு மிகுதமாகவே கிடைத்தன. மதீனா வாழ்க்கையில் பத்ருப் போரே வரலாற்றுச் சிறப்புடைய முதற்போரானாலும் அதற்கு முன்னரும் சிறு சிறு மோதல்கள் நிகழ்ந்துள்ளன. ஹிஜ்ரத்தையடுத்து மதீனாவுக்கே வந்து முஸ்லிம்களுக்கு இன்னல்கள் விளைவிக்க குரைஷிகள் வகுக்கும் திட்டங்களனைத்தும் நபி பெருமான் (ஸல்) அவர்களுக்குத் தெரிந்தவண்ணமேயிருந்தன. அவற்றை எதிர்கொள்ளத் தேவையான முன்னெச்சரிக்கைகளை மிக விழிப்புடனேயே மேற்கொண்டிருந்த பெருமானார் (ஸல்) அவர்கள், 'ராபிஉ' என்ற கடலோரப் பகுதியில் குரைஷிகளின் நடமாட்டம் பற்றிச் செவியுற்று, அதுபற்றி உளவறிந்து வருவதற்காக ஹழ்லரத் உபைதா இப்னு ஹாரிஃஸ் (ரலி) அவர்களின் தலைமையில் அறுபது அல்லது எண்பது பேர்களைக் கொண்ட ஒரு படையை அனுப்பி வைத்தார்கள். ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களும் அப்படையில் இருந்தார்கள். அபூ ஸுஃப்யான், இக்ரிமா இப்னு அபூ ஜஹல் ஆகியோரின் தலைமையிலான இருநூறு பேர்களின் கூட்டத்தை முஸ்லிம்களின் அப்படை சந்தித்தது. அவர்களுக்கிடையே பெரும் போர் நடைபெறவில்லையாயினும் ஆரம்பத்திலேயே அகங்

காரக் கூச்சலிட்ட குரைஷி ஒருவனை நோக்கி ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் தங்கள் அம்பைச் செலுத்திவிட்டார்கள். இஸ்லாமிய வரலாற்றில் முதன் முதலாகச் செலுத்தப்பட்ட அம்பு அதுவேயாகும்.

اِنِّيْ لَاَوَّلُ الْعَرَبِ رَمٰى بِسَهْمٍ فِيْ سَبِيْلِ اللّٰهِ

அல்லாஹ்வின் பாதையில் முதன் முதலாக அம்பைச் செலுத்தியவன் நானே என அவர்களே அறிவித்திருக்கிறார்கள். அன்றைய தினம் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களிடம் எட்டு அம்புகள் இருந்தன. அவை அனைத்தையுமே அவர்கள் மளமளவெனச் செலுத்தலானார்கள். அவை எட்டும் குறி தப்பாமல் சென்று எதிரிகளைத் தாக்கின. மக்கமாநகர வாழ்வில் முஸ்லிம்கள் குனியக் குனிய அவர்களைக் கொட்டிய வண்ணமே பழக்கப்பட்டிருந்த குரைஷிகள் சற்றும் எதிர்பார்த்திராத அந்த எதிர்ப்பைக் கண்டு பெரும் படையே தங்களை எதிர்கொள்ள வந்திருப்பதாக எண்ணி விரண்டோடினர்.

இச்சம்பவத்துக்குப் பின் ஏறத்தாழ ஆறுமாதங்கள் கழிந்தே பத்ருப் போர் நடைபெற்றது. அப்புனிதப் போரில் உயிர் நீத்த தியாகிகளில் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களின் உடன் பிறந்த ஹழ்லரத் உமைர் இப்னு அபீவக்காஸ் (ரலி) அவர்களும் ஒருவர். பதினைந்தே வயதுகளடைந்திருந்த அவ்விளவலின் இழப்பையும் பொருட்படுத்தாது வீரப்போர் புரிந்தனர் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள். அவர்களின் கரத்தால் ஸஈதிப்னுல் ஆஸ் என்ற குரைஷித் தலைவன் கொல்லப்பட்டான். அவனைப்போன்றே அடல் கொண்ட எழுபது வீரர்கள் கொல்லப்பட்டனர் அன்று. இஸ்லாமிய வரலாற்றில் நடைபெற்ற முதல் போர் அது! முஸ்லிம்கள் முதன் முதலாகப் பெற்ற மகிமை நிறைந்த வெற்றி அது! முழு வெற்றி கண்ட மறவர்கள் தங்கள் கரங்களில் மாய்ந்து விழுந்த எதிரிகள் அணிந்திருந்த ஆயு

தங்களையும் ஆபரணங்களையும் கழட்டி எடுத்துக் கொண் டனர். விரண்டோடியவர்கள் விட்டுச் சென்றவையும் கைதானவர்களுடையவுமான உடைமைகளையும் கைப் பற்றிக் கொண்டனர்.

முன்னணியில் பாய்ந்து, போரிட்டவர்கள் அவ்வா றெல்லாம் அள்ளிச் சேர்த்துக் கொண்ட அதே சமயம் பின் னணியில் ஒரு சாரார் நின்றிருந்தனர்; பெருமானார் (ஸல்) அவர்களருகே சிலர் நின்றிருந்தனர்; பாசறையிலும் ஒரு பகுதியினர் சித்தமாக நின்றிருந்தனர். அவர்களுக்கெல்லாம் எதிரிகளின் உடைமைகள் ஏதும் கிட்டவில்லை. கைவசப்படுத் தப்பட்ட உடைமைகளில் தங்களுச்கு ஏதும் கிட்டவில்லையே என அவர்களெல்லாம் கேட்டபோது முன்னணியினர், எதிரிகளோடு போரிட்டு அவர்களை வென்றவர்கள் தாங் களே, எனவே அவ்வுடைமைகள் தங்களுக்கே உரியவை என தர்க்கித்தனர்.

பின்னணியிலிருந்தவர்களோ, 'போரிட்டுக் கொண் டிருந்த உங்களுக்கு உதவுவதற்கேயல்லவோ நாங்கள் காத் திருந்தோம். பெருமானார் (ஸல்) அவர்களுக்குக் காவலாக வேயல்லவா நின்றிருந்தோம்; பின்புறமிருந்து எதிரிகள் பாய்ந்து விடாமல் பாசறையைப் பாதுகாக்கத்தானே நின் றிருந்தோம்; உயிருக்கஞ்சியா ஒதுங்கியிருந்தோம். எனவே போரின் வெற்றியில் எங்களுக்கும் பங்குண்டு. கைவசப்பட்ட உடைமைகளில் எங்களுக்கும் உரிமையுண்டு. இல்லையெனில் நாங்கள் நஷ்டவாளர்களாகி விடுவோம்' என்றெல்லாம் முறையிட்டனர். அவர்களின் முறையீட்டில் நியாயமிருந்த நிலையிலும் உடைமைகளைக் கைப்பற்றிக் கொண்டவர்கள் விட்டுக் கொடுப்பவர்களாயில்லை.

அறியாமைக் கால அனுபவங்களின் அடையாளம் அது! தட்டிப் பறித்தவனே தனவந்தவன் என்ற சண்டித்தன வாதத்தை வளர்த்தே ஒரு போரின் முடிவிலேயே மறுபோருக் கான புகைச்சல் மூட்டப்பட்டு விடும்! பகைவர்களை வென்ற பின்னும் தங்களுக்குள்ளேயே பகைமையை வளர்த்தே பல கிளைகளாகவும் கோத்திரங்களாகவும்

பிரிந்து விட்டிருந்தவர்கள்தாமே அரபுகள்! அவர்களிடையே நீண்ட காலமாக எந்த நபியும் தோன்றியிருக்கவில்லை. எனவே நியதிகளையும் நீதியையும் அவர்கள் பேண வழியில்லை; புரிந்திருக்கவே காரணமில்லை! பிணக்குகளாலேயே பிளந்து பிளவுபட்டுக் கிடந்த அவர்களை இணக்கத்திலாக்கி, ஒரே இயக்கத்திலாக்கித்தானே அழைத்து வந்தார்கள் அண்ணலார் (ஸல்)!

அல்லாஹ்வின் அந்த இயக்கத்தை அழித்திட வந்தவர்களே வைரிகள். அவர்களில் முஸ்லிம்களின் கரங்களால் கொல்லப்பட்டவர்கள் அல்லாஹ்வினுடையவே வைரிகள்; விரண்டோடியவர்களும், விலங்கிடைப்பட்டவர்களும் அப்படியே. "அவர்களின் உடைமைகளைக் கைப்பற்ற எவருக்குமே உரிமையில்லை; எடுத்தவர்கள் அவற்றை எடுத்த இடங்களிலேயே வைத்து விடுங்கள்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்கள். அதன்படியே பொருள்களைக் கைவசப்படுத்திய தோழர்களனைவரும் தாங்கள் எடுத்த படியே அவற்றைத் திரும்ப வைத்து விட்டனர்.

அதே சமயத்தில் ஹழ்லரத் ஸஅது இப்னு அபீ வக்காஸ் (ரலி) அவர்களும் அண்ணலார் (ஸல்) அவர்களை நாடி வந்தார்கள். அவர்களால் கொல்லப்பட்ட ஸஈதிப்னுல் ஆஸ் எனப்பட்டவன் அணிந்திருந்த 'துல் கத்தீஃபா' என்ற வாள் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களைக் கவர்ந்தது. அதனை அவர்கள் அவனிடமிருந்து கழற்றி எடுத்தவர்களாக அண்ணலார் (ஸல்) அவர்களிடம் வந்து செய்தியறிவித்தார்கள். அண்ணலார் (ஸல்) அவர்களோ 'நமக்குடைமையல்லாத ஒன்றை எடுக்க நமக்குரிமை இல்லை' எனக் கூறி அவ்வாளை இருந்த இடத்திலேயே வைத்து வர அவர்களையும் பணித்தார்கள். ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் அவ்வாளின் பால் தம் உள்ளம் கொண்டிருந்த ஆசையை மீண்டும் மீண்டும் எவ்வளவோ வலியுறுத்திக் கூறியும் அண்ணலார் (ஸல்) அவர்கள் அதனை ஏற்கவில்லை. பிறரது உடைமைகளை எடுக்க நமக்கு உரிமையில்லை எனக் கூறி மறுத்தே விட்டார்கள்.

பத்ருப்போர் அல்லாஹ்வின் அருள்வளம் சூழப்பெற்ற ஓர் அற்புதப்போராகும். போதிய போர்த்தளவாடங்களின்றி, எண்ணிக்கைப் பலத்திலும் மிக நலிந்தவர்களாயிருந்த நிலைமையிலும் அல்லாஹ்வின் பொருத்தத்தை மட்டுமே நாடி, தூதர் நாயகம் (ஸல்) அவர்களுக்குத் துணையாகக் களம் காணத் துணிந்து விட்ட அம் முன்னூற்றுப் பதிமூன்றே புனிதவான்கள் அவர்களுக்குப் பின் மற்றெவரும் தங்களின் எந்த நற்செயல்களாலும் பெற முடியாத சங்கையை அன்று அல்லாஹ்விடம் பெற்றுக் கொண்டனர். பெருமானாரின் தோழமையை ஏற்று உறவுகளையும், பிறந்த ஊரையும் துறந்து விட்டிருந்த முஹாஜிர்களும், பாரம்பரியப் பகைமைகளை மறந்து புதிய உறவுகளையும் மரபுகளையும் ஏற்கத் துணிந்து விட்ட அன்ஸாரிகளுமான 'பத்ருடைய தோழர்கள்' ஒப்பற்ற அன்றைய தங்களின் அர்ப்பணத்தின் மூலம் இறைவனின் கிருபாவாரியையே பொங்கச் செய்து விட்டனர். கைப்பற்றப் பெற்ற உடைமைகளை அவர்களெல்லாம் வைத்துத் திரும்பிய மறுகணமே அண்ணலார் (ஸல்) அவர்களுக்கு வேதவெளிப்பாடு தோன்றலாயிற்று.

''அண்ணலார் (ஸல்) அவர்களின் கட்டளையை ஏற்று நான் திரும்பினேன். ஒரு சில அடிகளே எடுத்து வைத்திருப்பேன். அந்த வாளை நான் வைத்துத் திரும்பிய பின் எவரேனும் ஒருவர் எனக்கே உரிமையான அதனை எடுத்தே கொள்வார். அன்றைய போரில் என் உடன் பிறந்த இளவலையும் இழந்து விட்டிருந்த நான் என் வெற்றிப் பொருளையும் கைக் கொள்ள வழியின்றி அடைந்திருந்த மனச்சோர்வை என் இறைவன் ஒருவனே அறிவான். திடீரென பின்னிருந்து ஒருவர் என்னை அழைப்பது கேட்டுத் திரும்பினேன். அண்ணலார் (ஸல்) அவர்கள் என்னை அழைப்பதாக அவர் கூறியதைக் கேட்டு நான் அண்ணலார் (ஸல்) அவர்களைச் சென்றடைந்தேன். 'ஸஅதே! முன்னர் எனக்குச் சொந்தமற்ற ஒரு பொருளை நீர் கேட்

டீர். நான் அதனை உமக்குத் தர மறுத்தேன். இப்போது அல்லாஹ் அதனை எனக்குச் சொந்தமாக்கி விட்டான். எனவே நீர் கேட்டதை எடுத்துக் கொள்ள நான் உம்மை அனுமதிக்கிறேன்' எனக் கூறி,

يَسْئَلُونَكَ عَنِ الْأَنْفَالِ قُلِ الْأَنْفَالُ لِلَّهِ وَالرَّسُولِ فَاتَّقُوا اللَّهَ وَأَصْلِحُوا ذَاتَ بَيْنِكُمْ وَأَطِيعُوا اللَّهَ وَرَسُولَهُ إِنْ كُنْتُمْ مُؤْمِنِينَ

"(நபியே !) 'அன்ஃபால்' ( — போர் முனையில் கிடைத்த பொருள்கள்) பற்றி உம்மிடம் அவர்கள் கேட்கின்றனர். (அதற்கு) நீர் கூறும், 'அன்ஃபால் அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் சொந்தமானது. ஆகவே நீங்கள் அல்லாஹ்வுக்குப் பயந்து உங்களுக்கிடையில் ஒழுங்காக நடந்து கொள்ளுங்கள். மெய்யாகவே நீங்கள் உண்மை விசுவாசிகளாயிருந்தால் அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் வழிப்பட்டு நடங்கள்' என அப்போதிறங்கிய இறை வசனத்தையும் ஓதிக்காட்டினார்கள்" என ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களே அறிவிக்கிறார்கள்.

முந்திய நபிமார்களில் எவருக்கும் அளிக்கப்படாத தனிச் சிறப்புகள் ஐந்து தங்களுக்கு அருளப்பட்டிருப்பதாக அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறக் கேட்டு ஹழ்லரத் ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

"ஒரு மாத காலப் பயணத் தொலைவிலுள்ளவர்களும் உள்ளச்சங் கொள்ளத் தக்கவாறு நான் உதவி செய்யப் பட்டுள்ளேன்,

"பூமியின் முழுப்பரப்பும் எனக்குத் தொழுகைத் தலமாகவும் தூய்மையுடையதாகவும் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. என் சமுதாயத்தவரில் தொழுகையின் நேரத்தை யடைந்தவர் அக்கணமே தொழுகையை நிறைவேற்றிக்

கொள்வார். (குறிப்பாக எந்த தவமடத்தையும் வணக்க தலத்தையும் தேடியடைய வேண்டிய நிர்ப்பந்தம் அவருக்கு இல்லை),

''போரில் கிடைக்கும் உபரிப் பொருள்கள் எனக்கு அனுமதிக்கப்பட்டவை—எனக்கு முன்னர் வந்த எந்த நபிக்கும் அது அனுமதிக்கப்பட்டிருக்கவில்லை,

''இறுதித் தீர்ப்பு நாளில் மனிதர்களுக்குப் பரிந்துரைக்க நான் அனுமதிக்கப்படுவேன்,

''முந்திய நபிமார்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு கூட்டத்தாரின் பாலே அனுப்பப்பட்டிருக்க நான் மனித வர்க்கத்தார் அனைவர்பாலும் நபியாக அனுப்பப்பட்டுள்ளேன்.''

—என பெருமானார் திரு நபி (ஸல்) அவர்கள் விவரித்த தனிச் சிறப்புகளில், போரில் கிடைக்கும் உபரிப் பொருள்கள் பற்றிய அனுமதி பத்ரு ஸஹாபாக்களின் மன நிறைவுக்காகவே அருளப்பட்டதாகவன்றோ தெரிகிறது. 'அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் சொந்தமானது' என்ற பிரகடனத்தின் மூலம் போரில் கிடைக்கும் உபரிப் பொருள்கள் மீதான உரிமை நபி பெருமான் (ஸல்) அவர்களுடையதாகவே ஆக்கப்பட்டு விட்ட பின் அண்ணலார் (ஸல்) அவர்கள் எதிரிகளிடமிருந்து கிடைத்த பொருள்களையெல்லாம் ஒன்று சேர்த்து தங்களின் தோழர்கள் ஒவ்வொருவருக்கும் மன நிறைவேற்படும் விதமாக அவற்றைப் பங்கிட்டளித்தார்கள்.

பத்ருடைய நாளின் பரக்கத்துகளை உணர்ந்தே ஹழ்லரத் ஸஅது இப்னு அபீவக்காஸ் (ரலி) அவர்கள் அன்று தாங்கள் அணிந்திருந்த சட்டையைப் புனிதப் பொருளாகவே பாதுகாத்து மரணத்துக்குப்பின் தம் உடலுக்குக் கஃபனாக அதனையே போர்த்து அடக்கம் செய்ய வேண்டு

மென மரணப்படுக்கையில் தம் வழிவாறுகளுக்குக் கட்டளை யிட்டிருந்தார்கள்.

உஹதுடைய போர்க்களத்திலும் ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்களின் ஆற்றலும் துணிவும் கண்டு அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் பெருமகிழ்வு கொண்டார்கள். ''அண்ணலார் (ஸல்) அவர்கள், 'என் தந்தையும் தாயும் உமக்கர்ப்பணம்' என ஸஅது அவர்களைத் தவிர மற்றெவர்க்கும் கூற நான் கேட்கவே இல்லை'' என ஹழ்ரத் அலீ (ரலி) அவர்கள் உஹதுடைய நிகழ்ச்சி பற்றி பெருமை கொள்கிறார்கள்.

போர்க்களத்திடையே ஓர் எதிரியானவன் வில்லேந்தி, முஸ்லிம்களுக்குப் பெரும் துன்பம் விளைவித்து வந்த சமயம் அவன்பால் குறிவைக்க அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்களைப் பணித்தார்கள். அச்சமயம் ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்கள் தம்மிடம் அம்புகள் யாவும் தீர்ந்துவிட்ட நிலையில் முனை மழுங்கித் தரையில் கிடந்த ஓரீ அம்பையே எடுத்து அவனைக் குறிவைத்து எய்தனர். குறிதவறாமல் அவ்வம்பு அவன் நெற்றியில் பட்டு அவனை மாய்த்தது கண்டு அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்கள் வெண்பற்கள் தெரியச் சிரித்தாரீகள்.

அதேபோல் அவர்கள் வீசிய மற்றொரு அம்பு அபூ ஸஅத் இப்னு அபீதல்ஹா என்பவனின் தொண்டைக் குழியில் பாய்ந்து அவன் நாயைப் போல் தன் நாக்கை வெளித் தள்ளி துடிதுடித்துச் செத்தான். எதிரிகளால் வீசப்பட்ட ஓர் அம்பை அவர்கள் எடுத்து எதிரி ஒருவன் மீதே வீச, குறிதவறாமல் அவ்வம்பு பட்டு அவன் சாகவும், அதனைக் கண்டு ஆத்திரமடைந்த எதிரிகள் அவ்வம்பையே மீண்டும் எடுத்து இவர்கள் மீது வீச, மறுபடியும் இவர்கள் அவ்வம்பையே எடுத்து மற்றொரு எதிரியின் மீது வீச, அவனும் குறிதவறாமல் அவ்வம்பு பட்டு சாகவும், மூன்றாம் முறையாகவும் எதிரிகள் அதே அம்பை எடுத்து இவர்கள்

மீது வீச, அவ்வம்பையே இவர்கள் பற்றி மூன்றாவதாக ஒருவனை நோக்கி வீசவும், அவனும் குறிதவறாமல் அம்பு பட்டுச் சாகவுமான—ஒரே அம்பினாலேயே அவர்கள் அடுத் தடுத்து மூவரைக் கொன்ற நிகழ்ச்சி கண்டவர்களின் பார் வைக்கு ஒரு புதினக் காட்சியாகவே தென்பட்டாலும், 'அது என் ஏந்தலர் புரிந்த இறைஞ்சுதலின் மாட்சி' என்ற னர் அத்தோழர்.

''உஹதுடைய நாளன்று அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்கள் அம்புக் கூட்டையே என் முன் கொட்டி,

اِرْمِ اَيُّهَا الْغُلَامُ الْحَزَوَّرُ

''வீசுவீராக, வாலிபக் காளையே! விடாது அம்புகளை வீசுவீராக. என் தந்தையும் தாயும் உமக்கர்ப்பணம்'' எனக் கூறிய வண்ணம் ஒவ்வொன்றாக எடுத்துக் கொடுத்த வண்ணமே இருந்தார்கள்'' என ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களே அறிவித்திருக்கிறார்கள்.

உஹதுப்போரையடுத்து இரண்டாண்டுகளுக்குப் பின் நடைபெற்றது அகழ்ப் போர். திரண்டு வந்த பதினாயிரம் எதிரிகளிடமிருந்து மதீனாவைக் காக்க சுற்றிலும் அகழ் தோண்டப்பட்டிருந்தது. அவ்வகழினையும் தாண்டி வந்த ஒரு வீரன் தம் வில் வீச்செட்டும் வட்டத்திற்குள் வந்து விடக் கண்டு ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் தங்களின் வில்லை வளைத்தார்கள். தன் உடலை முழுமையாகவே கவசத்தினால் போர்த்தியிருந்த அவ்வீரன் மீது அம்பைச் செலுத்த இடம் தேடிக் கொண்டிருந்த தம் தோழரை நோக்கி பெருமான் நபி (ஸல்) அவர்கள், ''ஸஅதே! நீர் அம்பை எய்வீராக'' எனப் பணித்தார்கள்.

''என் குறியிலிருந்து தப்பிக்க அவன் தன் கேடயத்தை வயிற்றுக்குமேல் முகத்திற்கு நேராகவும் வயிற்றுக்குக் கீழா

கவும் மாறி மாறி உயர்த்துவதும் தாழ்த்துவதுமாகவே இருந்தான். அவன் கரங்கள் சற்றே ஓயக் கண்டு நான் என் அம்பைச் செலுத்தி விட்டேன். அது குறி தப்பாமல் அவன் கண்களில் பாய்ந்து அவன் துடிதுடித்து விழக் கண்டு அண்ணலார் (ஸல்) அவர்கள் கலகலவெனச் சிரித்தார்கள். அவர்கள் சிரிக்கக் காரணம் என் குறியிலிருந்து தப்பிக்க அவன் மேற்கொண்ட பிரயத்தனங்கள் பலன் தராமல் போனதே''—என ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் அறிவித்தார்கள்.

மக்க நகரம் முஸ்லிம்களால் வெற்றி கொள்ளப்பட்ட வரையிலான எல்லாப் போர்களிலுமே ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் பங்கேற்றுள்ளார்கள். அதன் பின் நடைபெற்ற ஹுனைன் போரிலும் அவர்கள் கலந்து கொண்டார்கள். ஆனால் அண்ணலார் (ஸல்) அவர்கள் தம் உலக வாழ்வில் இறுதியாகச் செய்த 'விடைபெற்ற ஹஜ்'ஜில் மட்டும் அவர்கள் கலந்து கொள்ள முடியாதாகி விட்டது. ஹிஜ்ரி 10-ம் ஆண்டில் அண்ணலார் (ஸல்) அவர்கள் மதீனாவிலிருந்து ஹஜ்ஜுக்காகப் புறப்பட்டபோது அவர்களோடேயே ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களும் புறப்பட்டே வந்தார்களாயினும் மக்கா வந்தபின் நோய்வயப்பட்ட அவர்கள் பயணந்தொடர முடியாமல் மக்காவிலேயே தங்கிவிட நேர்ந்தது. நடமாடும் சக்தியை முற்றிலும் இழந்து படுக்கையிலாகி விட்ட அவர்களை மக்காவிலேயே பிரிந்து அண்ணலார் (ஸல்) அவர்கள் புறப்பட்டுச் சென்றார்கள். ஆயினும் ஹஜ்ஜின் கடமைகளை நிறைவேற்றிய வண்ணம் மினாவிலிருந்தே அன்றாடம் நகர் சென்று திரும்புவோராயிலாக தம் தோழரின் உடல் நிலை பற்றி அண்ணலார் (ஸல்) அவர்கள் வினவித் தெரிந்தவண்ணமேயிருந்தார்கள்.

ஹஜ்ஜின் கடமைகளை முடித்து மக்கா திரும்பிய மாநபி பெருமான் (ஸல்) அவர்கள் தங்களின் தோழரைச்

சந்திக்க விரைந்தார்கள். அவர்களைக் கண்டதுமே ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்களின் கண்கள் மடையென நீரைச் சொரிந்தன. மரணத்தின் வாசலே தமக்குத் திறந்து கொண்டதாக அவர்கள் எண்ணுமளவு நோய் அவர்களை வருத்திவிட்டிருந்தது. பெருமானார் திருநபி (ஸல்) அவர்களின் தோழமையை ஏற்று, பிறந்த பொன்னகரையும் மக்களின் உறவையும் துறந்தபின் உருண்டோடி விட்டிருந்த பத்தாண்டுகால இடைவெளியில் அவர்களின் உயிரும் உணர்வுகளனைத்தும் மதீனாவின் மண்ணோடு ஒன்றிப் போயிருந்தன.

அகழ்ப் போர்ச் சூழலில் நடைபெற்றதாக அன்னை ஆயிஷா (ரலி) அவர்களால் அறிவிக்கப்படும் ஒரு சம்பவம் அண்ணலார் (ஸல்) அவர்களின்பால் ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்கள் கொண்டிருந்த அன்புக்கும் அக்கறைக்கும் ஆதாரமாக விளங்குகிறது. அப்போதைய ஓர் இரவில் சிறு துயிலுக்கிடையே கண்விழித்த நாயகத் திருமேனி (ஸல்) அவர்கள் அச்சமயம் தம் குடிலின் வாயிலில் எவரேனும் காவல் மேற்கொண்டால் நலமே என நினைத்தார்கள். அதே சமயம் வாள் உரசப்படும் ஒலி அவர்களுக்குக் கேட்டது. 'யார் அங்கே?' என அவர்கள் குரல் கொடுத்தார்கள். 'ஸஅது இப்னு அபீவக்காஸ்' என விடை கிடைத்தது. 'ஏன் வந்தீர் இந்த அகால நேரத்தில்?' எனப் பெருமானார் (ஸல்) அவர்கள் வினவ ''பெருமானே! இருளின் அடர்த்தி என் மனதை உளைத்தது. ஸஅதின் உயிரைவிட ஓராயிரம் மடங்கு உயர்வான என் ஏந்தலின் உயிருக்குக் காவல் நிற்கவே வந்தேன்'' என விடை தந்தனர் அத்தோழர்.

அதே ஆண்டில் மரணமுற்ற முஹாஜிர் தோழர் ஹழ்ரத் ஸஅது இப்னு கூலா (ரலி) அவர்களின் உடலை மக்கத்து மண்ணில் அடக்க நேர்ந்த போது அண்ணலார் (ஸல்) அவர்கள் கொண்ட மனக்கவலை பற்றிய செய்தியும் ஹழ்ரத்

ஸஅது (ரலி) அவர்களுக்கு கிட்டியிருந்தது. ஒருக்கால் தாமும் இப்போது இங்கேயே மரணமடைய நேர்ந்திடுமானால்.........! எந்தத் தலைவரின் உறைவிடம் உலகத்தின் முழுப்பரப்பையும் விட உயர்வானதென அத் தோழர்களால் உணரப்பட்டிருந்ததோ அந்த உத்தமரின் வாழ்விடத்தைப் பிரிந்து வெகு தொலைவில் இனி தம் உடல் நிரந்தரமாகவே பிரிந்து கிடக்கும் என்ற கவலையால் ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்களின் கண்கள் கசிந்ததை காசிம் நபி (ஸல்) அவர்களும் கண்டார்கள்.

''ஸஅதே! உம் கண்களை கலங்கச் செய்யும் கவலை யாது?'' என பெருமான் நபி (ஸல்) அவர்கள் வினவ, ''என் ஏந்தலே! எந்தத் தோழமையை நாடி இம்மண்ணை நிலையாக நான் பிரிந்து வந்தேனோ அந்த மண்ணிலேயே அடங்கப் பெற்றேனாயின் மறுமை நாள் புலரும் வரையிலும் தங்களை விட்டும் தொலைவிலாகி விடுவேனன்றோ'' என்றார்கள் ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்கள். அவர்களின் நெஞ்சத்தில் தங்கள் புனிதக் கரங்களைத் தடவி ''இறைவா! ஸஅதை நலம் பெற்றெழச் செய்தருள்'' என வழுத்திய கருணை நபிகளார் (ஸல்) அவர்கள், ''ஸஅதே! நீர் கவலையுறாதீர். இறைவனின் பேரருளால் நீர் நலம் பெற்றிடுவீர். உம்முடைய கரங்களால் உம்முடைய கூட்டத்தார் பெரும் வெற்றிகளைப் பெறுவதையும் நிராகரிப்போர் பேரழிவைச் சந்திப்பதையும் காணும் வரையும் நீர் உயிர் வாழ்வீர்'' என வாழ்த்தினார்கள். பின்னரும் பெருமானார் (ஸல்) அவர்கள், ''இறைவா! என் தோழர்களின் ஹிஜ்ரத்தை நீ நிரப்பமாக்கி வைப்பாயாக. அவர்களை இங்கு மரணிக்காதிருக்கச் செய்வாயாக'' என இறைஞ்சினார்கள்.

மாநபி (ஸல்) அவர்களிடம் ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்கள், ''பெருமானே! ஒரேயொரு பெண் மகவையே பெற்றுள்ள நான் என்னுடைய உடைமைகளில் மூன்றிலிரு பங்கை தர்மமாக வழங்கிட தங்களின் அனுமதியை நாடுகிறேன்'' என வினவினார்கள். அண்ணலார் (ஸல்) அவர்கள்

அவ்வாறு செய்ய அவர்களை அனுமதிக்கவில்லை. ''அப்படியாயின் மூன்றிலிரு பங்கை அனந்தரங் கொண்டு ஒரு பங்கையேனும் அறம் வழங்கிடவா?'' என ஆவலுற்ற அத்தோழருக்கு ''ஆம் அதனிலும் குறைவாகச் செய்தாலும் போதும்'' என அனுமதி வழங்கிய அண்ணலார் (ஸல்) அவர்கள், ''உமது சந்ததிகளை உலகில் பிறரின் தேவையற்றவர்களாகவே நீர் விட்டுச் செல்வீராக. வறுமைப்பட்டவர்களாக பிறரிடம் கையேந்தும்படி நீர் அவர்களை விட்டுவிட வேண்டாம். ஸஅதே! அல்லாஹ்வின் பொருத்தத்தை நாடி நீர் செய்யும் ஒவ்வொரு செயலுக்கும் பகரமாக நீர் நன்மைகளை அடையப் பெறுவீர்—அது உம் மனைவியின் வாயிலூட்டும் ஒரு கவளமேயாயினும் சரியே'' என ஆறுதல் வழங்கினார்கள்.

அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் அருளாசி பெற்ற ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் நலம் பெற்றெழுந்து, அதன் பின்னரும் நாற்பத்தைந்து ஆண்டுகாலம் உலகில் வாழ்ந்தனர். ஹழ்லரத் காலித் இப்னு வலீத் (ரலி) அவர்களை யடுத்த இணையற்ற வீரராகத் திகழ்ந்த அவர்களே தங்களது திறன் கொண்டு ஈரானியர்களை வென்று, பாரம்பரியப் பெருமை கொண்ட பாரஸீகக் கிஸ்ராவைப் பரதேசியாக ஓடச் செய்து, மதாயின் நரகக் கருவூலங்களை மதீனாவுக்கனுப்பி வைத்த மாபெரும் தானைத் தலைவராவர்.

பெருமானார் திருநபி (ஸல்) அவர்களின் மறைவுக்குப் பின் ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் கிலாஃபத்தும் நிறைவு பெற்றது. அதற்குப்பின் துவங்கிய கலீஃபா உமர் (ரலி) அவர்களின் ஆட்சி காலமே அண்ணலார் (ஸல்) அவர்கள் முன்னறிவித்தபடி, ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களின் புகழ் தழைக்கச் செய்த பொற்காலமாக விளங்கியது. ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் கிலாஃபத்தின் போது 'ஹவாஸின்' கூட்டத்தாரின் அதிகாரப் பொறுப்பேற்றுச்

சென்றிருந்த ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்கள், ஹழ்ரத் உமர் (ரலி) அவர்கள் கிலாஃபத்தை ஏற்ற பின்னரும் அங்கேயே தொடர்ந்து இருந்து வந்தனர். மதீனாவிலிருந்து அபூ உபைத் ஃஸக்கஃபீ என்ற தாபஈப் பெரியாரின் தலைமையில் ஈரானிய எல்லையில் போராடச் சென்ற இஸ்லாமியப் படை ஆரம்பத்தில் தோல்வி கண்டு விட்டது. அந்தத் தோல்வியால் இஸ்லாமியப் படையை பற்றிய இளப்ப எண்ணங்கள் கொண்ட ஈரானியர்கள் முஸ்லிம்களை மேலும் நிர்மூலமாக்கிட முயற்சிகளை மேற்கொண்டிருந்த செய்தி மதீனாவை எட்டியது. அவர்களின் முயற்சிகளை முறியடிக்க ஒரு பெரும் படையைத் திரட்டிய கலீஃபா உமர் (ரலி) அவர்கள் தாங்களே அப்படைக்குத் தலைமை ஏற்றுச் செல்ல எண்ணினார்கள். மற்ற தோழர்களோ மனமொப்பாது, கலீஃபா அவர்களை மதீனாவை விட்டும் வெளிச் செல்ல வேண்டாமெனத் தடுத்தார்கள். ஹழ்ரத் காலித் ஸைஃபுல்லாஹ் (ரலி) அவர்களும் ஸிரியப் போர்க் களங்களில் உலவிக் கொண்டிருந்த நிலையில் ஈரானியர்களைச் சந்திக்க வல்ல தளகர்த்தர் எவர்தான் உள்ளார் எனக் கவலை கொண்ட கலீஃபா அவர்களின் கவனத்துக்கு ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்களே நினைவூட்டப் பட்டனர். உடனடியாகவே அவர்களை மதீனா வரவழைத்த கலீஃபா அவர்கள், படைத் தலைமையை அவர்களிடம் ஒப்படைத்து ஈரானியப் போர்க்களத்துக்கு அனுப்பி வைத்தார்கள்.

ஹழ்ரத் ஸஅது இப்னு அபீவக்காஸ் (ரலி) அவர்கள் பொறுப்பேற்ற மிகக் குறுகிய காலத்துக்குள் இஸ்லாமியப் படைகள் ஈரானிய மண்ணில் பரவி நின்று பாரஸீக அரச பரம்பரைக்கே ஒரு முடிவைக் கண்டு விட்டன. காதிஸிய்யாப் போர்க்களத்தில் ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்கள் அடியெடுத்து வைத்த அன்றே ஈரானியப் பேரரசுக்கு இறப்பின் வாசலைத் திறந்து வைத்து விட்டார்கள் எனலாம்! உலகத்தின் மிகக் கீழான மக்களாக அரபிகளைக் கண்டிருந்த பாரஸீகர்களின் கனவுகள் அதற்குப் பின் பொய்த்துப்

போயின. விரோதங்களினாலும் சொந்தக் குரோதங்களினா லும் தங்களைத் தாங்களே எதிரிகளிடம் பலவீனப்படுத் திக் காட்டிவிட்டிருந்த அவ்வரபிகளிடையே அருளாகப் பிறந்திட்டிருந்த அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் ஊட்டிய உணர்வுகளும் பழக்கப் பண்பாடுகளும் பெரும் புதிர்களாய் வெளிப்பட்டன ஈரானியர்களின் கண்களின் முன்னே.

காதிஸிய்யாப் போர்ச் சமயத்திலும் தூர்ப்பேறாக ஹழ் லரத் ஸஅது (ரலி) அவர்கள் நோய்வயப்பட்டு விட்டனர். வேனற் புண்களின் வேதனையால், நடக்கவும் நிற்கவும் கூட முடியாதாகி விட்ட நிலையிலும், உயர்ந்த ஓர் இடத்தில் தலையணையைத் தம் நெஞ்சோடணைத்து குப்புறப்படுத்த வண்ணமே படைக்களத்தைத் தம் பார்வையுள் வளைத் திருந்த அம்மஹாத் தளபதி, கிழக்கத்திய பேரரசனாய் விளங் கிய கிஸ்ராவின் படையை நடத்தி வந்த மாவீரன் ருஸ்தத மின் மமதையை மூன்றே நாட்கள் போரில் சிதைத்தழித் தார்கள். அதற்குப் பின் முஸ்லிம்களை மிகைக்க ஒரு வாய்ப் பை ஈரானியர்கள் பெற முடியாமலே ஆகிவிட்டது.

காதிஸிய்யாவில் கிடைத்த தோல்விப் பரிசைக் கை விடாது அணைத்தவண்ணம் ஈரானியர்கள் பாபிலோனைத் தாண்டி ஓடிக் கொண்டிருந்தனர். ஏறத்தாழ ஒரு மாத காலம் காதிஸிய்யாவிலேயே தங்கி உடல் நலம் பெற்ற ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் தம் படையினருடன் தேடிச் சென்றனர் ஈரானியர்களை.

விரண்டோடிய ஈரானியர்கள் டைக்ரஸ் நதியைக் கடந்து, முஸ்லிம்கள் தங்களைத் தொடர்ந்து வராதபடி, அந்நதியைக் கடக்க அமைக்கப்பட்டிருந்த பாலத்தையும் தகர்த்துச் சென்று விட்டிருந்தனர். நதிக்கரையை அடைந்த முஸ்லிம்களின் படை திகைத்து நின்றது. ஆனால், அவர் களின் தலைமையை ஏற்றிருந்த ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களின் செவிகளில்.........

''மதாயின் நகரத்தின் வெண்மாளிகைகள் எனக்குக் காட்டப்பட்டன,

''பாரஸீகக் கருவூலத்தின் திறவு கோல் என்னிடம் தரப்பட்டது,

''கிஸ்ராவின் பேரரசு துண்டந் துண்டமாகி அழியும்,

''அவனுடைய பொற்கடையங்களை, ஸுராக்கா! இதோ உம் புயங்களில் மின்ன இப்போது நான் காணு கிறேன்.''

—என்றெல்லாம் மாநபி பெருமான் (ஸல்) அவர்கள் அவ்வப்போது மொழிந்த நன்மாராயங்கள் ரீங்காரமிட்ட வண்ணமேயிருந்தன! தயக்கம் அவர்களிடம் தலை காட்டவே மறுத்து விட்டது! படையினரின் முன்னே பரணி எழுப்பினார்கள் அத்தளபதி!

''பொய்மையும் புரட்டையும் புனைந்து பாமர மக்களை நெருப்புக்கு முன் மண்டியிடும் பரிதாப நிலைக்கு மாற்றி வைத்திருக்கும் இந்த சாஸானியர்கள் என்ன நினைத்துக் கொண்டனர் எம்மை! மக்களின் இரத்தத்தை உறிஞ்சியே தாங்கள் சேர்த்து வைத்துள்ள கருவூலங்களைக் கடத்திச் செல்ல முனைந்தே பாலத்தைத் தகர்த்து நம் பாய்ச்சலுக்குத் தடையிட்டு விட்டதாக அவர்கள் கனவு கண்டுள்ளனர். இஸ்லாமிய வீரர்களே! அல்லாஹ்வின் படையினரே! நம் நம்பிக்கை அருளாளன்—அன்புடையோன் மீதேயன்றி பாலத்திலும் படகிலும் அல்ல என்பதை இவர்கள் அறிந்திருக்க முடியாது. உங்களின் வைரிகள் ஆற்றின் மறுகரையில் அடைக்கலம் புகுந்திருக்கையில் அடர்ந்தேறி அவர்களைச் சந்திக்காது நீங்கள் சிரமத்தைப் பொருட்படுத்தித் தயங்கி நிற்பீர்கள் என அவர்கள் கற்பனை செய்து விட்டனர். இவ்வுலக சுகத்தைவிட அல்லாஹ்வின் வைரிகளை அழிப்பதிலேயே பேரின்பம் காண்பவன் நான் என்பதை இப்போது அவர்கள் காணச் செய்வேன்—என உரையாற்றிய ஹூஜ்லரத் ஸஅது (ரலி) அவர்

களின் உணர்ச்சி கண்டு ஊக்கம் பெற்ற படைவீரர்கள் ஒருவர் தப்பாமல் தங்கள் தானைத் தலைவரின் ஆணை யேற்று நீந்தியே ஆற்றைக் கடக்கச் சித்தமாயினர். குதிரைப் படையினரும், ஒட்டகைப் படையினரும், காலாட் படையினருமாக முப்பதினாயிரம் பேர்கள் நிலத்தின் மீது பாய்ந்து செல்வதேபோல் நீரின் மேல் வரக் கண்ட பாரஸீகர்கள் 'பூதப் படைகள் வருகின்றன' என அலறியடித்த வண்ணம் ஓடலாயினர்.

இஸ்லாமியப் படையினரில் எவருக்கும் எந்த இழப்புமின்றி ஆற்றைக் கடந்து கரைசேர்ந்தனர். நபிமணித் தோழர் ஒருவரின் ஒரேயொரு நீர்க்குவளை மட்டும் தண்ணீரில் விழுந்து அதுவும் பின்னர் மிதந்து கரை சேர்ந்த காட்சி அவர்கள் மீது சொரியப்பட்ட அல்லாஹ்வின் பரிபூரணப் பேரருளுக்கு சாட்சியமாக விளங்கியது-என ஹழ்ரத் உஃஸ்மான் னஹ்தி என்ற தாபஈப் பெரியார் அறிவிக்கின்றனர்.

மமதை கொண்ட ஒரு பாரம்பரியம் விரண்டோட, மயான அமைதி குடிகொண்ட மதாயினின் பேரழகை ரசித்தபடி எதிர்ப்பவர் எவருமின்றி கிஸ்ராவின் வெண்மாளிகையில் நுழைந்த அம்மஹாத் தளபதி, தரணி வாழுமளவும் தம் புகழ் தழைக்கச் செய்த மாபெரியவனைத் துதித்து சிரம் பணிந்து வணங்கினார்கள். அவர்களின் திருவாய் ஏகவல்லவனின் சொல்லை ஓதிக்காட்டியது.

كَمْ تَرَكُوا مِنْ جَنّٰتٍ وَّعُيُوْنٍ ۝ وَّزُرُوْعٍ وَّمَقَامٍ كَرِيْمٍ ۝
وَّنَعْمَةٍ كَانُوْا فِيْهَا فٰكِهِيْنَ ۝ كَذٰلِكَ وَاَوْرَثْنٰهَا قَوْمًا اٰخَرِيْنَ ۝

"அவர்கள் எத்தனையோ சோலைகளையும் நீரருவிகளையும் (எவ்வளவோ) விவசாயங்களையும் மேலான வீடுகளையும் விட்டுச் சென்றனர். அவர்கள் இன்பம் அனுபவித்துக் கொண்டிருந்த (எத்தனையோ) சுகானுபவப் பொருள்

களையும் விட்டுச் சென்றனர். இவ்வாறே — (நடைபெற்றது.) அவற்றை வேறு ஜனங்கள் அனந்தரங் கொள்ளச் செய்தோம்.'' (44 : 25 to 28)

மதாயின் நகரத்தின் கருவூலங்கள் இப்போது முஸ்லிம்களின் உடமையாயின. வீரர்களிடையே அவை பங்கிடப்பட்டதோடு ஐந்திலொரு பாகம் மதீனாவுக்கும் அனுப்பி வைக்கப்பட்டது. கலீஃபா உமர் (ரலி) அவர்களின் செவிகளுக்கு வெற்றிச் செய்தியோடு பாலைகளையும் காடுகளையும் கடந்து பரந்த நீர்ப்பரப்பையும் அடக்கிப் படை நடத்திய தம் தானைத் தலைவரின் வெற்றிச் செய்தியும் கிடைத்து அவர்களைப் பரவசங் கொள்ளச் செய்தன. இராக்கியப் பெரு நிலப்பரப்பு முழுமைக்கும் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களையே பிரதம சேனாதிபதியாக உயர்த்திப் புகழ் சிறக்கச் செய்தார்கள் கலீஃபா. இனி படைத்தளங்களுக்கு தம் உபதளகர்த்தர்களையே அனுப்ப அச்சேனாதிபதி கலீஃபா விடமிருந்து கட்டளை பெற்றார்கள். ஏனெனில் வெல்லப்பட்ட பூமிகளில் நிர்வாகச் சீர்திருத்தங்களையும் சமூக வாழ்க்கைக்குரிய புதிய ஒழுங்கு முறைகளையும் கவனிக்கவேண்டிய அவசியமும் இருந்தது.

''இனி உம் கவனத்தை மக்களின் வாழ்க்கைத் தலத்தில் செலுத்துவீராக. எல்லாக் காரியங்களையும் விட மிக முக்கியமாக தொழுகையை நிலை நிறுத்துவீராக. தொழுகையை நிலை நிறுத்தியவன் தன் மார்க்கத்தைப் பாதுகாத்துக் கொள்வான். அதனை விட்டவன் படிப்படியாக மார்க்கத்தின் எல்லா வழி முறைகளையும் விட்டு விடுவான்'' என கலீஃபா அவர்களின் அறிவுரை பெற்ற அப் பெருந்தோழர் படைத்தவனின் பெயர்கூற நாதியற்று, துதித்து வணங்குவதற்கெனப் பெரும் பெரும் நெருப்புக் குண்டங்கள் படைக்கப்பட்டிருந்த ஈரானிய மண்ணில் இனி வணங்குவதற்குரியவன் 'அல்லாஹ் ஒருவனே' என முழங்க முதற் பள்ளியை எழுப்பினார்கள்.

வெற்றிகள் மேலும் தொடர படைவீரர்கள் மதாயினி லேயே தங்கி வாழ வேண்டியிருந்தது. அப்படி தங்கி வாழ முற்பட்டவர்களுக்கு மதாயினின் தட்பவெப்பநிலை ஏற்ற தாயிருக்கவில்லை. இச் செய்தி கிடைத்து கலீஃபா உமர் (ரலி) அவர்கள் தம் வீரர்களின் உடல் நிலை ஏற்கத் தக்க வாறான பூமியை ஆய்ந்து அப்பிராந்தியத்திலேயே புதிய தொரு நகரை நிர்மாணிக்கப் பணிந்தார்கள். அதன்படியே ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் 'ஹீரா' நகருக்குச் சற்றுத் தொலைவில் 'புராத்' நதிக்கு மேற்கே 'கூஃபா' நகரத்தை நிர்மாணித்தனர். ஏறத்தாழ நாற்பதினாயிரம் பேர்கள் தங்கி வாழ வசதியாக நிர்மாணிக்கப்பெற்ற அதனையே அப்பிராந்தியத்தின் தலைநகராக்கி அதன் ஆளுநராகவும் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களே பொறுப்பளிக்கப் பெற் றனர். மக்களில் பல கூட்டத்தார் ஆங்காங்கே தாங்கள் இறைவனை வணங்க தனித்தனியே பல பள்ளிகளை எழுப் பினராயினும் அவை அனைத்துக்கும் நடு நாயகமாக ஹழ் லரத் ஸஅது (ரலி) அவர்கள் தம் பொருளால் எழுப்பிய பெரும் பள்ளி ஒரே சமயத்தில் ஐம்பதினாயிரம் பேர் நின்று தொழக் கூடியதாயிருந்தது.

ஈரானியப் பகுதியில் மதாயினின் வீழ்ச்சிக்குப் பின்ன ரும் முஸ்லிம்கள் வெற்றிமேல் வெற்றிகளாகப் பெற்றுச் சேர்த்தார்கள். கலீஃபா அவர்களின் கட்டளைப்படி அவற் றுக்கெல்லாம் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள், தம் துணைவர்களையே முன்னிருத்தி, தாங்கள் கூஃபாவிலிருந்த படியே மக்களின் வாழ்க்கை நிலையைச் செம்மைப் படுத் தலானார்கள். அவர்களின் நிர்வாகத்தில் மக்களிடையே நலமும் வளமும் செழித்தன.

கலீஃபா உமர் (ரலி) அவர்களின் ஆட்சியின் எல் லையை ஏறத்தாழ இருபத்து இரண்டரை லட்சம் சதுர மைல்கள் பரப்பளவுக்கு விரியச் செய்த நாற்பெரும் தள நாயகர்களில் ஹழ்லரத் ஸஅது இப்னு அபீ வக்காஸ் (ரலி)

அவர்களும் ஒருவர். பரந்த அந்நிலப்பரப்பை நிர்வகிக்க கலீஃபா அவர்களால் தெரிந்தெடுக்கப் பெற்ற எண்பெரும் ஆளுநர்களிலும் ஒருவரே அவர்கள். கிழக்கத்திய பூமி பாரம்பரியமாக தங்களுக்கே சாஸ்வதமெனக் கற்பனை செய்து விட்டிருந்த சாஸானியர்களின் கனவுகளைத் தவிடு பொடியாக்கி விட்ட மாபெரும் தானைத் தலைவராக ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் ஒளிர்கிறார்கள்! அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் முன்னறிவித்த அரிய வெற்றிகளைச் சேர்க்க அவர்கள் கொண்டிருந்த மன உறுதியும் நெஞ்சத் துணிவும் தியாக உணர்வும் தலைமுறை தலைமுறையாகப் புகழ்ந்து மகிழப்பட்டன.

யஸ்தஜிர்தால் ஏவப்பட்ட பாரஸீகத் தளபதி ருஸ்தும் பாரஸீகர்களின் பாரம்பரியப் பெருமையில் மதங் கொண்டு தன் பராக்கிரமத்தை பீற்றி அச்சுறுத்தியும் ஆசை காட்டியும் எழுதிய கடிதத்துக்குப் பதிலாக ''எத்தனை பெரிய வல்லமையாயினும் அதற்கு முன் பணிய நாங்கள் இன்று அறிய மாட்டோம். ஒன்று நாங்கள் உங்கள் பூமிகளை அனந்தரங் கொள்வோம். அல்லது கொல்லப்படுவோம். இந்த இரண்டையும் தவிர்த்து மூன்றாவதாக எந்த விளைவும் தோன்றப் போவதில்லை. ஆனால் சரிகை, பட்டாடைகளை அணியும் ஆசையோ, அம்பர் கஸ்தூரிகளைப் பூசிச் சுகிக்கும் பழக்கமோ எங்களுக்கில்லை. எங்கள் உணவுகளைக் கொண்டு பெருமைப்படவும் எதுவும் இல்லை. எனவே அச்சுறுத்தல்களையும் ஆசை வார்த்தைகளையும் ஒதுக்கித் தள்ளி இஸ்லாத்தையோ ஜிஸ்யாவையோ ஏற்க முடிவு காணுவீராக.'' என்று எழுதிய ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் தம் ஓலையின் முடிவில் ''மதுவின் மீது நீங்கள் கொண்டுள்ள பிரீதியைவிட அதிகமாகவே மரணத்தின் மீது நாங்கள் கொண்டுள்ளோம்'' என்றெழுதிய வரிகளை பாரஸீகப் பெருங்கவிஞர் ஃபிர்தவ்ஸீ தம் 'ஷாஹ் நாமா'வில் பாடிப் பரவசமடைந்தார்.

دشت تو دشت ہیں دریا بھی نہ چھوڑے ہم نے
بحر ظلمات میں دوڑا دیئے گھوڑے ہم نے

அடர்ந்த காடுகளென்ன,
ஆழ்கடலைக் கண்டும் நாங்கள்பின்னடையவில்லை.
அந்தகாரச் சமுத்திரங்களின் மீதும்
நாங்கள் இவர்ந்தே எங்களின் புரவிகளை விரட்டிச் சென்றோம்.

என பதிமூன்று நூற்றாண்டுகளுக்குப் பின் பிறந்த சிந்தனைச் சிற்பி அல்லாமா இக்பால் (ரஹ்) முந்தைய மூதாதையரின் ஆற்றலை நினைவு கூர்ந்தார்.

போர்ச் சாகஸங்களில் உறுதி நிறைந்தவர்களாக விளங்கியதைப் போன்றே ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்கள் நிர்வாகத்திலும் கண்டிப்புடையவர்களாக விளங்கினார்கள். புதிய மக்களிடையே இஸ்லாமிய நடைமுறைகளை, வணக்க வழிமுறைகளை நிலை நாட்டுவதில் அதிகம் கவனம் செலுத்தினார்கள். நலமும் வளமும் சூழ்ந்த நிலையிலும் நன்றி மறவாதவர்களாக, மக்கள் இறையச்சமுடையவர்களாகத் திகழவேண்டும் என விழைந்த அவர்களின் கண்டிப்பினால் பொறாமை எண்ணங் கொண்டவர்களும் தோன்றினர் மக்களிடையே! அத்தகையோர் ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்கள் மீது பொய்யான குற்றச்சாட்டுகளைச் சுமந்து மதீனாவில் கலீஃபா அவர்களின் முன் சமர்ப்பித்தனர்.

ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்கள் தொழுகையையும் கூட முறையாக நிறைவேற்றுவதில்லை என கூஃபாவின் குண்டுணிகள் கூறக் கேட்டு கலீஃபா உமர் (ரலி) அவர்கள் வியப்படைந்தார்கள். அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்களோடு கொண்டிருந்த உறவு நெருக்கத்தோடு மட்டுமின்றி, மிக ஆரம்ப காலத்திலேயே அவர்களின் கரம்பற்றி,

பதிமூன்றாண்டு காலம் மக்காவிலும் பதினோராண்டு காலம் மதீனாவிலுமாக, ஏறத்தாழ கால் நூற்றாண்டுகால நிரப்ப மான நாயகத் தோழமையைப் பெற்றிருந்த ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களைப் பற்றிய மிக உயர்வான எண்ணமே கலீஃபா உமர் (ரலி) அவர்கள் கொண்டிருந்தார்கள். எனினும் அவர்கள் குற்றச்சாட்டுகளை உதாசீனம் செய்துவிடவில்லை. ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களையே அழைத்தும் அது பற்றி வினவினார்கள். ''அமீரல் முஉமினீன்! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எவ்விதம் தொழுவிக்கக் கண்டேனோ அவ்விதமே தொழுவித்தேனேயன்றி எதையும் நான் கூட்டவோ குறைக்கவோ இல்லை என்பதற்கு அல்லாஹ் ஒருவனையே சாட்சியாக்குவேன்'' என ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் கூறக்கேட்டு ''உம்மைப் பற்றிய என்னுடைய நம்பிக்கையும் அவ்வாறேயுள்ளது'' என்றார்கள் கலீஃபா உமர் (ரலி).

அச்சமயம் மாநபித் தோழர் ஹழ்லரத் அம்ரு இப்னு மஅதீகரப் (ரலி) அவர்கள் கூஃபாவிலிருந்து மதீனா வந்திருந்தனர். கலீஃபா அவர்கள் அவரிடம் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களைப் பற்றி வினவினார்கள். அவரோ, ''பிறப்பினால் அரபிகளில் மேலான ஒரு பாரம்பரியத்தைச் சார்ந்த அவர் அறம் வழங்குவதில் இடைப்பட்ட நிலையைக் கையாளுகிறார். மறம் விளைவிப்பதிலோ புலிக்கு நிகரானவராகத் திகழ்கிறார். அவர் அள்ளிக் கொடுப்பதில் குறைகள் காணப்படுவதில்லை. அன்பிலும் கனிவிலுமோ அவர் எங்களுக்கு பெற்ற தாயைப் போலவே தோன்றுகிறார். அவரிடம் நாங்கள் எக்குறையையும் காணவில்லை'' எனப் புகழ்ந்தனர்.

கலீஃபா அவர்கள் சில நபிமணித் தோழர்களை கூஃபாவுக்கனுப்பி அங்கும் பல்வேறு பள்ளிகளில் தொழுகைக்காகக் கூடும் மக்களிடையே ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களைப் பற்றிய கருத்தறியப் பணித்தார்கள். நபிமணித் தோழர்

கள் எங்கெங்கே விசாரணைகள் மேற்கொண்டார்களோ அங்கெல்லாம் மக்கள் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களைப் பற்றிய பெருமையும் புகழும் மிக்க நற்செய்திகளையே கூறினார்கள்.

எனினும் கலீஃபா அவர்கள், பெருமான் நபி (ஸல்) அவர்களின் திருத்தோழரை—தம் மரியாதைக்குரிய ஆளு நரை பூசலெண்ணங் கொண்டவர்களிடையே விட்டு வைக்க வில்லை; மதீனாவுக்கே அழைத்துக் கொண்டார்கள். ஆனால் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களைப் பற்றி கலீ ஃபா உமர் (ரலி) அவர்கள் கொண்டிருந்த உயர்வான மதிப்பு கலீஃபா அவர்களின் மரண காலம் வரையிலும் மாறவே இல்லை.

அண்ணலார் (ஸல்) அவர்களின் ஹதீஃஸ்களை எவரும் புதிதாக வெளியிடுவார்களானால் அவ்வாறே அண்ணலார் (ஸல்) கூறினார்கள் என்பதற்கான ஆதாரத்தைச் சமர்ப் பிக்க கட்டளையிடுவார்கள் கலீஃபா. ஆனால், அவர்களின் மகனார் ஹழ்லரத் அப்துல்லாஹ் (ரலி) அவர்களே ஒரு தாள், 'ஒழ்லூ'வின்போது மோஜாவின் மீது நீர் தடவி மஸ்ஹு செய்வது பற்றிய ஒரு ஹதீஃஸ ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் அறிவித்ததாகக் கூறி அது சரிதானா என வினவியபோது 'ஸஅது உம்மிடம் ஒரு ஹதீஃஸக் கூறுவாரானால் அதனைப் பற்றி நீர் மற்றவர்களிடம் ஐயந்தெளிய அவசியமில்லை' எனக் கூறிவிட்டார்கள். கலீ ஃபா அவர்கள் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களை எத்த கைய முஹத்திஃஸாக மதித்தார்கள் என்பதற்கான அடை யாளம் அது.

மாநபித்தோழர் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் மீது கலீஃபா உமர் (ரலி) அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கைக் கும் நல்லெண்ணத்திற்கும் அந்திமகாலத்தில் அவர்களின் நாவழி வெளிப்பட்ட நல்லுரையே சாட்சியளிக்கிறது. தமக்குப் பின் கிலாஃபத்தை ஏற்க அறுபெரும் நபி மணித்

தோழர்களை தகுதியுடையவர்களாக அறிவித்த கலீஃபா அவர்கள் அவ்வறுவருள் ''பதவி ஸஅது (ரலி)க்குக் கிடைத்து விட்டால் அவர் அதற்கு மிகப் பொருத்தமான வரே. அவ்வாறின்றி வேறெவரும் கலீஃபாவாகத் தேர்ந் தெடுக்கப்பட்டால் அவர் ஸஅதிடமிருந்தும் ஒத்துழைப் பைப் பெறட்டும்'' எனக் குறிப்பிட்டிருந்தார்கள்.

ஒருக்கால் மற்றெவரும் கலீஃபாவாகத் தேர்ந்தெடுக்கப் படுவாராகில் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களை மீண்டும் கூஃபாவுக்கே ஆளுநராக்கி அனுப்ப வேண்டும் எனவும் கலீஃபா உமர் (ரலி) அவர்கள் தம் இறுதி நேரத்தில் அறி வுறுத்திப் பிரிந்தார்கள். அதன்படியே அடுத்து கலீஃபா வாக வந்த ஹழ்லரத் உஃஸ்மான் (ரலி), அவர்களை மீண்டும் கூஃபாவின் ஆளுநராக அனுப்பி வைத்தார்கள். ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் அப்பொறுப்பில் நீண்ட நாட்கள் தங்கி இருக்கவில்லை. அக்காலை கூஃபாவின் பொருளகக்காப்பாளராகப் பொறுப்பேற்றிருந்த ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்களுடன் ஏற் பட்ட கருத்துப் பிணக்கால் பதவி துறந்து மதீனா திரும்பி விட்ட ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் அதுமுதல் மதீனா விலேயே தங்கி வாழலானார்கள்.

'ஸபாஈ' கலகக்காரர்கள் மதீனாவைச் சூழ்ந்த காலத் தில் ஒரு வெள்ளிக்கிழமை பள்ளியில் கலீஃபா உஃஸ்மான் (ரலி) அவர்கள் தாக்கப்பட்டார்கள். அச்சமயம் கலகக் காரர்களோடு போராடி அவர்களை வெளியேற்றி கலீஃபா உஃஸ்மான் (ரலி) அவர்களை வீடு சேர்த்த நபி மணித் தோழர்களில் தலைமையானவர்கள் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களே. இறுதியாக அக்கலீஃபா அவர்கள் அநீதியாகக் கொல்லப்பட்டது கண்டு மனச்சோர்வு கொண்ட இவர்கள் அதற்குப்பின் அரசியலை விட்டே பூரணமாக ஒதுங்கி விட்டார்கள்.

கலீஃபா அவர்களின் படு கொலைச்குப் பின் கிலாஃபத்தை ஏற்க ஒருவரைத் தேடி மக்கள் பரிதவித்த சமயம் இவர்களின் மகன் ஆமிர் இவர்களை அணுகி, 'கிலாஃபத்தின் சுமையை வீரத்தோடும் விவேகத்தோடும் தாங்கி சமூகத்தை வழி நடத்த ஒரு வல்லவரை மக்கள் தேடிக் கொண்டுள்ளனர். அந்தத் தகுதி தங்களுக்கே......' எனக் கூறி முடிக்குமுன்பாகவே தங்களின் கரத்தால் அவருடைய வாயைப் பொத்திய ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள், "போதும் அந்த யோசனையை எனக்குக் கூற வேண்டாம்' எனத் தடுத்து விட்டார்கள்.

''என் தந்தையார் தங்களின் ஒட்டகைகளைப் பராமரித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களின் மகனார், என் உடன் பிறந்த உமர் அவ்வழியாக வந்தார். அவரைக் கண்டு விட்ட என் தந்தை ஸஅது (ரலி), 'இந்தச் சவாரியை விட்டும் இறைவனிடம் பாதுகாப்பு தேடுகிறேன்' என்றார்கள். உடனே தம் புரவியை விட்டும் கிழிறங்கி விட்ட என் சகோதரர் ஆட்சியையும் அதிகாரத்தையும் நாடி மற்றவர்கள் போராடிக் கொண்டிருக்க புரவிகளைப் பராமரித்துக் கொண்டிருப்பதே தங்களுக்கழகோ? எனக் கேட்டார். அவரின் நெஞ்சத்தைத் தம் கரத்தால் தட்டிய என் தந்தை ஸஅது (ரலி) அவர்கள் ''வாய் பொத்தி அமைதி கொள் மகனே! மக்களின் போற்றுதலையும் தூற்றுதலையும் பொருட்படுத்தாது தனிமையில் மன நிறைவும், தக்வாவென்னும் பேணுதலும் கொண்ட அடியானை அல்லாஹ் மிக நேசிக்கிறான் என அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டிருக்கிறேன்'' என உபதேசித்தார்கள்''—என்று அவர்களின் மகனார் ஆமிர் இப்னு ஸஅதே அறிவித்தார்.

அவர்களின் உடன் பிறந்தார் மகன் ஹாஷிம் இப்னு உத்பா அவர்களை யணுகி 'இச்சமயம் கிலாஃபத்தை ஏற்க தாங்கள் துணிந்தீர்களானால் தங்களுக்கென உதவ ஒரு லட்சம் வாள்கள் காத்திருக்கின்றன' என அழைத்த போது

''என் உடன் பிறந்தவரின் மகனே! அவற்றுள், நிராகரிப் போரின் புறமேயன்றி முஸ்லிம்களின் புறம் திரும்பாத ஒரே யொரு வாளையே நான் விரும்புகிறேன்'' என ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் அவருக்கு பதிலுரைத்தார்கள் என ஹாபிழ்ள் இப்னு கஃஸீர், அவர்கள் தம்முடைய 'ஹிதாயா வன்னிஹாயா'வில் குறிப்பிடுகிறார்.

''வெகு விரைவில் குழப்பமொன்று தோன்றும். அச்சம யத்தில் படுத்துக் கிடப்பவன் அமர்ந்திருப்பவனை விட, அமர்ந்திருப்பவன் நின்றிருப்பவனை விட, நின்றிருப்பவன் நடந்து கொண்டிருப்பவனை விட மேலானவன்'' என அல் லாஹ்வின் தூதர் அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர் கள் கூற நான் கேட்டேன். ''பெருமானே என் இல்லத்தி னுள்ளும் அக்குழப்பம் புகுந்து என்னைக் கொல்ல தன் கையை உயர்த்துமாயின் நான் என்ன செய்யட்டும்?'' என வினவினேன். ''ஆதமுடைய மகன் (ஹாபீல், தன் உடன் பிறந்தான் காபீல் தன்னைக் கொல்லத் துணிந்த போது பொறுத்துக் கொண்டிருந்ததே) போல் இருந்து கொள்வீராக'' என என் ஏந்தலர் (ஸல்) எனக்குபதேசித் தார்கள்—என மக்களுக்கறிவித்த அம்மாநபித்தோழர் அதற்குப் பின் தம் வாழ்நாளின் இறுதிவரை எந்தக் குழப்பத்திலுமே பங்கேற்காதவர்களாக ஒதுங்கியே இருந் தார்கள்.

ஹழ்லரத் அலீ (ரலி) அவர்கள் கிலாஃபத்தை ஏற்ற போது அனைவருக்கும் முன்னதாக ஹழ்லரத் தல்ஹா, ஸுபைர், ஸஅது (ரலி) ஆகியவர்களின் அங்கீகாரப் பிர மாணமே எதிர்பார்க்கப்பட்டது. ஏனெனில் கலீஃபா உமர் (ரலி) அவர்களால் கிலாஃபத் பதவிக்கு முழுத் தகுதியுடை யவர்களாய் அறிவிக்கப்பட்ட அறுவர் குழுவில் அக்காலை உயிர்வாழ்ந்தவர்கள் அந்நால்வரேயாவார். ஹழ்லரத் தல்ஹா, ஸுபைர் (ரலி) ஆகிய இருவரும் தங்கள் நிபந் தனைகளை விளக்கிப் பிரமாணம் செய்து விட்டார்களா

யினும், ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்கள் அவ்வாறும் செய்யவில்லை. மக்களனைவரும் பிரமாணம் செய்தபின் தாங்கள் செய்வதாகக் கூறி, தங்கள் இல்லக்கதவைத் தாழிட்டுக் கொண்டார்களாயினும், 'என்னைப் பற்றி எந்த சஞ்சலமும் கொள்ள வேண்டாம்' என கலீஃபா அலீ (ரலி) அவர்களுக்கு உறுதி கூறியனுப்பி வைத்த அவர்கள் இறுதிவரை அவ்வுறுதிப்பாட்டின்படியே வாழ்ந்தார்கள். இவர்களை ஹழ்ரத் முஆவியா (ரலி) அவர்கள் தம் பக்கம் ஈர்க்கப் பெரிதும் முயன்றும் தம் முயற்சியில் வெற்றி ஹழ்ரத் முஆவியா (ரலி) பெற்றனரில்லை.

கலீஃபாவாக ஹழ்ரத் அலீ (ரலி) அவர்களை இவர்கள் ஏற்றுக் கொண்ட போதிலும் அரசியலில் மட்டும் இவர்கள் பங்கேற்கவில்லை. ஒட்டகைப் போரில் பங்கேற்க கலீஃபா அலீ (ரலி) அவர்களால் அழைக்கப்பட்டபோதும் ''என் வாள் முஸ்லிம்களுக்கும் நிராகரிப்போர்களுக்கு மிடையில் மட்டுமே ஒளிரட்டும்'' எனக் கூறி இவர்கள் ஒதுங்கி விட்டார்கள்.

மதீனாவிலிருந்து பத்து கல் தொலைவில் உள்ள 'அத்தீக்' என்ற தலத்தில் ஓர் இல்லம் அமைத்து அமைதியாகத் தம் காலத்தைக் கழித்துக் கொண்டிருந்த அப் பெருந்தோழர் 'ஸிப்ஃபீன்' போரிலும் பங்கேற்கவில்லை. கலீஃபா அலீ (ரலி) அவர்களுடையவும் ஹழ்ரத் முஆவியா (ரலி) அவர்களுடையவும் பிரதிநிதிகள் 'அப்ரஹ்'ஹில் சந்தித்து உடன்பாடு காணப் போகிறார்கள் என்ற செய்தி கிடைத்து, முஸ்லிம்களிடையே பிரவாகமெடுத்திருந்த இரத்த வெள்ளத்தை தடைப்படுத்த நிறுவப்படப்போகும் அணையைக் காண ஆவலோடு வந்தார்களாயினும் அம் முயற்சி பயனற்றுப் போனது கண்டு மனச்சோர்வு கொண்டு திரும்பி விட்டார்கள்.

ஆனால் கலீஃபா அலீ (ரலி) அவர்களைப் பெரிதும் மதித்து நேசித்த அவர்கள் அதற்குக் காரணமாக ''கைப

ரின் முற்றுகையின்போது என் ஏந்தலார் (ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வையும் அவன் தூதரையும் அதிகம் நேசிப்பவர். அல்லாஹ்வினாலும் அவனின் தூதராலும் அதிகம் நேசிக்கப்படுபவர்' என அலீ (ரலி)யையே சுட்டிக் காட்டி, தங்கள் கொடியையும் அவர்களிடமே ஒப்படைத்தார்கள். தபூக் போரன்று அண்ணலார் (ஸல்) அவர்கள் அலீ (ரலி)க்கு மூஸா (அலை) அவர்களிடம் ஹாரூன் (அலை) அவர்களுக்கிருந்த தகுதியை அளித்துச் சிறப்பித்தார்கள். நஜ்ரானியக் கிருஸ்துவர்களோடு 'முபாஹலா' எனப்பட்ட அறைகூவலுக்கமர்ந்த அண்ணலார் (ஸல்) அவர்கள் அலீ (ரலி)யையும் தம்மோடு அமர்த்திக் கொண்டார்கள். இந்த மூன்று காரணங்களுக்காக அலீ (ரலி) அவர்களுக்கெதிராக நான் என் நாவை உசுப்பவும் மாட்டேன். அம்மூன்றில் ஏதேனும் ஒரு பேறே எனக்குக் கிட்டியிருக்குமாயின் அது செந்நிற ஒட்டகைகளைத் தர்மஞ்செய்வதால் கிடைக்கக் கூடிய நன்மைகளைவிட மேலானதாயிருக்கும்'' என அறிவித்தார்கள்.

வரலாற்றுப் புகழ் படைத்த வெற்றிகளையும் வளமிக்கச் செல்வக் கருவூலங்களையும் முஸ்லிம்களுக்குப் பெற்றுத் தந்த ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்கள் மிக மேலான அறிவு ஞானத்தையும் குணச் சிறப்புகளையும் பெற்று விளங்கினர். ''வீரமும் காம்பீரமும் வெளிப்பட்ட அவருக்குள்ளே ஈகையும் இரக்கமும்தான் மறைந்திருந்தன'' என ஹழ்ரத் அபூ மூஸா அஷ்அரீ (ரலி) அவர்கள் குறிப்பிடுகின்றனர். நலிந்தவர்களைக் காணும்போது அவர்களின் நெஞ்சம் கனிந்துருகி கண்களில் குளம் கட்டி நிற்கும். 'அழியும் உலகின் இன்ப வாழ்விலே நாம் எத்துணை மெய் மறந்து போய் விட்டோம்' என தாம் அண்ணலார் (ஸல்) அவர்களோடு கழித்த முந்திய வாழ்வை நினைவு கூர்வார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களின் திருவாக்கெென அவர்கள் இருநூற்றுப் பதினேழு ஹதீஃஸ்களையே வெளிப்

பொய்யானதாக இருப்பின் இவரது ஆயுளை நீளச் செய்து, வறுமையை இவர் மீது சாட்டி, சோதனையால் இவரைச் சூழச் செய்வாயாக'' எனப் பிரார்த்தித்தார்கள்.

அபூஸஅதா எனப்பட்ட அம்மனிதர் முதுமையடைந்து விட்டபோது தளர்ந்துபோன அவரது இரு புருவங்களும் மடிந்து, கண்கள் இரண்டையும் மறைத்துத் தொங்கிய நிலையில், வறுமை வயப்பட்டு கூஃபாவின் வீதிகளில் யாசித்துக் கொண்டலைந்ததையும் கேட்பவர்களிடம், 'ஸஅது (ரலி) அவர்களின் சாபக் கேட்டினால் சோதனை வயப் பட்ட வயோதிகன் நான்' என்று தம்மைப் பற்றி கூறிக் கொண்டு திரிந்ததையும் தாம் கண்டதாக அப்துல் மலிக் இப்னு உமைர் என்ற தாபஈப் பெரியார் அறிவிக்கின்றனர்.

ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களுக்கு முன்பாக ஒரு மனிதன் நபிமணித் தோழர்களைப் பற்றி இழித்தும் பழித்தும் பேசிக் கொண்டிருந்தான். இவர்கள் அவனை நோக்கி அத்தீச் செயலை விட்டும் விலகுமாறும், அன்றிடில் தாம் அவனை கோபத்தால் சபிக்க நேரிடும் என்றும் எச்சரித்தார்கள். அக்கேடுகெட்டவன் 'உமது கோபத்தைப் பற்றி நான் கவலை கொள்ளவும் இல்லை. உமது சாபத்துக்கு நான் அஞ்சவும் மாட்டேன்' என இறுமாப்பாகக் கூறினான். ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் சீற்றங் கொண்டவர்களாக தங்கள் இரு கரங்களையும் ஏந்தி, 'இறைவா! உன் அருமைத் தூதரின் பெருமைக்குரிய தோழர்களை சிறுமைப்படுத்திப் பேசும் இவன்மீது உன் கோபத்தின் அடையாளங்களை இறக்கி, மற்றவர்களும் அதன் மூலம் அறிவு பெறச் செய்தருள்' என இறைஞ்சினார்கள். அவ்விறைஞ்சுதலுக்குப் பின் பள்ளியை விட்டும் வெளி வந்த அம்மனிதனை சித்தம் பேதலித்து ஓடிவந்த ஓர் ஒட்டகை தன் பற்களால் கடித்து பூமியில் தள்ளி, அவனது விலா எலும்புகள் ஒடியும் படியாக மேலேறி அமர்ந்து சாகடித்து விட்டது.

மற்றொரு சமயம் ஹழ்லரத் அலீ (ரலி) அவர்களை தாறுமாறாக ஒருவன் ஏசிக் கொண்டிருக்கக் கேட்டு பொறு யிழந்த இவர்கள், 'இறைவா! உன் நேசர்களில் ஒருவரை இழித்துப் பேசும் இவன்மீது இக்கூட்டம் கலையும் முன்பாகவே உன் வேதனையை இறக்கி வைப்பாயாக' என இறைஞ்சிக் கொண்டிருக்கையிலேயே அவன் அமர்ந்திருந்த குதிரை மிரண்டு, அதிலிருந்து கீழே விழுந்த அவன் தலை கற்பாறையில் மோதி சிதறுண்டுச் செத்தான்.

உயிர் குடிக்கும் கொடும் நோய் வயப்பட்ட ஒருவர் இனித் தாம் பிழைத்தெழ முடியாதென்ற உணர்வை அடைந்த நிலையில் தம்மைக் காண வந்த ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களிடம், 'நபிமணி (ஸல்) அவர்களின் நற்றவத் தோழரே! என் சின்னஞ்சிறு கண்மணிகளை எனக்குப் பின் பராமரிக்க நான் எவரையுமே பெற்றில்லையே! இக்குழந்தைகள் பருவமடையும் வரையிலாவது நான் உயிர் வாழ தாங்கள் கரமேந்தி வழுத்தலாகாதா?' எனப் புலம்பினார். அவரது நிலை கண்டு மனமிரங்கிய ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்களும் தங்கள் கரங்களேந்தி அப்பெரியார் நலம் பெறவும் திடம் பெறவும் இறைஞ்சினார்கள். வாழ்வின் விளிம்பில் நின்றிருந்த அம்மனிதர் அதன் பின் நலம் பெற்றெழுந்து இருபது ஆண்டு காலம் உயிர் வாழ்ந்தார்—என இமாம் பைஹக்கி (ரஹ்) எழுதுகிறார்கள்.

இவையெல்லாம் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் எத்தகைய இறையருள் பெற்றவர்களாய் விளங்கினார்கள் என்பதற்கும், அவர்களின் இறைஞ்சுதல் ஏற்றுக் கொள்ளப்பட்ட சிறப்புக்கும் அடையாளங்களாகும்.

பிந்திய கால வாழ்க்கையில் ஹழ்லரத் ஸஅது (ரலி) அவர்கள் பல்வேறு தருணங்களில் பன்னிரு பெண்மணிகளை மணமுடித்து அப்பன்னிருவர் மூலமாக 18 ஆண் மக்களையும் 18 பெண் மக்களையும் பெற்றார்களாயினும்

அவர்களில் மிகச் சிலரின் பெயர்களே சரித்திரச் சம்பந்தப் பட்டு நிற்கின்றன. அனைவரிலும் மூத்த மகனின் பெயரா லேயே அவர்கள் 'அபூ இஸ்ஹாக்' என அழைக்கப்பட் டார்கள்.

இவர்களின் தமையனார் உத்பா இப்னு அபீவக்காஸ் என்பவரே உஹதுப்போரில் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களுக்கு இன்னல் விளைவித்தவர். அவர் விட் டெறிந்த கல்லே அண்ணலார் (ஸல்) அவர்களின் முகத்தில் பட்டு அவர்களின் முன்பற்கள் இரண்டையும் தெறித்து விழச் செய்தது.

''உத்பாவின் உயிரை கொல்லக் கொண்டிருந்த ஆவ லைப் போன்று மற்றெவரின் உயிரின் பாலும் நான் ஆவல் கொண்டிருக்கவில்லை. அவர் தம் தீவினையின் காரணத் தால் எங்களிடையே மிக வெறுக்கப்பட்டவராகவே விளங் கினார். உஹதுடைய நாளில் அவரது கல்வீச்சால் காய முற்ற என் ஏந்தலர் (ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வின் தூதருக்குக் கேடு விளைவித்தவர்களை அவனது கோபம் சூழும்'' என கூறக் கேட்டு நான் மனப் பொருத்தமே கொண்டேன்' என ஹழ்ரத் ஸஅது (ரலி) அவர்களே தங்களின் பிந்திய காலத்தில் குறிப்பிட்டார்கள்.

ஏறத்தாழ எண்பத்தைந்து ஆண்டுகாலம் வாழ்ந்த இம் முதுபெரும் தோழர் ஹிஜ்ரி ஐம்பத்து ஐந்தாம் ஆண்டில் உலகைப் பிரிந்தார்கள். 'அஷரத்துல் முபஷ்ஷரா' எனப் பட்ட—புவன வாழ்விலேயே சுவன நன்மாராயம் கூறப் பெற்ற நன்மணிகள் பதின்மரில் இறுதியாக மறைந்தவர்கள் ஹழ்ரத் ஸஅது இப்னு அபீவக்காஸ் (ரலி) அவர்களே யாவர். வாழ்நாளில் அவர்கள் கொண்டிருந்த வேணவா வின்படி—பத்ருப்போரில் கலந்து கொண்ட போது அவர் கள் அணிந்து கழற்றி, ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக புனிதமுடன் பேணிப் பாதுகாத்து வந்திருந்த அவர்களின் மேலாடையையே கஃபனாகப் போர்த்தி, அவர்களின் புனித

உடலை மக்கள் கண்ணியத்துடன் சுமந்து வந்து மதீனா வில் ஜன்னதுல் பக்கீஃஇல்அடக்கம்செய்தார்கள். மதீனாவின் அப்போதைய ஆளுநர் மர்வானால் மஸ்ஜிதுன் னபவீயில் தொழுதிறைஞ்சப்பட்டபின் மாநபிகளாரின் அப்பெரும் தோழரின் திரு உடலை அன்னை ஆயிஷா நாயகியாரும் தம் திருவாசல் முன் கொணரச் செய்து உம்முல் முஉ மினீன்கள் அனைவரையும் கூட்டி நின்று தொழுதிறைஞ்சிச் சிறப்பித்தார்கள்.



## ஹழ்ரத்

# ஸுபைர் இப்னு அவ்வாம் (ரலி)

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் அருக மர்ந்து அப்துல் முத்தலிபின் இரு பேரன்மார்களும் சுவை யாகப் பேசி மகிழ்ந்திருந்தார்கள் ஒரு நாள். மகன் அபூ தாலிபின் வழி பிறந்த அலீ (ரலி) அவர்களும் மகள் ஸஃபிய் யாவின் வயிற்றிலுதித்த ஸுபைர் இப்னு அவ்வாம் (ரலி) அவர்களுமே அவ்விருவர். அண்ணலார் (ஸல்) அவர் கள் தம் இளவலை நோக்கி ''நீர் ஸுபைரை நேசிக்கின் றீரா?'' என வினவினார்கள்.

''அல்லாஹ்வின் தூதரே! ஏன் இல்லை! அவர் என் தந்தையின் உடன் பிறந்த மாமியின் மகனல்லவா? இஸ் லாத்தில் என் உடன் பிறப்பல்லவா?'' என்றனர் ஹழ்ரத் அலீ (ரலி).

பெருமானார் (ஸல்) அவர்கள் ஹழ்ரத் ஸுபைர் (ரலி) இடமும் வினவினார்கள். ''நீரும் அலீயை மிக நேசிக் கின்றீரன்றோ?'' என்று.

''பெருமானே! அவர் என் தாய் மாமன் மகனாகவும் இஸ்லாத்தில் என் முன்னோடியாகவுமிருக்க அவரை நான் நேசிக்காமலும் இருப்பேனோ?'' என்றனர் ஹழ்ரத் ஸுபைர் (ரலி).

''என்றாலும் ஒரு நாள் நீர் அலீயை எதிர்த்துப் போர் புரிய நிற்பீர்—அன்று நீர் அநீதியின் பேரிலிருப்பீர்'' என ஏந்தல் பெருமானார் (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்.

ஒட்டகைப் போரில் களம் காண வந்து நின்ற அந்த கவனத்து மாமலரை தள நடுவே தங்கள் புரவிமீதேறி வந்து சந்தித்த கலீஃபா அலீ (ரலி)—தாஹா நபி (ஸல்)

அவர்களோடு ஒரு நாள் நடைபெற்ற மேற்கண்ட உரையாடலை நினைவூட்டினார்கள்.

''அன்று நீர் அநீதியின் பேரிலிருப்பீர்'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் முன்னறிவித்த திருமொழி நினைவுக்கு வந்ததுமே ஹழ்ரத் ஸுபைர் (ரலி) அவர்களின் உடல் அதிர்ந்தது; உள்ளமும் சோர்ந்து விட்டது. அக்கணமே அவர்கள் போர்க்களத்தை விட்டும் வெளியேறி விட்டார்கள்.

'சுவனவாசிகள்' என அண்ணலார் (ஸல்) அவர்களால் புவன வாழ்விலேயே வாக்களிக்கப்பெற்ற பதின்மருள் ஒருவராகிய ஹழ்ரத் ஸுபைர் இப்னு அவ்வாம் (ரலி) அவர்கள் நபி பெருமான் (ஸல்) அவர்களின் தந்தையுடன் பிறந்த மாமியாகிய ஹழ்ரத் ஸஃபிய்யா (ரலி) அவர்களுக்கு 'உம்முல் முஉமினீன்' கதீஜா நாயகியாரின் உடன் பிறந்தார் அவ்வாமின் மூலம் பிறந்த மகனாவர். ஹழ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் திருமகளார் அஸ்மா (ரலி) அவர்களை மணந்த மருகராவர். ஸுபைர், இப்னு அவ்வாம், இப்னு குவைலித், இப்னு அஸத், இப்னு அப்துல் உஸ்ஸா, இப்னு குஸ்ஸா என இவர்களின் கொடி வழி அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் முன்னோரில் சென்றிணைகிறது.

அண்ணலார் (ஸல்) அவர்களின் தந்தை அப்துல்லாஹ் அவர்களுக்கு ஆமினா அம்மையாரை மணமுடித்த அதே மன்றலிலேயே அப்துல்லாஹ் அவர்களின் தந்தை அப்துல் முத்தலிப், ஆமினா அம்மையாரின் ஒன்றுவிட்ட சகோதரி ஹாலா என்பவரை மணமுடித்தார். அதுவே அவரின் இறுதித் திருமணம். ஆமினா அம்மையார் அண்ணலார் (ஸல்) அவர்களை ஈன்றெடுத்த ஒரு சில நாட்கள் முன்பின்னாக 'ஹாலா'வும் ஹழ்ரத் ஹம்ஸா (ரலி) அவர்களை ஈன்றெடுத்தார். ஓரிரு வருடங்கள் கழித்து ஹாலாவின் வயிற்றில் பிறந்த மகளே ஸஃபிய்யா (ரலி). இவ்வாறாக

அண்ணலார் (ஸல்) அவர்களுக்கு ஸஃபிய்யா அம்மையார் ஒரு முறையில் மாமியாகவும் மறுமுறையில் ஒன்று விட்ட சகோதரியாகவும் ஆகிறார்கள். அண்ணலார் (ஸல்) அவர்களைவிட வயதில் இளையவரும் கூட. மிக நெருக்கமான இடைவெளியில் பிறந்து ஒன்றாகவே வளர்ந்ததால் அண்ணலார் (ஸல்)-ஹம்ஸா (ரலி)-ஸஃபிய்யா (ரலி) ஆகிய மூவரிடையே மிகுதமான பாசமும் தழைத்து மிளிர்ந்தது.

அண்ணலார் (ஸல்) அவர்கள் அன்னை கதீஜா (ரலி) அவர்களை மணக்கு முன்னதாகவே கதீஜா நாயகியாரின் உடன் பிறந்த அவ்வாம் இப்னு குவைலிதோடு ஸஃபியா அம்மையாரின் மணவாழ்வு மலர்ந்திருந்தது. நபித்துவம் பெற்று, மூன்றாண்டு காலம் வரை தங்களின் தூதுத்துவத்தைப் பற்றி அந்தரங்கமாகவே சொல்லி வந்த நாயகத் திருமேனி (ஸல்) அவர்கள் ஆண்டவனின் கட்டளையின் பேரில் அவனின் தண்டனையைப் பற்றி தங்கள் குடும்பத்தாருக்கு அச்சமூட்டி எச்சரிக்க ஸஃபா மலையடிவாரத்தில் நின்றகாலை, 'அப்து மனாஃபுடைய குடும்பத்தார்களே!' என விளித்து 'அப்துல் முத்தலிபுடைய மகன் அப்பாஸே! ரஸூலுல்லாஹ்வின் மாமி ஸஃபிய்யாவே!! ரஸூலுல்லாஹ்வின் மகள் ஃபாத்திமாவே!!!' என இம்மூவரையும் தனித் தனியாகப் பெயர் கூறி அழைத்ததன் மூலம் அம் மூவர் பாலும் தமக்கிருந்த தனிப்பாசத்தைப் புலப்படச் செய்துள்ளார்கள்.

தாயின் வழியாக அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களோடிருந்த உறவு நெருக்கம், தந்தை அவ்வாமின் உடன் பிறந்தவர்களாக உம்முல் முஉமினீன் கதீஜா நாயகியார் அமைந்திருந்த பாக்கியம்—இவை ஒன்றிணைந்து ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்களை அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் கரம்பற்ற விரையச் செய்தன. தங்களின் பதினாறாவது வயதிலேயே இஸ்லாத்தில் இணைந்த இவர்கள், 'ஸாபிக்கூனல் அவ்வலூன்' என்று

மறை புகழும் முந்திய முஸ்லிம்களில் ஏழாமவராக அல்லது எட்டாமவராகக் கணிக்கப்படுகிறார்கள்.

ஸஃபிய்யா அம்மையார், வியக்கத்தக்க நெஞ்சத் துணிவு கொண்ட பெண்மணியாவார். உஹதுடைய போர்க் களத்தில் உருக்குலைக்கப்பட்டுக் கிடந்த-தம் உடன்பிறந்த-ஹம்ஸா (ரலி) அவர்களின் உடலை அவர் காணப் பொற மாட்டார் என கருதிய பெருமானார் (ஸல்) அவர்கள், அவரை வழியிலேயே தடுத்துத் திருப்பும் படியாக அவரின் மகன் ஸுபைர் (ரலி) அவர்களை விரையச் செய்தார்கள். ஆனால், தம் உடன் பிறந்தார் ஹம்ஸா (ரலி) அவர்கள் ஜுபைர் இப்னு முத்இமின் அடிமை வஹ்ஷியினால் கொல்லப்பட்டதையும், பத்ருப் போரில் ஹழ்ரத் ஹம்ஸா (ரலி) அவர்களின் வாளுக்குத் தம் தந்தையையும் உடன் பிறந்தா தானையும் சிற்றப்பனையும் பலி கொடுத்திருந்த ஹிந்தா தம் வெஞ்சினம் தொலைய ஹழ்ரத் ஹம்ஸா (ரலி) அவர்களின் நெஞ்சைப் பிளந்து ஈரலைக் கடித்துக் குதறியதையும், உறுப்புகளெல்லாம் சிதைக்கப்பட்டு ஹழ்ரத் ஹம்ஸா (ரலி) அவர்களின் உடல் கோலமழிந்து கிடப்பதையும் பற்றிய செய்திகளையெல்லாம் வழியிலேயே அறிந்திருந்த ஸஃபிய்யா (ரலி) தம்மைத் தடுக்க வந்த தனயரிடம் தம் உடன் பிறந்தவரின் நிலைமை தாம் பூரணமாக அறிந்திருப்பதாயும் 'இவையெல்லாம் அல்லாஹ்வின் பாதையில் மிக அற்பமான அர்ப்பணங்கள்' என்றும் கூறி ஹழ்ரத் ஹம்ஸா (ரலி) அவர்களின் உடலை கண்டே திரும்பினார்!

அகழ்ப் போரின்போது அண்ணலார் (ஸல்) அவர்கள் பெண்களனைவரையும் ஒரு கோட்டையில் தங்கச் செய்து விட்டு, தங்கள் தோழர்களனைவரையும் அகழினைக் காவல் புரிய அழைத்துச் சென்று விட்டார்கள். கோட்டை பலமானதாயிருந்தாலும் அச்சந் தவிர்ந்திருக்கக் கூடிய சூழ்நிலை இல்லை. ஹழ்ரத் ஹஸ்ஸான் இப்னு ஃஸாபித் (ரலி) அவர்களைத் தவிர்த்து எந்த ஆண் துணையுமில்லை. அவ

ரும் நோயுற்றிருந்த காரணத்தாலேயே விட்டுச் செல்லப் பட்டிருந்தார். அத்தகைய நிலையில் யூதர்களில் ஒருவன் மதீனாவின் நிலையை ஆராய அப்பகுதியில் உலவிக் கொண்டிருந்தான். அவனைக் கண்டு விட்ட ஸஃபிய்யா (ரலி) ஹழ்லரத் ஹஸ்ஸான் (ரலி) அவர்களை சென்று அவனை விரட்டும்படி தூண்டினார். நோயுற்றிருந்த ஹஸ்ஸான் (ரலி) அவர்கள் வெளிச் செல்லத் தயங்கிடவே ஹழ்லரத் ஸஃபிய்யா (ரலி) தாமே ஒரு மரக்கட்டையைப் பிடுங்கி எடுத்துச் சென்று அவனை தாக்கியதோடு, செத்து விழுந்த அவன் தலையையும் வெட்டியெடுத்து வந்து மதிலின் மேலேறி யூதர்களின் குடியிருப்பின் புறம் வீசி எறிந்தார். மதீனாவின் உள்ளேயும் முஸ்லிம்களின் ஒரு படை காவலுக்குத் தங்கியிருக்கிறது என்று யூதர்களை எண்ணச் செய்தது ஹழ்லரத் ஸஃபிய்யா (ரலி) அவர்களின் அந்த நடவடிக்கை! இஸ்லாமிய வரலாற்றில் ஒரு பெண் தம் நெஞ்சத் துணிகரத்தை வெளிப்படுத்திய முதல் சம்பவம் என இதனை வரலாற்றாசிரியர் இப்னு அஃஸீர் குறிப்பிடுகிறார்.

இந்தச் சம்பவம் ஹழ்லரத் ஸஃபிய்யா (ரலி) அவர்கள் தம் வாழ்நாளில் ஐம்பதாண்டு கால கட்டத்தைக் கடந்திருந்த சமயத்தில் நடைபெற்றது அப்படியானால் அன்னவரின் இளமை நெஞ்சம் எத்தகைய துணிகரமுடையதாக இருந்திருக்கக் கூடும்! பிறந்த சில நாட்களில் தந்தையை இழந்து விட்ட ஹழ்லரத் ஸுபைர் (ரலி) இத்தகைய துணிகரமிக்க வீரத் தாயினால்தான் வளர்க்கப்பட்டனர். முன்னதாகவே உமையா குடும்பத்தைச் சார்ந்த ஹாரிஃஸ் இப்னு ஹர்புக்கு வாழ்க்கைப் பட்டு ஒரு மகனையும் பெற்று அவர்களை இழந்து, அவ்வாமை மறுமணம் புரிந்து ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்களைப் பெற்று, இந்தக் கணவரையும் இழந்த ஹழ்லரத் ஸஃபிய்யா (ரலி) அதற்குப்பின் வாழ்நாளின் இறுதிவரை மணவாழ்வை

நாடவேயில்லை. அருளாகக் கிடைத்திருந்த ஒரே செல்வரை ஆளாக்குவதிலேயே பெரும் கவனம் செலுத்தினார். அந்த ஒரு மகன் ஆற்றல் படைத்தவராக விளங்கவேண்டும் என்பதில் பெரும் ஆவலும் அக்கரையும் கொண்டிருந்த ஸஃபிய்யா (ரலி) எத்தகைய கடுமையான முயற்சியிலும் பயிற்சியிலும் சிறுவர் ஸுபைரை ஈடுபடுத்தப் பின்னடைந்ததே இல்லை; பலவந்தத்தையும் நிர்ப்பந்தத்தையும் அவர் மீது சுமத்தத் தயங்கியதே இல்லை.

ஒரு நாள் சிறுவர் ஸுபைர் (ரலி) அவர்கள் தம் தாயின் பிடியில் வதைபட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்து விட்ட அவர்களின் தந்தையொடு பிறந்த னவ்ஃபல் இப்னு குவைலித் தம் உடன் பிறந்தவரின் வாரிசை அவரின் தாய் கொன்றே விடுவாரோ என்று கூட அஞ்சினார். அதற்காக ஸஃபிய்யா (ரலி) அவர்களைக் கோபித்து இரைந்ததோடு ஸஃபிய்யா (ரலி) அவர்கள் பிறந்திருந்த ஹாஷிம் குடும்பத்தவர்களையும் அழைத்து வந்து அவரோடு சச்சரவிட்டார் னவ்ஃபல். ஸஃபிய்யா (ரலி) சளைத்து விட்டுவிடவில்லை. "என் பிள்ளையைச் சாகடிக்க நான் வதைக்கவில்லை. என் பிள்ளை புகழுடன் விளங்க அறிவு பெற வேண்டும், பகைவர்களை வீழ்த்த வலிவு பெறவேண்டும், வளவாழ்வை அள்ளிக் கொணரவேண்டும் என்பதற்காகவே நான் பயிற்றுவிக்கிறேன்" என வாயாப்பளித்து அவர்களுக்கெல்லாம் விடை கொடுத்தார் ஹழ்லரத் ஸஃபிய்யா(ரலி).

சிறுவர் ஸுபைருக்கு தம்மைவிட மூத்த ஓர் இளைஞரோடு சச்சரவேற்பட்டு விட்டது ஒரு நாள். நல்ல திடகாத்திரராக அவ்விளைஞர் இருந்தும் எப்படியோ சிறுவர் ஸுபைர் அடித்த அடியில் அவ்விளைஞரின் கை ஒடிந்தே போனது. அதனைப் பற்றி முறையிட்டு வந்து நின்ற மனிதர்களிடம் தம் பச்சாதாபத்தை வெளிப்படுத்த மறந்து அந்தத் தாய், "என் மகன் அவனை துணிவோடு பாய்ந்து அடித்தானா அல்லது அவனின் அஜானுபாகுவைக் கண்டு அஞ்சிப் பதுங்கினானா?" என விசாரித்துக் கொண்டிருந்

தார்—என ஹாபிழ்ல் இப்னு ஹஜர் தம் 'இஸாபா'வில் குறிப்பிடுகின்றனர்.

இத்தகைய தாயால் வளர்க்கப்பெற்ற பிள்ளையின் துணிகரத்தைப் பற்றி என்ன விவரிக்கவேண்டியுளது! வயதில் இளைத்தவர்களாயிருந்த நிலையில் ஹழ்லரத் ஸுபைர் தம்மைவிட முதிர்ந்தவர்களையும் மிகைத்தவர்களாகவே உலவினார்கள் மக்காவின் வீதிரளில். அல்லாஹ்வின் பாதையில் வாளை உருவிய முதல் முஸ்லிம் என ஹழ்லரத் ஸுபைர் (ரலி) வரலாற்றில் சிறப்படைந்திலங்குகிறார்கள்:

ஒரு நாள் பகலுறக்கங் கொண்டிருந்தனர் இளைஞர் ஸுபைர். ஹாஷிம் குடும்பத்தவர்களின் சர்ச்சைக் குரல்களால் அவர்களின் உறக்கம் கலைந்தது. அண்ணல் எம் பெருமான் (ஸல்) அவர்கள் கொல்லப்பட்டார்கள் அல்லது கடத்தப்பட்டார்கள் என்பதே சர்ச்சை. அது உண்மையா அல்லது வதந்தியா? என்ன செய்வது? எப்படித் தெரிவது என பனீ ஹாஷிம்களான முதியவர்களும் இளைஞர்களும் விவாதித்த வண்ணமிருந்தனர். விழித்த ஸுபைர் (ரலி) அவர்கள் எந்த விவாதத்திலும் பங்கேற்கவில்லை; வீறு கொண்டு தங்கள் வாளை உருவினார்கள்; அதன் உறையை வீசி எறிந்தார்கள் ஒரு புறம்; உருவிய வாளோடு வீதியில் இறங்கி ஓடினார்கள். இடை வழியிலேயே அண்ணலார் (ஸல்) அவர்களும் எதிர்பட்டு விட்டார்கள். இளைஞர் ஸுபைரின் கொவ்வைக் கனிகளாகி விட்டிருந்த கண்களைக் கண்டதும் அண்ணலார் (ஸல்) அவர்களின் விழிகள் உயர்ந்தன வியப்பால்!

"ஸுபைர்! அகால நேரத்தில் இதென்ன கோலம்?" என பெருமானார் (ஸல்) அவர்கள் வியப்புடன் வினவினார்கள். குரைஷிகள் தங்கள் கொடுங்கரங்களால் முஸ்லிம்களைக் குதறிச் சிதைத்துக் கொண்டிருந்த காலமது! அதுவரை முஸ்லிம்களாகியிருந்தவர்களெல்லாம் தங்

களுக்கிழைக்கப் பெற்ற துயரங்களைச் சகித்து நிற்பதே யன்றி எதிர்த்துத் தங்கள் இமைகளை அசைக்கவும் திறனற்றிருந்த கோலம்!!—வாளைத் தம் கரம்பிடித்திருந்த—இருபது வயதுகளும் நிரம்பப் பெறாத அந்த இளைஞர் கூறினார் ''பெருமானே! தாங்கள் எதிரிகளால் சூழப்பட்டதாகச் செவியுற்றல்லவோ ஓடோடி வருகிறேன்'' என்று.

பெருமான் நபி (ஸல்) அவர்களின் முகத்தில் புன்முறுவல் மிகுந்தது. ''அப்படியானாலும் நீர் வாளேந்தி வரும் நோக்கம்தான் என்ன?'' என நபி பெருமான் (ஸல்) அவர்கள் வினவினார்கள்.

''அல்லாஹ்வின் தூதரே! என் தந்தையும் தாயும் தங்களுக்கர்ப்பணம். மரணிக்கும் வரை அவர்களோடு போராடுவேன்'' என முழங்கினார்கள் ஹழ்லரத் ஸுபைர் (ரலி).

துவக்க காலத்தில் இஸ்லாத்தை ஏற்ற ஒவ்வொருவரையும் வதைக்க அவரவரின் குடும்பத்திலேயே பொறுப்பேற்றிருந்த ஒவ்வொருவரையும் போல் இவர்களது குடும்பத்தில் பொறுப்பேற்றிருந்தவர் இவர்களின் சிறிய தந்தை 'னவ்ஃபல் இப்னு குவைலி'தாவார். தம் உடன் பிறந்தார் மகன் சிறுவராக இருந்தபோது அவர்மீது கொண்டிருந்த பரிவையும் பாசத்தையும் அவர் இஸ்லாத்தை ஏற்றிடக் கேட்டு மறந்தார் னவ்ஃபல். சினம் மிகும் போதெல்லாம் ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்களை ஓலைப்பாயினுள் சுருட்டிக் கட்டி இருபக்கமும் புகை மூட்டிவிடுவார் னவ்ஃபல். ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்கள் மூச்சுத் திணறலால் துடிப்பார்கள்; ஆயினும், 'பெருமான் முஹம்மது (ஸல்) அவர்களின் தோழமையை மட்டும் ஒருக்காலும் நான் விடேன்' என்றே கதறுவார்கள். ஐந்தாண்டு காலம் அக் கொடுமைகளனைத்தையும் தாங்கி இறுதியாகஒரு நாள் அவர்கள் அபீஸினியாவுக்குப் புறப்பட்டுச் சென்று விட்டார்கள். ஆனால் ஏறத்தாழ இரண்டு மாத காலமே அங்கு தங்கியிருந்த அவர்கள், மக்கத்துக் குரைஷிகள் இஸ்லாத்தை ஏற்று விட்டார்கள்

ன்ற தவறான செய்தியை நம்பி திரும்பியவர்களோடி ணைந்து மக்காவுக்கே திரும்பிவிட்டார்கள். அதன்பின் அவர் கள் நபி பெருமான் (ஸல்) அவர்களின் ஹிஜ்ரத் காலம் வரை மக்காவிலேயே வாழ்ந்தனர் என்றே தெரிகிறது. ஏனெனில், வாணிப நிமித்தம் ஸிரியா சென்று திரும்பிக் கொண்டிருந்த இவர்கள் வழியில், மதீனாவின் புறம் ஹிஜ்ரத் செய்து சென்றுக் கொண்டிருந்த நபி பெருமான் (ஸல்) அவர்களைச் சந்தித்ததாகவும், அச்சமயம் அண்ணலார் (ஸல்) அவர் களோடு அளவளாவிய இவர்கள் தங்கள் பொதிகளை அவிழ்த்து இரண்டு வெள்ளாடைகளை எடுத்து அண்ணலார் (ஸல்) அவர்களுக்கும் ஹழ்லரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களுக்கும் அணிவித்து வழியனுப்பி வைத்ததாகவும் இவர்களின் திருமகனார் ஹழ்லரத் உர்வா இப்னு ஸுபைர் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளதை இமாம் புகாரீ (ரஹ்) அவர்கள் ஏற்றுள்ளார்கள்.

இந்த இடைக்காலத்தில்தான் அவர்களுக்கும் ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் திருமகளார் அஸ்மா (ரலி) அவர்களுக்கும் திருமணமும் நடை பெற்றது; அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் ஹிஜ்ரத்தின் வழியில் அவர்களைச் சந்தித்து, பின்னர் மக்கா வந்தடைந்த இவர் கள் வாணிபக் கொடுப்பல் வாங்கல்களை முடித்து தங்கள் அன்னை ஸஃபிய்யா (ரலி) அவர்களையும் குடும்பத்தார் களையும் அழைத்துக் கொண்டு மதீனா சென்றடைந்தார் கள். மதீனாவில் அண்ணலார் (ஸல்) அவர்கள் இவர்களை ஹழ்லரத் ஸல்மா இப்னு ஸலாமா (ரலி) என்ற அன்ஸா ரித் தோழரின் சகோதரராகப் பிணைத்து வைத்தார்கள்.

மதீனாவை அடுத்த 'குபா'விலேயே ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்களின் இல்லறவாழ்வு மலர்ந்தது! இங்கேயே ஹழ்லரத் அஸ்மா பின்த்து அபூபக்கர் (ரலி) அவர்கள் கரு வுற்றார்கள். ஏறத்தாழ இருபது மாத காலங்கள் வரை எந்த ஒரு முஹாஜிருக்கும் மக்கட்பேறில்லாதிருந்தது. 'அவர்களுக்கு சந்ததியற்றுப் போகுமாறு நாங்கள் சூனியம்

செய்துவிட்டோம்' என யூதர்கள் பிதற்றித் திரியலானார் கள். அவர்களின் வாயடைபடத்தக்கவாறு ஹழ்லரத் அஸ்மா (ரலி) அவர்கள் முதன் முதலாக ஓர் ஆண்குழந்தை யைப் பெற்றெடுத்தனர். முஹாஜிர்களனைவருமே அன் றைய நாளை ஒரு பெருநாளைப் போல் மகிழ்ந்து கொண் டாடினர்.

''எங்கள் ஆரம்பகால வாழ்க்கையின்போது அவரிடத் தில் நிலபுலன்களோ அடிமைகளோ வேறு எதுவுமோ இருக் வில்லை. ஒரு குதிரையும் ஓர் ஒட்டகையும் மட்டுமே இருந் தன. நானே அக்குதிரைக்கு இரைபோடுவேன்; நீர் காட்டு வேன்; துருத்திகள் தைப்பேன்; மாவரைப்பேன். அண்டை யில் வாழ்ந்த அன்ஸாரிப் பெண்கள் ரொட்டி சுட்டளிப் பார்கள்; மிக உபசரிப்பார்கள்''—என அஸ்மா (ரலி) அவர் கள் கூறும் செய்தி ஹிஜ்ரத்தின் ஆரம்ப காலத்தில் முஹாஜிர் கள்-அன்ஸார்களின் கூட்டு வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டுகிறது. பின்னர் கிடைத்த வெற்றிப் பொருள்கள் பங்கிடப்பட்டபோது அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்களுக்கு வெவ்வேறு இடங்களில் நிலங் களையும் அளித்தார்கள். ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர் கள் அவற்றில் வேளாண்மை செய்வித்தும் தோட்டங்களை அமைப்பித்தும் தங்கள் குடும்பத்துக்கான தேவைகளை ஈட்டிக் கொண்டார்கள்.

மதீனா குடியேற்றத்துக்குப்பின் துவங்கிய எல்லாப் போர்களிலும் அரபு நாட்டின் மாவீரர்களை எதிர்த்து இவர்கள் காட்டிய தீரமும் துணிவும் புகழுக்குரியனவாக விளங்குகின்றன. திரும்புந் திசையெல்லாம் இவர்களின் தோற்றமே எதிரிகளுக்கு திடுக்கத்தைத் தந்த வண்ணமிருந் தது. ''பத்ருப் போர் உக்கிரமமாக நடைபெற்றுக் கொண் டிருக்கையில் எதிரிகளில் வீரனொருவன் உயர்ந்த மேட்டின் மீதேறி நின்று அறைகூவினான். அண்ணலார் (ஸல்) அவர் கள் தம் அருகே நின்றிருந்த ஒரு தோழரிடம் அவனுடைய

அறைகூவலை ஏற்க அவர் துணிவாரா?' என வினவினார்கள். 'அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் கட்டளையிட்டால் அவனை எதிர்க்க நான் காத்திருக்கிறேன்' எனப் பகர்ந்தார் அத்தோழர். அதற்குள் அண்ணலார் (ஸல்) அவர்களின் பார்வை, ஒரு புறம் அமர்ந்திருந்த ஸுபைர் (ரலி) அவர்களின்பால் திரும்பியது. உணர்வுகளால் கொந்தளித்த வண்ணம் காட்சியளித்தனர் ஸுபைர் (ரலி). ''ஸஃபிய்யாவின் மகனே! எழுமின்'' என பெருமானார் (ஸல்) அவர்கள் முழங்கியதே தாமதம்! விருட்டென எழுந்த ஸுபைர் (ரலி) மின்னலெனப் பாய்ந்து அவனைச் சேர்த்துப் பிடித்தார்கள். சம பலங் கொண்டவர்களாகவே விளங்கிய அவ்விருவரும் ஒருவரையொருவர் சாய்த்திடப் பெரும் பாடு பட்டவண்ணமிருந்தனர். 'அவர்களில் எவர் முதலாவதாகச் சாய்வாரோ அவர் கொல்லப்படுவார்' என்றருளிய பெருமானார் (ஸல்) அவர்கள் ஸுபைர் (ரலி) அவர்களுக்குதவ இறைவனிடம் வழுத்தினார்கள். சில வினாடிகள் தரையில் சாய்ந்த அவ்விருவரும் மேட்டிலிருந்து உருண்டுக் கொண்டே வந்தனர். இறுதியாக அவ்வீரன் கீழாகவும் ஸுபைர் (ரலி) மேலாகவுமாக பள்ளத்தை அடைந்தனர். கண்ணிமைக்கும் நேரத்துக்குள் தம் வாளை உருவிய ஸுபைர் (ரலி) அவனின் கழுத்தைத் துண்டித்து விட்டனர்''-என்ற செய்தியை அஸ்மா (ரலி) அவர்கள் அறிவித்தனர். குரைஷிகளின் படையிலிருந்து ஸுஅதிப்னுல் ஆஸின் மகன் உபைதா என்பவன் இரும்புக் கவசத்தால் உடல் முழுவதையும் போர்த்தியவனாக வந்து நின்று முஸ்லிம்களில் தன்னோடு பொருதத் துணிபவரை அறைகூவி அழைத்தான். அவனை எதிர்க்க ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்களே விரைந்தனர். இரும்புக் கவசத்தினுள் முழுமையாகவே புதையுண்டு நின்ற உபைதாவின் இரு கண்களைத் தவிர்த்து வேறெதுவுமே வெளித் தெரியவில்லை. ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்கள் பாய்ந்த வேகத்திலேயே தங்கள் ஈட்டியை அவனது விழிக் குழியில் நேராகச் சொருகினார்கள். குறிதவறாது பாய்ந்த

அவ்வீட்டி உபைதாவின் கபால எலும்பில் குத்தி அவன் தரையில் துடிதுடித்து விழுந்துச் செத்தான். பின்னர் அவ் வீட்டியை மீட்க ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்கள் அவன் உடல் மீதேறி நின்று தங்கள் முழுத்திறனும் கொண்டு சிரமப்பட வேண்டியிருந்தது. அதன் பின்னரும் அவ்வீட்டி முனை வளைந்தே வெளிவந்தது. அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் அவ்வீட்டியைப் பெற்று தங்கள் வாழ்நாள் முழுவதும் அதனை ஒரு புனிதப் பொருளாய்ப் பாதுகாத்து வந்தார்கள். அவர்களின் மறைவுக்கு பின் நான்கு கலீஃபாக் களாலும் அவ்வாறே பாதுகாக்கப்பட்ட அப்புனிதச் சின் னம், பின் ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் (ரலி) அவர்களிடமே வந்து சேர்ந்தது. ஹழ்லரத் அப்துல்லாஹ் (ரலி) அவர்களின் படுகொலைக்குப் பின்னர் ஹழ்லரத் உர்வா இப்னு ஸுபைர் (ரலி) அவர்களிடமிருந்து உமை யாக்களின் கைகளுக்கு மாறிய அது, பின்னர் மறைந்து விட்டது. இவ்வாறாக மற்றெந்த ஒரு வீரருடைய போர்க் கருவியும் நபிபெருமான் (ஸல்) அவர்களாலும் அவர்களைத் தொடர்ந்த நான்கு கலீஃபாக்களாலும் புனிதப்பொரு ளாய்ப் பாதுகாக்கப்பட்டதாகத் தெரியவில்லை.

மஞ்சள் நிறத் தலைப்பாகை அணிந்து பத்ருப் போரில் பங்கேற்ற இவர்களைப் பாராட்டிய பெருமானார் (ஸல்) அவர்கள் அன்றைய தினம் விண்ணவர்கோன் ஹழ்லரத் ஜிப்ரயீல் (அலை) அவர்களும் மஞ்சள் நிறத் தலைப் பாகையே அணிந்து ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்களின் தோற்றத்திலேயே படையோடு வந்திறங்கி போர் புரிந்த தாக அறிவித்தார்கள்.

பத்ருப்போரில் இவர்கள் ஆற்றிய வீரச்செயல் கண்டு மகிழ்ந்து அண்ணலார் (ஸல்) அவர்கள் உஹதுப் போரில் ஐம்பது பேர்களைக் கொண்ட ஓர் அணியின் தலைமை யையே இவர்களிடம் ஒப்படைத்திருந்தார்கள். உஹதில் ஒட்டகையேறி குரைஷிகளின் கொடி பிடித்து வந்த தல்ஹா அப்தரீ என்பவனைக் கண்டு பலரும் ஒதுங்கி நிற்கையில்

மக்கத்து குரைஷிகளால் வஞ்சகமாகக் கைது செய்து கொணரப்பட்ட ஹழ்லரத் குபைப் (ரலி) 'தன்ஈம்' என்ற இடத்தில் கழுவிலேற்றிக் கொலை செய்யப்பட்டனர். அவர்களின் புனித உடல் நாற்பது நாட்கள் வரை கழுமரத் திலேயே தொங்கவிடப்பட்டு எவரும் கவர்ந்து சென்றிடா வண்ணம் பலமான காவலும் மேற்கொள்ளப்பட்டிருந்தது. மதீனாவிலிருந்த வண்ணமே விண்ணவர்மூலம் இச் செய்தி யறியப் பெற்ற பெருமானார் (ஸல்) மக்கமா நகரம் சென்று ஹழ்லரத் குபைப் (ரலி) அவர்களின் உடலை மீட்டுவர ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்களையே அனுப்பி வைத் தார்கள். ஹழ்லரத் மிக்தாத் (ரலி) அவர்களோடு மட்டுமே மக்கா சென்றடைந்த ஹழ்லரத் ஸுபைர் (ரலி) மதுப் போதையில் மயங்கிக் கிடந்த காவலர்களிடையே புகுந்து ஹழ்லரத் குபைப் (ரலி) அவர்களின் உடலை அவிழ்தெடுத் துத் திரும்பினார்கள். மயக்கந் தெளிந்த அக்காவலர்கள் ஏறத்தாழ நாற்பதின்மர் பின் தொடர்ந்து ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்களையும் மிக்தாத் (ரலி) அவர்களை யும் எத்தி விட்டார்களாயினும் காட்டுச் சிங்கங்களைப் போல் கர்ஜித்த அவ்விரு நபிமணித்தோழர்களோடு பொரு தப் பின்னடைந்து திரும்பி விட்டார்கள். வெற்றி வீரர்க ளாய் மதீனா வந்தடைந்த அவ்விருவரின் முகங்களிலும் படிந்திருந்த புழுதியை பெருமானார் (ஸல்) அவர்களே எழுந்து தங்கள் திருக்கரங்களால் துடைத்து விட்டார்கள்.

மக்கமா நகர வெற்றியின்போது நபிபெருமான் (ஸல்) அவர்களோடு இணைந்து வந்த முஹாஜிர்களின் பிரிவில் அவர்களின் போர்க்கொடி ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர் களிடமே இருந்தது.

பெருமானார் (ஸல்) அவர்களின் வாழ் நாளின் இறுதி வரை நடைபெற்ற எல்லாப் போர் நடவடிக்கைகளிலும், ஹுதைபியா உடன் பாட்டிலும், இறுதி ஹஜ்ஜிலும் பங் கேற்ற இத்தோழர் அப்பெருமானார் (ஸல்) அவர்களின் பேரிழப்பால் செயலிழந்து சில காலம் ஒதுங்கி விட்டார்கள்.

ஆயினும் கலீஃபாக்களின் ஆட்சி காலத்தில் ரோமர்களுக்கு எதிராய் அமைக்கப்பட்ட யர்மூக் போர்க் களம் அவர்களின் அமைதியை அகலச் செய்தது. 'வாழ் நாளில் என்றுமே தங்கள் தவமடங்களை விட்டும் வெளிவராத கிருஸ்துவக் குருமார்களும் கூட இஸ்லாத்திற்கு எதிராகப் போர்க்களத்தில் உலா வருகிறார்கள்'-என்ற செய்தி கேட்டு உணர்வு கொண்ட ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்கள் துடித்தெழுந்து விரைந்து போர்க்களம் அடைந்தார்கள்.

யர்மூக் போர் களத்தில் ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்களின் திருமுகம் கண்ட தோழர்களின் மகிழ்ச்சி ஆரவாரம் கடலிரைச்சல்போல் கேட்டது. "களத்திளிடையே நீங்கள் புகுந்தாலல்லவோ நாங்களும் உங்களைப் பின் தொடரத் துணிவோம்" எனத் தமக்கு உற்சாக மூட்டிய தோழர்களிடம் ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்கள் "என்னைத் தொடர்ந்து வர உங்களுக்குப் போதுமோ இருக்கும் துணிவு" என நகைச் சுவையாக உரையாடினார்கள். மறுகணமே அவர்களின் சாதனையையும் யர்மூக் போர்க்களம் கண்டது. எதிரிகளின் அணிகளிடையே அவர்கள் தம் வாளைச் சுழற்றிய வண்ணம் புகுந்தபோது அவர்களைத் தடுத்து நிறுத்த எவருமே முன்வரவில்லை. அவர்களின் வாள் வீச்சைக் கண்டு திகைத்த வண்ணமே எதிரிகளில் ஒவ்வொருவரும் நிற்க, தன்னந் தனியராகவே எதிரிகளின் பின்னணி வரை சென்று விட்டனர் ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்கள். மீண்டும் திரும்பும்போதே அவர்கள் எதிரிகளால் சூழப்பட்டனர். அச்சமயம் நடைபெற்ற போரில் அவர்களின் கழுத்துச் சரிவில் இரண்டு வடுக்கள் மிக ஆழமாக விழுந்திருந்தன. 'அவ்விரண்டுக்குமிடையே மற்றொரு பெரும் வடுவும் இருந்தது. அது பத்ருப் போரில் ஏற்பட்டது. அவை மூன்றிலும் நாங்கள் எங்கள் விரல்களைப் புகுத்தி விளையாடுவோம்' என அவர்களின் இளைய மகனார் ஹழ்லரத் உர்வா இப்னு ஸுபைர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

அவர்களின் உடலில் மேலும் எண்ணிலா வடுக்களைக் கண்டு ஒரு பெரியார் வியந்தபோது, ''ஆண்டவனின் மீதாணையாக அவற்றில் ஒன்றைக்கூட அண்ணலார் (ஸல்) அவர்களின் புறம் நின்று போர் புரிந்தேயல்லாமல் நான் பெறவில்லை'' என ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

மிஸ்ரு படையெடுப்பின்போது தலைநகரில் மன்னர் முகவ்கிஸ் பலமான பாதுகாப்போடு அமர்ந்திருந்த கோட்டையை நெடுநாட்கள் முற்றுகையிட்டும் கைப்பற்ற முடியாத நிலையில் கலீஃபா உமர் (ரலி) அவர்களிடம் உதவிப்படை அனுப்பக்கோரி ஹழ்லரத் அம்ர் இப்னுல் ஆஸ் (ரலி) அவர்கள் எழுதினர். அவ்வஞ்சல் கண்டு பதினாயிரம் படைவீரர்களைத் திரட்டி நான்கு தளகர்த்தர்களையும் உடன் சேர்த்து அனுப்பிய கலீஃபா அவர்கள், ஹழ்லரத் அம்ர் (ரலி) அவர்களுக்கு எழுதிய பதிலில் 'படைகளோடு அனுப்பப்பட்டுள்ள நான்கு தளகர்த்தர்களில் ஒவ்வொருவரும் ஒவ்வோராயிரம் வீரர்களுக்குச் சமமானவராவர். ஆக நான் எண்ணாயிரம் வீரர்களை உமக்கு உதவியாக அனுப்பியுள்ளேன்' எனக் குறிப்பிட்டிருந்தார்கள். அந் நாற்பெரும் தளகர்த்தர்களில் தலையானவராக ஹழ்லரத் ஸுபைர் இப்னு அவ்வாம் (ரலி) அவர்கள் விளங்கினர். படைகள் எகிப்துக்கு வந்து சேர்ந்தபோது ஹழ்லரத் அம்ர் இப்னுல் ஆஸ் (ரலி) அவர்கள் போரில் ஈடுபட்டிருந்த தம் படையினரையும் உதவிப் படையாக வந்த அப்பதினாயிரம் வீரர்களோடிணைத்து ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்களையே அனைவருக்கும் தலைவராக்கி, போர்க்களத்தை முழுமையாக அவர்களிடமே ஒப்படைத்தார்கள்.

கோட்டையைச் சுற்றி வந்த ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்கள் அதனை வெற்றி கொள்வது எவ்வளவு கடினம் என்பதை நிதானித்தனர். பலத்த முன்னேற்பாடுகளுடன் எதிரிகள் தாழிட்டமர்ந்திருந்த அக்கோட்டையின் வாயில் கதவு திறக்கப்படாமல் வெற்றிக்கு வழியே இல்லை என்

பதை உணர்ந்த அவர்கள் உள்ளம் சோர்வுற்றிடவில்லை; தங்களின் படைவீரர்களை கோட்டைக்கு எதிராக அணி வகுக்கச் செய்து அவர்களிடை உணர்ச்சிமிகு ஒரு சொற் பொழிவாற்றினர். 'இஸ்லாத்திற்காக இன்றையதினம் எவ்விதம் என்னை அர்ப்பணிக்கப்போகிறேன் என்பதை இப்போது நீங்கள் காண்பீர்கள்' எனக் குறிப்பிட்டு வீரர் களுக்கு உணர்வூட்டிய அவர்கள் கோட்டையின் மதில்மேல் ஓர் ஏணியை சாற்றச் செய்தார்கள். அதன் மூலம் மதில் மேல் துணிவுடன் ஏறி நின்று ''அல்லாஹு அக்பர்'' என ஓங்கார முழக்கமிட்டார்கள். இவர்களின் பெருங்குரல் கேட்டவர்களைக் கதிகலங்கச் செய்தது. எதிரே நின்ற இஸ்லாமியப் படையும் 'தக்பீர்' முழக்கத்தை எதிரொலித் தது. அல்லாஹ்வின் அருள்நாமம் எதிரிகளின் செவிப் பறைகளைக் கிழித்தது. காவல் வீரர்கள் திடுக்கிட்டவர் களாகத் திகைத்து நின்றனர். அதே நிலையில் தன்னந் தனியாகவே கோட்டைக்குள் குதித்துவிட்ட ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்கள் வீரர்களோடு போராடிய வண் ணமே வாசலை நெருங்கி காவலர்களைக் கொன்று கோட் டையின் கதவுகளைத் திறந்துவிட்டார்கள். எதிரே காத் திருந்த முஸ்லிம் படையினர் மளமளவென உள்ளே பாய்ந்து வரக் கண்ட மன்னர் முகவ்கிஸ் அதற்குமேல் தம் படையினரை போராடச் செய்வது அறிவுடைமையல்ல என முடிவு செய்து சரணடைந்தார்.

போர்த்தந்திரத்தில் அரபு நாட்டில் புகழ்பெற்ற ஹழ் லரத் அம்ர் இப்னுல் ஆஸ் (ரலி) அவர்களும் கூட மாதக் கணக்கில் தம் சாகஸத்தால் வெல்ல முடியாத அக்கோட் டையை ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அத்துணைத் துரித மாக வென்றது கண்டு வியப்புற்றனர்.

தமக்குப்பின் கிலாஃபத்தை ஏற்க கலீஃபா உமர் (ரலி) அவர்களால் தெரிந்தறிவிக்கப்பட்ட அறுவருள் ஒருவராக இருந்த ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்கள், ஹழ்லரத் அலீ (ரலி) அவர்களுக்காதரவாக தாங்கள் போட்டியினின்றும்

பெற்றுக் கொள்,'' என்றவர்களாக முகந்திருப்பிக் கொண்டார்கள் கலீஃபா. அவர்களின் பேச்சுகளும் ஏச்சுகளும், தன் பிரதாபத்துக்குப் பட்டயம் தேடி வந்த ஜர்மூஸின் மூளையையே பேதலிக்கச் செய்துவிட்டன. ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்களைக் கொன்ற தன் வாளினாலேயே தன் வயிற்றிலும் குத்திக் கொண்டு செத்து மடிந்தானவன்.

ஏறத்தாழ அறுபத்து ஐந்து வயதுகளைக் கடந்த அம் முது பெருந் தோழரின் புனித உடல் முதலில் 'வாதியுஸ் ஸிப்ஃபாஹ்' என்ற இடத்தில் அடக்கம் செய்யப்பட்டு பின்னர் அவர்களின் மக்களால் பூரண கண்ணியத்தோடு எடுத்து வரப்பட்டு பஸரா நகரில் அடக்கம் செய்யப்பட்டது.

ஆரம்ப காலத்திலேயே அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் கரம் பற்றி, தம் துணிவினாலேயே அவர்களுக்குத் துணை நின்று, சுவனவாசி என புவன வாழ்விலேயே அப்பெருமானாரின் திருவாயால் அருள்வாக்கு பெற்ற ஹழ்லரத் ஸுபைர் இப்னு அவ்வாம் (ரலி) அவர்கள் சிறந்த இறையச்சங் கொண்டவர்களாகவும் நாணயமிக்கவர்களாகவும் விளங்கினார்கள். அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் பிரிவுக்குப்பின் கால் நூற்றாண்டு காலம் வரை வாழ்ந்திருந்துப் அவர்கள் அண்ணலார் (ஸல்) அவர்களின் முப்பத்தெட்டே ஹதீஃஸ்களை அறிவித்திருப்பதற்குக் காரணம் அவர்களின் இறையச்சமும் அண்ணலார் (ஸல்) அவர்களின்பால் அவர்கள் கொண்டிருந்த மரியாதையுமேயாகும்.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களாலும் அவர்களுக்குப் பின் கிலாஃபத்தை ஏற்ற ஹழ்லரத் அபூபக்கர், உமர் (ரலி) ஆகியவர்களாலும் பிரித்தளிக்கப்பட்ட பல நிலங்கள் அவர்களுக்கிருந்தன, அவையன்றி மதீனாவில் பதினொன்றும் பஸராவில் இரண்டும் கூஃபாவில் ஒன்றும் எகிப்தில் ஒன்றுமாக பதினைந்து வீடுகளும் அவர்களுக்குடையனவாயிருந்தன. வாணிபத்திலும் திறனுடையவராக

விளங்கிய அவர்களிடம் ஓராயிரம் அடிமைகள் வரை இருந்தனர். எனினும் அவ்வடிமைகள் உழைத்துக் கொணர்ந்து சேர்க்கும் பணத்தில் ஒரேயொரு காசையும் கூட அவர்கள் தமக்கென ஏற்காமல் வறுமைப்பட்டோர்க்கு வழங்கியுதவினார்கள். இவர்களின் நாணயத்தின் காரணமாக மக்கள் தங்களின் பொருள்களை இவர்களிடம் அமானிதமாக ஒப்படைப்பர். இவர்களோ அவற்றை அமானிதமாக ஏற்க மறுத்து கடனாகவே ஏற்று அவற்றைக் கொண்டும் துயருற்றோருக்கு உதவினார்கள். இப்பழக்கத்தால் அவர்களுக்கு ஏற்பட்ட கடன் தொகையே மரணத் தறுவாயில் இருபத்து இரண்டு லட்சம் திர்ஹம்களாக உயர்ந்திருந்தது.

ஏறத்தாழ ஐந்து கோடியே இரண்டு இலட்சம் திர்ஹங்களுக்குண்டான சொத்துக்களை உடைமை கொண்டிருந்த இவ்வளமார் தோழர், ஒட்டகைப் போரிலிருந்து விடுபட்ட சமயம் அவையனைத்தின் பொறுப்புகளையும் தங்களின் தலைமகனார் ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் (ரலி) அவர்களிடம் ஒப்புவித்து அச் சொத்துக்களிலிருந்தே தங்களுக்கிருந்த இருபத்து இரண்டு இலட்சம் திர்ஹக் கடன்களையும் தீர்த்து, எஞ்சுவதில் மூன்றிலொரு பங்கை ஹழ்ரத் அப்துல்லாஹ் (ரலி) அவர்களை எடுத்துக் கொள்ளுமாறும் மீதியை மற்றவழிவாறுகளுக்குப் பங்கிட்டு அளித்து விடுமாறும் பணித்துப் புறப்பட்டார்கள். அவ்வாறே அவர்களின் மரணத்துக்குப் பின் ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் (ரலி) அவர்கள், மதீனாவில் ஒரு தோட்டத்தை விற்றே அக்கடன்களைத் தீர்த்ததோடன்றி, தொடர்ந்து நான்காண்டுகள் வரை ஹஜ்ஜுக்காக மக்கள் கூடும் சமயங்களிலெல்லாம் தம் தந்தையாருக்கு எவரும் கடன் தந்திருப்பின் தம்மிடமிருந்து அதனைப் பெற்றுக் கொள்ளலாம் எனப் பகிரங்கமாக அறிவித்து வந்தனர். அவ்வாறு எல்லாக் கடன்களையும் தீர்த்து நான்கு ஆண்டுகளுக்குப் பின் எஞ்சிய சொத்துக்களை அவர்களின் வாக்குப்படியே பிரித்தளிக்கப்பட்ட போது

ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்களின் நான்கு மனைவி யருள் ஒவ்வொருவரும் பனிரண்டு லட்சம் தீனார்களைப் பெற்றனர்.

ஹிஜ்ரத்துடைய பயணத்தின்போது அண்ணல் பெருமான் (ஸல்) அவர்களுக்கும் தம் தந்தைக்கும் கட்டுணவு கட்டித் தந்த அஸ்மா பின்த்து அபூபக்கர் (ரலி) அவர்களோடேயே தம் இல்லற வாழ்வைத் துவக்கிய ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்கள் பிந்திய நாட்களில் வெவ்வேறு தருணங்களில், ஹழ்லரத் காலித் இப்னு ஸஈதிப்னுல் ஆஸ் (ரலி) அவர்களின் மகளார் உம்முகாலித், ரபாப் இப்னு உனைஃப், ஸைனப் பின்த்து மர்ஃஸத், உம்மு குல்ஃஸூம் பின்த்து உக்பா, ஹிலால் பின்த்து கைஸ், ஸைத் இப்னு அம்ரு இப்னு னவ்ஃபலின் மகளார் ஆத்திகா (ரலி) ஆகிய அறுவரையும் மணந்தனர். அவ்வெல்லா மனைவியர் மூலமும் ஒன்பது ஆண் மக்களும் ஒன்பது பெண்மக்களும் பிறந்தார் கள். அவ்வாண் மக்களில் அப்துல்லாஹ், உர்வா, முஸ்அப், முன்திர் என்ற நால்வரே தங்களின் வீரத்தாலும் வணக்க வழிபாடுகளாலும் வரலாற்றில் இடம் பெற்றனர்.

மாபெரும் வீரராக விளங்கிய ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் (ரலி) ஹிஜ்ரி 66-ம் ஆண்டில் ஸிரியாவைத் தவிர்த்த மற்ற இஸ்லாமிய பூமியின் கிலாஃபத்தையும் ஏற்றிருந்தனர். ஏறத்தாழ ஒன்பதாண்டு காலம் கிலாஃபத் நடத்திய பின்னர் அப்துல் மலிக் இப்னு மர்வானின் படைத் தளபதி ஹஜ்ஜாஜ் இப்னு யூஸுஃபால் மக்க நகரம் சூழப் பட்டபோது வீரப்போர் புரிந்து ஹரமிலேயே உயிரிழந்தனர்.

ஆயிஷா நாயகியாரின் பராமரிப்பில் வளர்ந்த ஹழ்லரத் உர்வா இப்னு ஸுபைர் (ரலி) மாபெரும் 'ஃபக்கீஹ்' ஆக —மார்க்க அறிஞராக—விளங்கி ஞானக் கலை வளர்ப்பதி லேயே தங்கள் காலத்தைக் கழித்தனர். அவர்கள் மூல மாக அண்ணலார் (ஸல்) அவர்களின் அநேக அருள் மொழி களை உலகம் செவியுற்றுள்ளது.

முஸ்அப் இப்னு ஸுபைர் மிகச் சிறந்த வீரராக விளங்கினர். காரிஜீக்களோடு நடந்த பல போர்களில் இவர்களின் பங்கு கணிசமானது. தம் தமையனார் அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் (ரலி) அவர்களின் மரணத்துக்குப்பின் ஹஜ்ஜாஜோடு கடுமையாகப் போராடிய இவர்கள் இறுதியாக அப்துல் மலிக் இப்னு மர்வானின் படைகளோடு நடத்திய போரில் கொல்லப்பட்டுப் போயினர்.

இவர்கள் யாவரிலும் ஹழ்லரத் அப்துல்லாஹ் (ரலி) அவர்களின் மீதே ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்கள் தனியொரு பாசம் கொண்டிருந்தனர். இதற்குக் காரணம் தம்மைப் போன்றே அத் தனையரின் பால் இயற்கையிலேயே அமைந்திருந்த அசாத்தியத் துணிச்சலே எனவும் கூறலாம்.

"அகழ்ப்போரின்போது நான் பெண்களோடும் குழந்தைகளோடும் ஒப்படைக்கப் பட்டிருந்தேன், (அச்சமயம் அவர்களின் வயது ஏறத்தாழ மூன்று) என்னோடு அம்ரு இப்னு அபீஸலமாவும் இருந்தார். அவர் வளைந்து நிற்க நான் அவர் முதுகிலமர்ந்து வெளியில் நடப்பவற்றைப் பார்த்துக் கொண்டிருந்தேன். என் தந்தையார் பாய்ந்து பாய்ந்து பல புறமும் திரும்பிக் கொண்டிருந்தனர். அவருக்கு எதிர்ப்பட்டவையெல்லாம் தாக்கப்பட்டவண்ணமிருந்தன. மாலை ஆனது. என் தந்தையார் எங்கள் இருப்பிடத்துக்கு வந்த போது அவரிடம் சென்ற நான் 'தந்தையே! இன்று தாங்கள் செய்ததையெல்லாம் நான் பார்த்துக் கொண்டிருந்தேன்'' என்று கூறினேன். அதனைச் செவியுற்ற என் தந்தை மகிழ்ந்தவர்களாக 'என் தந்தையும் தாயும் உனக்கர்ப்பணம்' என்று கூறி என்னை வாழ்த்தினார்கள்"—என ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் (ரலி) தம் தந்தையார் தம் பால் காட்டிய அன்புக்கு அடையாளம் கூறுகிறார்கள்.

'யர்மூக்' போர்க்களத்துக்கு ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்கள் வந்தபோது ஹழ்லரத் அப்துல்லாஹ் (ரலி) அவர்களையும் அழைத்து வந்திருந்ததாக அவர்கள் அறிவிக்கிறார்

கள். அச்சமயம் ஹழ்லரத் அப்துல்லாஹ் (ரலி) அவர்களின் வயது ஏறத்தாழ பத்தேயாகும்.

தம் மக்களனைவரையுமே சிறந்த இறையச்சத்தோடு வளர்த்த ஹழ்லரத் ஸுபைர் (ரலி) அவர்கள் ஒட்டகைப் போருக்கு முன் தம் தலை மகனார் ஹழ்லரத் அப்துல்லாஹ் (ரலி) அவர்களுக்குத் தாம் செய்த இறுதியுபதேசத்திலும், ''மகனே! இந்த என் உடமைகளும் போதாத அளவு உனக்குத் தேவைகள் மிகைத்து விடுமானால் என் எஜமானனிடமே உதவி தேடிப் பெறு'' என்றார்கள். ''தந்தையே தங்களின் எஜமானனோ! யார்?'' என ஹழ்லரத் அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் வியப்புடன் கேட்ட போது, ''அல்லாஹ்வே என் எஜமானன்; என் துன்பங்களனைத்திலும் எனக்கு உதவியவன்; என் துயரங்களனைத்தையும் போக்கியவன்'' என்றார்கள் அம்மா நபித்தோழர்.



### ஹழ்லரத்

# தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் (ரலி)

ஹிஜ்ரி முப்பத்து ஆறாம் ஆண்டு ஜமாதுல் ஆகிர் மாதம் இருபதாம் நாளன்று நடைபெற்ற ஒட்டகைப் போர் ஓய்ந்து விட்டிருந்தது. ஓர் அரை நூற்றாண்டை நிறைவுபடுத்த நெருங்கிக் கொண்டிருந்த இஸ்லாமிய வரலாற்றில் அதுவரை நடந்திருந்த எத்தனையோ போர்களுக்கு எதிர் மாற்றமாக முதல் முதல் நடைபெற்ற வியத்தகு போர் அது! செயற்கை மலைகளாய்ச் சேர்ந்து நின்று தங்களின் வைரிகளைச் சதுராடிய புதிய சரித்திரக்காரர்கள், தங்களின் வாட்களால் தங்களின் உடன் பிறப்புகளையே வெட்டிச் சாய்த்திருந்தனர் அப்போர்க்களத்தில்.

போர் முடிந்து படைகள் பிரிந்து விலகி நின்றிருந்தன. கலீஃபா ஸையிதினா அலீ (ரலி) அவர்கள் களநடுவே உலவிக் கொண்டிருந்தார்கள். அன்றைக்கும் வெற்றியாளர் அவர்களே. என்றாலும் அதற்குரிய பெருமிதம் அணுவளவும் அவர்களின் திருமுகத்தில் காணப்படவில்லை! அகத்தின் சோர்வைப் பிரதிபலித்த முகத்தோடு—காரிருள் குடை நிழலில் குருதியில் தோய்ந்து கிடந்த—தங்கள் உற்ற சகோதரர்களின் உடல்களையெல்லாம் புரட்டிப் புரட்டி யாரைத் தேடுகிறார்கள் கலீஃபா?

ஆஹா! அதோ தெரிகிறது அவர்கள் தேடிக்கொண்டிருந்த திருமுகம்! உஹதுடைய போர்க்களத்தில் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களைக் கொல்ல வந்த வாளைத் தடுக்க உயர்த்தியபோது நான்கு விரல்களும் துண்டாகிப் பறந்து விட்டனவே—அந்தத் திருக்கரத்துக்குடையவரான ஹழ்லரத் தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் (ரலி) அவர்களின் அருள்முகம்.

அமைதியாக அருகே அமர்ந்து அக்கரத்தைத் தம் கரமேந்தி முகர்ந்த கலீஃபா ஸையிதினா அலீ (ரலி) அவர்களின் கண்கள் அழுதன. கிலாஃபத்தைத் தாம் ஏற்றபோது தம் கரத்தை முதன் முதலாகப் பற்றிப் பிரமாணம் செய்த திருக்கரமல்லவா அது? "அபா முஹம்மத்! எத்தனையோ போர்க்களங்களில் என் ஏந்தலரைக் காத்த உம் பொன்னுடலை விண்ணின் தாரகைகள் நகைக்க இந்த இரத்தத் தடாகத்தில் காண நேரும் என நான் நினைக்கவே இல்லையே'' என்ற கலீஃபா அவர்களின் இதயமும் கசிந்தது.

ஆம்! அவர்கள் இருவருமே மாநபி (ஸல்) அவர்களின் தோழமையில் சமகாலம் தழைத்தெழுந்தவர்கள்; அப்பெருமானின் திருக்கரம் பற்ற முந்திக் கொண்டவர்கள்; மேலான முஹாஜிர்கள்; சுவனவாசிகளே என அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களால் புவன வாழ்விலேயே வாக்களிக்கப் பெற்றவர்கள். என்றாலும் அன்று வஞ்சகர்கள் வகுத்த சூழ்ச்சி மாறுபாடால்—உருவான அரசியல் கருத்து வேறுபாடால்—எதிரெதிராகக் களம் காண நின்றார்கள். கலீஃபா அலீ (ரலி) அவர்களின் சமாதான முயற்சிகளைத்துக்கும் பின்னரும் ஹழ்லரத் தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் (ரலி) அவர்களின் கொலை—விதிக்கப்பட்ட இறைவனின் கற்பனை—தவிர்க்கப்படவே முடியாததாகி விட்டது!

ஆரம்பகாலத்திலேயே இஸ்லாத்தை ஏற்ற அருந் தோழர்களில் ஹழ்லரத் தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் அவர்களும் ஒருவராவர். தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் இப்னு உஃஸ்மான் இப்னு அம்ரு என்று இவர்களின் பாரம்பரியம் ஹழ்லரத் அபூ பக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களின் பாரம்பரியத்தோடு இணைகிறது. மாநபித்தோழர் ஹழ்லரத் அளா ஹழ்ளரமீ (ரலி) அவர்களின் உடன் பிறந்த ஸ~அபா பின்த்து ஹழ்ளரமீ அவர்களே ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்களின் அன்னையார்.

இளமையிலேயே தந்தையை இழந்து விட்டிருந்த ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் மிகச் சிறு பிராயத்தி

லேயே வாணிபத்தில் ஈடுபடவேண்டிய நிர்ப்பந்தத்துக்குள்ளாயினர். அச்சமயத்தில் ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் வழி காட்டுதல்கள் அவர்களுக்கு மிக இன்றியமையாதவையாக உதவின. குரைஷிகளில் ஒரு பெரும் வணிகராய்த் திகழ்ந்த ஹழ்லரத் அபூ பக்கர் (ரலி) அவர்களின் மேதையையும் அரபுகளைப் பற்றி அன்னவர்கள் கொண்டிருந்த பூர்வோத்திர அறிவு பற்றியும் உணர்ந்திருந்த இளைஞர் தல்ஹா (ரலி) அவர்கள், வாணிபச் சம்பந்தமில்லாத மற்ற நேரங்களிலும் அவர்களோடமர்ந்து உரையாடுவதுண்டு. அத்தகைய வாலாயமுடைய ஒரு நாளில்தான் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் சிறப்புகள் பற்றியும் அவர்கள் ஏற்று வந்துள்ள தூதுத்துவத்தின் சிலம் பற்றியும் ஹழ்லரத் அபூ பக்கர் (ரலி) அவர்கள் மூலம் கேட்டறிய அவர்களுக்கு வாய்ப்பு கிட்டியது.

இஸ்லாத்தைத் தாங்கள் ஏற்க நேர்ந்த அனுபவத்தை ஹழ்லரத் தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் (ரலி) அவர்களே விவரித்தார்கள். சிறு பிராயத்தினராகவே அவர்கள் ஒரு வாணிபக் குழுவோடிணைந்து ஸிரியாவுக்குச் சென்றிருந்த போது அவ்வாணிபக் குழு 'புஸ்ரா'வில் முகாமிட்டிருந்தது. அக்குழுவைச் சார்ந்த முதிர்ந்த அனுபவமுடைய வணிகர்கள் புஸ்ராவின் சந்தையில் உலவிக் கொண்டிருந்த அதே நேரம் அவர்களோடு வந்திருந்த ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் வாணிபத்தில் இன்னும் போதிய தேர்ச்சி அடையாததால் மட்டுமல்ல, இயல்பிலேயே அவர்களுக்கு அமைந்திருந்த சில சுபாவங்களால் தனித்தே இருந்தனர்.

பல்வேறு திக்குகளிலிருந்து வரும் வணிகர்களும் கலந்து உரையாடும் ஒரு சந்திப்பில் ஒரு கிருஸ்துவப் பாதிரியார் "புனித (மக்கா) நகரிலிருந்து வந்தவர் உங்களில் எவரேனும் உள்ளனரோ?" என விசாரித்தார். ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் அவருக்கருகிலேயே நின்றிருந்ததால் "நான் மக்காவைச் சார்ந்தவனே" என பதிலளித்தார்கள்.

''உங்களில் அஹமதென்பவர் தோன்றி விட்டனரோ'' என கேட்டார் அப்பாதிரியார்.

''யார் அந்த அஹமத்?'' என தல்ஹா (ரலி) அவர்கள் அவரையே திருப்பிக் கேட்டார்கள்.

''அப்துல்லாஹ் இப்னு அப்துல் முத்தலிபின் மகனார் —இறைவனின் இறுதித் தூதர் அவரே யாவார். உங்களுடைய அந்தப் பூமியை விட்டும் வெளியேறி மலைகளால் சூழப்பட்ட, பேரீத்தந் தோட்டங்களும், நீர்ச்சுனைகளும் நிறைந்த ஓர் இடத்தில் அவர் குடியேறுவார். அவர் தோன்ற வேண்டிய காலம் இதுவே. எனவே அவர் தோன்றியே இருக்கவேண்டும். ஒருக்கால் அவர் தோன்றியிருப்பாரானால், ஓ இளைஞரே! அவரைப் பின்பற்ற நீர் தவறிவிட வேண்டாம்'' என்றெல்லாம் அறிவுறுத்தினார் அப்பாதிரியார்.

மக்காவை விட்டும் ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் புறப்பட்ட நாள் வரையிலும் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் தங்களின் நுபுவ்வத்தைப் பற்றிய பிரகடனம் எதையும் வெளியிட்டிருக்கவில்லை. எனவே ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் அப்பாதிரியாருக்கு எவ்வித மறுமொழியும் தரவில்லை. எனினும் பாதிரியாரின் அறிவுரைகள் ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்களின் சிந்தனையைப் பற்றத் தவறவில்லை. வாணிபக் கூட்டத்தை விட்டும் அவர்கள் அத்துடனேயே பிரிந்து மக்காவை நோக்கி விரைந்து திரும்பினார்கள். இடையிலேயே ஹழ்லரத் உஃஸ்மான் (ரலி) அவர்களைச் சந்திக்க வாய்ப்புக் கிடைத்தது அவர்களுக்கு. ஹழ்லரத் உஃஸ்மான் (ரலி) அவர்களுக்கும் அஹமதரைப் பற்றிய வேறொரு அனுபவம் கிடைத்திருந்தது. இருவரும் தங்களுக்கேற்பட்ட அனுபவங்களைப் பற்றிப் பரிமாறிக் கொண்டு தாய் நகரம் வந்தடைந்தனர்.

இல்லம் அடைந்ததுமே ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் தங்கள் வீட்டாரிடம் முதற்கேள்வியாக 'புதிய செய்திகள் ஏதேனும் உள்ளனவோ?' என விசாரித்தார்கள்.

''ஆம்! அப்துல்லாஹ்வின் மகனார் முஹம்மது (ஸல்) தம்மை இறைவனின் தூதர் என கூறிக் கொள்கிறார். அபூ குஹாஃபாவின் மைந்தர் அபூ பக்கரும் அதனை ஏற்று அவர் பின்னயே நடக்கிறார்'' என்றறிவித்தனர் வீட்டார்.

ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் பெயர் கேட்டதுமே ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்களின் உள்ளம் ஆறுதலடைந்தது. நேராக அவர்களிடமே சென்று புஸ்ராவின் பாதிரியார் கூற, தாம் செவியுற்ற செய்திகளனைத்தையும் கூறினார்கள் ஹழ்லரத் தல்ஹா (ரலி).

''ஆம், அவையனைத்தும் உண்மைதான்'' என கூறிய ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்கள், அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் சிறப்புகள் யாவற்றையும் அவர்களுக்கு எடுத்தோதி, ''நீரும் அவர்களின் நல்லுரை கேட்டு இஸ்லாத்தில் இணைய வாரும்'' என்றழைத்தார்கள். அக்கணமே ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் ஹழ்லரத் அபூ பக்கர் (ரலி) அவர்களோடிணைந்து பெருமானார் (ஸல்) அவர்களின் புனித சந்நிதானத்துக்கு ஏகி இஸ்லாத்தை ஏற்றார்கள். அச்சமயம் அவர்களின் வயது பதினைந்து. ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களால் இஸ்லாத்தில் இணைக்கப் பெற்றவர்களில் ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் மூன்றாமவராவர்.

ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் இஸ்லாத்தில் இணைந்த செய்தி குடும்பத்தார்களின் இதயங்களை இடி போல் தாக்கியது. முதியவர்கள் பலரும் தங்கள் அறிவுரைகளால் அவர்களை அதனை விட்டும் வெளியேறச் செய்ய பல நாட்கள் முயன்றனர். அம்முயற்சிகள் அனைத்தும் பயனற்றுப் போனபோது பல கொடுமைகளும் அவர்களுக்கிழைக்கப்பட்டன. அவர்களின் சிறிய தந்தை னவ்ஃபல் இப்னு உஃஸ்மானிடத்தில் குரைஷிகள் சென்று 'உம் உடன் பிறந்தார் மகன் தல்ஹாவை அபூபக்கர் வழிகெடுத்து விட்டார்' எனக் கூறியதே தாமதம், 'விட்டேனா பார் அபூ பக்கரை' என வீறுகொண்டெழுந்தார் னவ்ஃபல். இரு

வருமே தைமீ கோத்திரத்தைச் சார்ந்திருந்ததால் ஹழ்லரத் அபூபக்கரைத் தொட்டிழுக்க னவ்ஃபல் எவருக்கும் அஞ்ச வேண்டிய அவசியமில்லாதாகி விட்டது. ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களையும் ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்களையும் ஒன்றாகக் கட்டிப் பிணைத்து மக்காவின் வீதிகளில் அடித்தடித்து விரட்டிச் சென்றார் னவ்ஃபல்.

ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்றதால் மிகுதமான வெறுப்படைந்தவர் அவர்களின் அன்னையே. ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்களின் கைகள் தலையோடு பிணிக்கப்பட்டு வீதியில் அடித்து விரட்டிச் செல்லப்பட்டதையும் அவர்களின் பின்னே ஒரு பெண்மணி அவர்களை ஏசிக்கொண்டே சென்றதையும் தாம் கண்டதாகவும், அப்பெண்மணி யாரென தாம் விசாரித்தபோது அவர்களின் அன்னை 'ஸஃஅபா பின்த்து ஹழ்ளரமீயே' என கூறப்பட்டதாகவும் மஸ்ஊத் இப்னு கர்ராஷ் என்ற பெரியார் அறிவிக்கின்றனர்.*

எவ்விதக் கொடுமைகளுக்கும் அசையாத உறுதியுடன் ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் தம் வாணிபத்தில் ஈடுபட்டவண்ணம் பனிரண்டு ஆண்டு காலமும் மக்காவிலேயே வாழ்ந்து வந்தார்கள். அண்ணலார் (ஸல்) அவர்கள் தம்

---

* எனினும் அவ்வம்மையாரும் பின்னர் இஸ்லாத்தை ஏற்று நெடுங்காலம் உயிர் வாழ்ந்ததாகவும் கலீஃபா உஃஸ்மான் (ரலி) அவர்களின் இல்லத்தைக் குழப்பவாதிகள் சூழ்ந்து நின்ற சமயம் அவ்வம்மையார் தம் மைந்தர் தல்ஹா (ரலி) அவர்களைச் சந்தித்து கலீஃபா அவர்களுக்கு உதவியாக நின்று குழப்பக்காரர்களை விரட்டும்படி ஏவியதாகவும், அச்சமயம் ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் அறுபது வயதுகளைக் கடந்திருந்ததால் அவர்களின் அன்னையாரின் வயது எண்பதாக இருக்கலாம் என்றும் இமாம் புஹாரீ (ரஹ்) அவர்கள் தரும் ஒரு குறிப்பிலிருந்து அறிய முடிகிறது.

தோழர் அபூபக்கர் (ரலி) அவர்களுடன் மக்காவைத் துறந்து வெளியேறிய சமயமும் ஸிரியாவுக்கு வாணிப நிமித்தம் சென்றிருந்த ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் தாயகம் திரும்பும் இடைவழியிலேயே அவ்விருவரையும் சந்தித்தார்கள். ஸிரியாவின் சந்தையில் தாம் வாங்கிய ஆடைகளில் அவ்விருவருக்கும் அன்பளிப்புகளும் செய்ததோடு அவர்களின் வரவுக்காக யத்ரிப் வாசிகள் வழி மேல் விழிவைத்து காத்திருக்கும் செய்தியையும் கூறினார்கள். அதுகேட்டு மகிழ்ந்த இறை தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழருடன் மதீனா நோக்கிச் செல்ல, மக்கா வந்தடைந்த ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் தம் வாணிபக் கொடுக்கல் வாங்கல்கள் அனைத்தையும் முடித்து, அச்சமயம் இஸ்லாத்தை ஏற்று விட்டிருந்த தம் தாயாருடனும் குடும்பத்தாருடனும் ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் குடும்பத்தாரையும் அழைத்துக் கொண்டு மதீனா சென்றடைந்தனர். அங்கு அவர்கள் முதலில் அஷ்அத் இப்னு ஸராரா (ரலி) அவர்களின் விருந்தினராகத் தங்கிய போதிலும் பின்னர் பெருமான் நபி (ஸல்) அவர்களால் கஅப் இப்னு மாலிக் (ரலி) அவர்களின் உடன்பிறந்தாராகப் பிணைக்கப் பட்டார்கள்.

மதீனாவில் குடியேறிய இரண்டாம் ஆண்டில் நடைபெற்ற பத்ருப்போர் தவிர்த்த மற்றெல்லாப் போர்களிலும் ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் பங்கேற்றிருக்கிறார்கள். பத்ருப் போரின்போது அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்களையும் ஹழ்லரத் ஸஈது இப்னு ஜைத் (ரலி) அவர்களையும் ஸிரியாவிலிருந்து மக்கா திரும்பிக் கொண்டிருந்த குரைஷிகளின் வாணிபக் கூட்டத்தைப் பற்றி துப்பறிந்து வரப் பணித்து அனுப்பியிருந்தார்கள். அவ்வாணிபக் கூட்டம் கடற்கரையோரமாகவே சென்று மக்கா சேர்ந்துவிட்ட செய்தியோடு அவ்விருவரும் மீண்டு வந்த சமயம் பத்ருப்போர் நடந்து முடிந்துவிட்டிருந்தது. எனினும் அண்ணலார் (ஸல்) அவர்கள் போரில் கிடைத்த

வெற்றிப் பொருள்களில் மற்றவர்களுக்களித்த பங்குகளைப் போன்றே தம் அவ்விரு தோழர்களுக்கும் அளித்ததோடன்றி அவ்விருவரும் அல்லாஹ்வின் தூதரின் கட்டளையின் படியே சென்றிருந்ததால் பத்ருப்போரில் பங்கேற்ற மற்றவர்களுக்குண்டானதே போன்ற மறுமைப் பேற்றைப் பற்றியும் அவர்களுக்கும் நன்மாராயம் கூறினார்கள்.

பத்ருப்போரில் தவறிவிட்ட வாய்ப்புகளுக்கும் பகரமாக உஹதுப் போரில் சாதனை படைத்த ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்களின் தீரமும் தியாகமும் பெரும் புகழ் படைத்தது. அந்த உஹதுப் போர்க்களமே சுவனப் பெரும் பேற்றை அவர்களுக்குச் சொந்தமாக்கித் தந்தது. துவக்கத்தில் முஸ்லிம்களுக்கு வெற்றிமுகம் காட்டிய அச்சமர்க்களம் அமர்க்களமாகி ஸஹாபாப் பெருமக்கள் பலபுறமும் சிதறிப் பிரிந்து விட்ட ஒரு சந்தர்ப்பத்தில் தன்னந்தனியே நின்ற அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களைச் சூழ்ந்தவர்களாகப் பதினோரு அன்ஸார்கள் நின்று போராடினர். அவர்களோடு பனிரண்டாமவராகச் சேர்ந்து நின்ற ஒரேயொரு முஹாஜிர் ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்களே. அச்சமயம் பெருமானார் திருநபி (ஸல்) அவர்கள் ஒரு மேட்டை நோக்கிச் செல்ல அவர்களையே தங்கள் குறிப்பொருளாகக் கொண்டு குரைஷியர்களின் ஒரு கூட்டம் பாய்ந்தது. அக்கூட்டத்தினரின் தாக்குதலைத் தடுத்து நின்று ஒருவர் பின் ஒருவராய்ப் பதினோரு அன்ஸாரித் தோழர்களும் தங்கள் புனித உயிர்களைப் பலி தந்துவிட்ட நிலையிலும், மின்னிய வாட்களுக்கிடையே தம் அண்ணலரை கண்ணெனப் போற்றி முன்னும் பின்னுமாக வலமும் இடமுமாகச் சுற்றிச் சுழன்று நின்றனர் ஹழ்லரத் தல்ஹா (ரலி). அச்சமயம் தம் உடலில் ஐம்பத்தேழு வெட்டுகளைப் பெற்று நின்ற ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்களை வரலாறு 'உஹதுடைய வீர நாயகர்—'HERO OF OHAD' என்றே போற்றுகிறது.

மழையாய்ப் பொழிந்த அம்புகளைத் தாங்க தம் நெஞ்சத்தையே கேடயமாக்கி நின்ற ஹழ்ரத் தல்ஹா (ரலி) அவர்கள் பெருமான் நபி (ஸல்) அவர்களின் புறம் பாய்ந்து வந்த ஒரு வாளைத் தடுக்கத் தம் கரத்தை உயர்த்திய சமயம் அவ்வாளிடைப் பட்டு அவர்களின் கரத்திலிருந்து நான்கு விரல்களும் துண்டித்துப் பறந்தன. வேதனைக் குரலை வெளிப்படுத்தியே இருக்கவேண்டிய அத்தருணத்திலும் அவர்களின் திருவாய் 'மர்ஹபா—மர்ஹபா' என்ற மகிழ்ச்சி ஒலியை முழங்கியது! அதனைச் செவிமடுத்த நாயகத் திருமேனி (ஸல்) அவர்கள், ''அவ்வாறல்ல ஓ தல்ஹா! 'ஸுப்ஹானல்லாஹ்-அல்லாஹ்வே தூய்மையானவன்' என துதிப்பீராக'' என கற்பித்தார்கள். அதற்குள் எதிர்ப்பாராத புறமிருந்து ஹழ்ரத் தல்ஹா (ரலி) அவர்களின் சிரசின் மீது பட்ட இரு வாட்களின் தாக்குதலால் அவர்கள் மயக்கமுற்று வீழ்ந்து விட்டார்கள்.

போர் நின்ற சமயம் அங்கு வந்த ஹழ்ரத் அபூ பக்கர் (ரலி) அவர்களும் ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்களும் அண்ணலார் (ஸல்) அவர்களின் உடற்காயங்களுக்கு மருந்திடமுனைந்தபோது பெருமானார் (ஸல்) அவர்கள், 'என்னை விட்டு அதோ உங்கள் தோழரை முதலில் கவனியுங்கள்' என சுட்டிக் காட்டினார்கள். அங்கே ஹழ்ரத் தல்ஹா (ரலி) அவர்கள் ஒரு பள்ளத்தில் மயக்கமுற்றுக் கிடந்தார்கள். அவர்களின் உடலெங்கும் எழுபதுக்கும் மேற்பட்ட காயங்கள் இருந்தன. அவர்களின் ஒரு கரமே பழுதாகிவிட்டிருந்தது.

வெட்டுண்டு விழுந்த விரல்களை எடுத்து வரச் செய்து தங்கள் உமிழ் நீர் கொண்டு அவற்றை ஒட்டிச் சீராக்கி விட காரண நபிகளார் (ஸல்) நாடினார்கள். ஆனால் பழுதுபட்ட அக்கரத்தைப் பழுதுபட்டபடி காண்பதிலேயே பெருமை கொண்ட அத்தோழர், ''என் பாவங்களின் காரணமாக ஒருக்கால் நான் நரகின்பால் விரட்டிச் செல்லப் படுவேனாகில் அச்சமயம் இறைவனின் திருமுன் புகல்

பெற அவன் தூதரைக் காக்கப் பழுதுபட்ட இக்கரமே உதவுமன்றோ'' என விழைந்தவர்களாகத் தங்களின் கரங்களை பழுதுற்றவாறே இருக்கச் செய்தனர்.

போர் முடிந்தபின் பெருமானார் (ஸல்) அவர்கள் ஒரு மேட்டின் மீது ஏற முயன்றார்கள். மேலொன்றும் கீழொன்றுமாக இரண்டு இரும்புக் கவசங்களை அவர்கள் அணிந்திருந்தார்கள். அதன் காரணமாக ஏறுவதற்குச் சிரமமேற்படுவதை தல்ஹா (ரலி) அவர்கள் கண்டனர். உடலெங்கும் ரணகளமாகி, அதனால் ஏற்பட்ட வேதனையோடு, பழுதடைந்துத் தொங்கும் கரமும் ஒரு தங்கடம். எதனையும் பொருட்படுத்தாது நெஞ்சுரங் கொண்ட அந்நபிமணித் தோழர் படிபோல் வளைந்தமர, அவர்களின் புயமீதேறி மேட்டில் நிமிர்ந்த நபிகளார் (ஸல்) அவர்கள், ''தல்ஹா இன்று சுவனத்தை தம்மீது விதியாக்கிக் கொண்டார்'' என நன்மாராயம் கூறினார்கள்.



''பூமியின் மீது நடமாடும் உயிர்த்தியாகியைக் காண விரும்புபவர்கள் உபைதுல்லாஹ்வின் மகன் தல்ஹாவைக் காணுங்கள்'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் சுட்டிக் காட்டுவார்கள். உஹதுப் போர்க் களத்தில் வைத்தே அண்ணலார் (ஸல்) அவர்கள் தம்முடைய அத்தோழரை 'தல்ஹத்துல் கைர்—மேலான தல்ஹா' என சிலாகித்தார்கள், உஹதுப் போர் பற்றிய நினைவுகள் தோன்றுந்தோறெல்லாம் ஹழ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களும் 'அன்றைய நாள் தல்ஹாவுக்கே சொந்தமானதன்றோ' என புகழ்ந்தார்கள்.

அதன் பின்னரும் மக்க மாநகரம் வெற்றிக் கொள்ளப்படும் வரையிலான பல போர்களில் பெரும் பங்கேற்றனர்

ஹழ்லரத் தல்ஹா (ரலி). உஹுதுப் போரில் சூழ்ந்ததே போன்ற ஒரு சோதனை ஹுனைன் போரில் முஸ்லிம்களைச் சூழ்ந்தபோதும் இடம் பெயராது காலூன்றி நின்ற மிகச் சிலரில் ஒருவராகவும் அவர்கள் காட்சி தந்தார்கள்.

போர்க்களத்தில் அவர்கள் செய்த உடல் தியாகத்தோடு மட்டுமின்றி செல்வச் சீமானாகவும் பெரும் வணிகராகவும் விளங்கிய அவர்கள் தம் உடைமைகளாலும் இஸ்லாத்துக்குச் செய்த தியாகம் மகத்தானதே. தபூக் போருக்காக பொருளுதவி கோரி நின்ற அண்ணலார் (ஸல்) அவர்கள், பெரும் பொருளைத் தம் பாத கமலங்களில் காணிக்கையாக்கி வைத்த அத்தோழரை 'தல்ஹத்துல் ஃபையாழ்—வள்ளன்மை மிக்க தல்ஹா' என வாழ்த்தினார்கள்.

ஒரு சமயம் இஸ்லாத்தில் இணைந்த மூன்று புதியவர்களின் பொறுப்பை ஏற்றுக் கொள்பவர் யார்? என அண்ணலார் (ஸல்) அவர்கள் வினவக் கேட்டு, விருந்தோம்பும் பண்பு மிக்க ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் தாமே அப்பொறுப்பை ஏற்றதோடு மட்டுமல்ல, அம்மூவரையும் தமதில்லம் அழைத்துச் சென்று அம்மூவரின் மரணப் பரியந்தம் அவர்களை உபசரித்தார்கள். அம்மூவரிடத்திலும் ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் காட்டி வந்த மேலான உபசரிப்புப் பழக்கத்தினால் அம்மூவரின் மரணத்துக்குப் பின்னரும் அவர்களைத் தம் கனவில் காணும் வாய்ப்பு அவர்களுக்குக் கிட்டியது. சுவனத்தின் வாசலில் அம்மூவரும் வரிசையாக நிற்க ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள், தாம் கண்ட கனவில் அம்மூவரில் முன்னதாக மரணமடைந்தவர் பிந்தியவராகவும் இறுதியாக மரணமடைந்தவர் முந்தியவராகவும் நிற்கக் கண்டு அதற்கான காரணம் கேட்டு வியந்தனர். "அதிகமான வாழ்நாட்களைப் பெற்று இறுதியாக மரணமடைந்தவர் தமது மிகுதமான நன்மைகளின் பலனாக சுவனவாசலில் முந்தி நிற்கிறார்" என அண்ணலார்

(ஸல்) அவர்கள் விளக்கினார்கள். விருந்தோம்பலில் இத்த கைய சிறந்தவரான தம் தோழரை அண்ணலார் (ஸல்) அவர்கள், 'தல்ஹத்துல் ஜவ்வாது—மணமிக்க தல்ஹா' என்றும் அழைத்து மகிழ்ந்தார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களின் இறுதி ஹஜ்ஜின் பயண நிகழ்ச்சியை விவரிக்க நின்ற ஹழ்லரத் ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரலி) அவர்கள், ''அண்ணலார் (ஸல்) அவர்கள் இஹ்ராம் அணிந்தபோது எல்லா தோழர்களுமே இஹ்ராம் அணிந்து கொண்டார்கள். ஆயினும் துல்ஹுலைஃபாவி லிருந்து பயணம் புறப்பட்டபோது அண்ணலார் (ஸல்) அவர்கள் தம் பலி மிருகங்களைப் பெற்றிருந்ததுபோல் ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் மட்டுமே பெற்றிருந்தார் கள்'' என குறிப்பிடுகிறார்கள்.

பெருமானார் (ஸல்) அவர்களுக்குப் பின் கிலாஃபத் நடத்திய பெரும் கலீஃபாக்களாலும் மதிக்கப்பட்டவர் களாக ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் வாழ்ந்தார்கள். முதற் கலீஃபா ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் ஆலோசகர்களில் ஒருவராக இருந்த அவர்கள் கலீஃபா அவர்களின் மனப்போக்கை முற்றிலும் உணர்ந்தவர்களாக, புரிந்தவர்களாக நின்று பெருந்துணை சேர்த்தார்கள். ஜக்காத் பற்றிய மார்க்க நடைமுறையில் பின்னடைந்து குழம்பிய காட்டரபிகளிடத்தில் சற்று மென்மையாகவே விட்டுக் கொடுத்து, பின்னர் அவர்களை வழி திருப்பலாம் என ஏறத்தாழ எல்லா ஸஹாபாக்களுமே தயக்கம் தெரி வித்தனர். மார்க்க நடைமுறைகளில் கண்டிப்பு கொண்ட ஹழ்லரத் உமர் (ரலி) அவர்களும் கூட காட்டரபிகளுக் காக கலீஃபா அவர்களிடத்தில் பரிந்தே பேசினார்கள். அச்சமயம் கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்களின் நடவடிக் கையை முழுமையாக ஆதரித்த மிகச் சிலரில் ஹழ்லரத் தல்ஹா (ரலி) முதன்மையானவர்.

قَالَتِ الْأَعْرَابُ آمَنَّا ۖ قُل لَّمْ تُؤْمِنُوا وَلَٰكِن قُولُوا أَسْلَمْنَا
وَلَمَّا يَدْخُلِ الْإِيمَانُ فِي قُلُوبِكُمْ

''நாட்டுப்புறத்து அரபிகளில் சிலர் நாங்களும் விசுவாசித்தோம் என கூறுகின்றனர். (அவர்களை நோக்கி) நபியே! நீர் கூறும் 'நீங்கள் விசுவாசிப்பதில்லை. ஆனால் (எங்களுக்குப் பயந்து) வழிப் பட்டவர்கள் என உங்களைக் கூறிக் கொள்ளுங்கள். ஏனெனில் விசுவாசம் உங்களின் இதயங்களில் நுழையவே இல்லை'' என்ற (49 : 14) இறை வசனத்தையும் ஓதிக்காட்டிய ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் ஜக்காத்தை ஏற்காதவர்களின் விசுவாசம் ஏற்கப் படக் கூடியதே அல்ல என கூறி கலீஃபா அவர்களின் வாதத்தை உறுதிப்படுத்தினார்கள்.

கலீஃபா உமர் (ரலி) அவர்களும் தம் இறுதி நேரத்தில் தமக்குப் பின் கிலாஃபத்தை ஏற்கப் பொறுப்புடையவர்களாய் அறிவித்த அறுவருள் ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்களையும் ஒருவராய் அறிவித்தார்கள். கலீஃபா அவர்களின் பத்தரை ஆண்டு கால கிலாஃபத்திலும் ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள்பால் கொண்டிருந்த மனப் பொருத்தத்தையே அந்நியமனம் பிரதிபலிக்கிறது.

ஹழ்லரத் உஃஸ்மான் (ரலி) அவர்களின் கிலாஃபத்தின் இடைக் காலம் வரை ஹழ்லரத் தல்ஹா(ரலி)அவர்கள் மதீனாவிலேயே வாழ்ந்தார்கள். ஹிஜ்ரி 30-ம் ஆண்டிலிருந்து பல மாற்றங்கள் நடந்தேறின. வெற்றிகள் மிகுந்து ஆட்சியின் எல்லைகள் விரிந்தபோது பரந்த தம் பேரரசில் தொலை தூரத்தில் வாழும் மக்களுக்குப் புதிய மார்க்கத்தைப் பற்றிய தெளிவேற்படுத்தவும், அரபிகளல்லாத-'அஜமி' களிடையே தம் ஆட்சிக்கு வலுச்சேர்க்கவும் பேருதவியாக இருப்பார்கள் என்ற நோக்கத்தோடு கலீஃபா உஃஸ்மான் (ரலி) அவர்கள் முஹாஜிர்களையும் அன்ஸார்களையும் மதீனாவை

விட்டும் வெளிச் சென்று வாழவும் அனுமதித்திருந்தார்கள்; அக்காலைவெல்லப்பட்டபுதிய பூமிகளில் இஸ்லாத்தை ஏற்று அதன்பால் வசமிழந்ததன் பிரதிபலிப்பாக மக்கா, மதீனா போன்ற புனித நகரங்களில் வந்து தங்கி வாழ விரும்பிய வர்களும் இருந்தார்கள். இந்த இரு சாராருக்குமிடையே உடைமைகள் பரிமாற்றம் செய்துக் கொள்ளப்பட்டன. அத் தகைய வாய்ப்பேற்பட்டபோது காதிஸிய்யாவிலும் மதாயி னிலும் நிலபுலன்கள் இருந்தும் மக்காவில் தங்கி வாழ விரும்பிய ஒருவரிடம், ஹழ்லரத் தல்ஹா (ரலி) கைபரிலும் ஹிஜாஸிலும் தங்களுக்குச் சொந்தமாக இருந்த குடியிருப் புகளைப் பரிமாற்றம் செய்துக் கொண்டு பஸராவில் குடி யேறி வாழலானார்கள். தங்களின் மேலான வணக்க வழி பாட்டு ஒழுக்கங்களினாலும், ஈகையும் தாராளத் தன்மை யும் மிகுந்த தங்கள் குணநல மேம்பாடுகளாலும் பஸரா வாழ் மக்களிடையே அவர்களின் செல்வாக்கு மிக உயர்ந்து விளங்கியது. ஹிஜ்ரி 36-ம் ஆண்டு நடைபெற்ற ஒட்டகைப் போரில் பஸரா நகரமே அவர்களுக்குப் பெரும் பக்கபல மாகத் திரண்டு நின்றது.

ஹழ்லரத் தல்ஹா, ஸுபைர் (ரலி) போன்ற பல பெரும் நபிமணித் தோழர்களெல்லாம் தலை நகர் மதீனாவை விட்டும் வெளியேறி வாழலானதும் குழப்பக் காரர்களின் பலமோங்குவதற்கான காரணங்களில் ஒன்றாகி விட்டதை மறுப்பதற்கில்லை. கலீஃபா உஃஸ்மான் (ரலி) அவர்கள் குழப்பக்காரர்களால் சூழப் பெற்று விட்ட சமயம் இப்பெருந் தோழர்களெல்லாம் மதீனாவிலிருந்தும் கலீஃபா அவர்களுக்கு உதவவே முடியாத அளவு பயங்கரமான சூழ்நிலையை கலகக்காரர்கள் வளர்த்துவிட்டிருந்தனர்.

முற்றுகையிடப்பட்டிருந்த தம் வீட்டின் உப்பரிகையில் ஏறி நின்று கலீஃபா உஃஸ்மான் (ரலி) அவர்கள் உரை யாற்றிய ஆரம்பத்தில் 'உங்களிடையே தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் (ரலி) இருக்கின்றாரா!' என கேட்டார் கள். கூட்டத்திடையே அவர்களுக்கு எந்த பதிலும் கிடைக்க

வில்லை. கலீஃபா அவர்கள் மீண்டும் மீண்டும் அவ்வாறே கேட்டார்கள். மூன்றாம் முறையே ''ஆம்! இருக்கிறேன்'' என அவர்களுக்கு ஹழ்லரத் தல்ஹா (ரலி) பதிலளித்தார்கள். ''ஓ தல்ஹா! கூட்டத்திலேயே நீர் இருந்தும் நான் உம்மை மும்முறை அழைத்த பின்பே நீர் பதில் அளிக்க முடியும் என நான் எண்ணவே இல்லை'' என கவலையுற்று கலீஃபா அவர்கள் பேசலானார்கள்-என்ற ஒரு குறிப்பு, மதீனாவை அச்சமயம் சூழ்ந்திருந்த பயங்கர நிலையைப் புரியவைக்கக் கூடியதாகும். அப்பயங்கரத்தை தங்களின் பராக்கிரமத்தால் வெல்ல முடியாதவாறு ஹழ்லரத் தல்ஹா (ரலி) உட்பட எல்லா தோழர்களின் கரங்களும் கட்டப்பட்டு விட்டிருந்தன கலீஃபா உஃஸ்மான் (ரலி) அவர்களின் கருணைக் குணத்தினாலேயே! அக்காலை கலீஃபா அவர்களின் இல்லவாயிலைக் காத்து நின்ற ஹஸன், ஹுஸைன் (ரலி) முதலானோரோடு தம் மகனார் முஹம்மதிப்னு தல்ஹாவையும் வாளேந்தி காவலாய் நிற்கச் செய்வதொன்றேயன்றி ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்களுக்கு மற்றேதும் செய்ய முடியாத நிலையாகி விட்டது.

எப்படியோ கலகக்காரர்கள் பின்புறமாக வீட்டின் மீதேறியிறங்கி கலீஃபா உஃஸ்மான் (ரலி) அவர்களைக் கொன்றே விட்டார்கள் என்ற செய்தி ஹழ்லரத் தல்ஹா, ஸுபைர் (ரலி) போன்றவர்களைத் திடுக்கிடச் செய்தது. ''தங்களின் கோரிக்கைகளைப் பெற்றுக் கொள்ள கலீஃபா அவர்களின் மீது நிர்ப்பந்தத்தைச் சுமத்தும் அவர்களின் பாமரத்தனமாகவே இதனை நாங்கள் நினைத்தோமேயன்றி கலீஃபா அவர்களை இவர்கள் கொன்றே விடுவார்கள் என நாங்கள் எண்ணவே இல்லையே! அந்தோ மாண்பாளர்களை மிகைத்து நிற்க மூடர்கள் தலைப்பட்டு விட்டார்களே'' என அவர்களெல்லாம் கவலையுற்றனர். நாயகத்தின் கலீஃபாவைக் கொன்றவர்களைப் பழி தீர்க்க இந் நாயகத்

**தோழர்கள் பூண்ட உணர்வுகளின் முழுப் பிரதிபலிப்பே ஹிஜ்ரி 36-ம் ஆண்டில் நடைபெற்ற ஒட்டகைப் போர்!**

ஹழ்லரத் உஃஸ்மான் (ரலி) அவர்களின் பிரிவையடுத்து, கிலாஃபத்தை ஏற்ற ஹழ்லரத் அலீ (ரலி) அவர்களின் கரத்தில் முதன் முதலாகப் பிரமாணம் செய்தவர்கள் ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்களே. கலீஃபா உஃஸ்மான் (ரலி) அவர்களைக் கொன்றவர்களைப் பழிவாங்கியே தீரவேண்டுமென்ற நிபந்தனையின் பேரிலேயே ஹழ்லரத் தல்ஹா, ஸுபைர் (ரலி) போன்றோர் பிரமாணம் செய்தார்கள். ஆனால் மறுதினமே கலகக்காரர்களெல்லாரும் கூட தங்களை புதிய கலீஃபாவின் ஆதரவாளர்களாகக் காட்டிக் கொண்டபோது அவர்களெல்லாம் திடுக்கிட்டார்கள். ஹழ்லரத் தல்ஹா, ஸுபைர் (ரலி) ஆகியோர் கலீஃபா அலீ (ரலி) அவர்களைச் சந்தித்து, தங்களின் நிபந்தனையை நினைவூட்டினார்கள். கலீஃபா அவர்களும் மறுக்கவில்லை; கொலையாளிகளைப் பழி தீர்த்தே ஆகவேண்டும் என்ற முடிவில் அவர்களுக்கும் எந்த மாறுபாடான கருத்துமில்லை. ஆனால் கொலையாளிகள் எவர் என கண்டுணர முடியாத சூழ்நிலையில் பொல்லார்களெல்லாம் நல்லோர்களோடு கலந்து விட்டிருக்கும் நிலையை கலீஃபா அவர்கள் சுட்டிக்காட்டினார்கள்.

''பொறுங்கள்! நிர்வாகம் சீரடைந்து வலிமை பெற உதவுங்கள். கொலையாளிகளைக் கண்டு பிடித்து நிச்சயம் பழிவாங்கியே தீர்வோம்'' என கலீஃபா அவர்கள் வாக்களித்தார்களாயினும், தொடர்ந்து மதீனாவில் நிலவிய சூழ்நிலை இரு பெரும் நபிமணித் தோழர்களையும் மனம் சடைந்து மதீனாவை விட்டும் வெளியேறச் செய்தது.

மக்காவை நோக்கிப் பயணம் செய்த அவர்கள் இடைவழியிலே அன்னை ஆயிஷா (ரலி) அவர்களைச் சந்தித்தார்கள். ஹஜ்ஜை முடித்து மதீனா திரும்பிக் கொண்டிருந்த ஆயிஷா நாயகியார், கலீஃபா உஃஸ்மான் (ரலி)

அவர்கள் கொல்லப்பட்ட செய்தியறிந்து அவர்களும் மக்காவுக்கே திரும்பி விட்டார்கள். மாநபியின் கலீஃபாவைக் கொலை செய்த உன்மத்தர்களைப் பழி வாங்க அன்னையாரின் உள்ளமும் கொதித்தது. மீண்டும் மதீனா சென்றால் காரியம் அத்தனை எளிதாக முடியாது என முடிவு கண்ட அன்னையாரவர்கள் பஸராவை நோக்கிப் புறப்பட்ட போது ஹழ்லரத் தல்ஹா, ஸுபைர் (ரலி) ஆகியோரும் அவர்களோடேயே புறப்பட்டுச்சென்றனர். ஒட்டகைப்போர் நடைபெற்ற களத்தில் இப்பெருந்தோழர்கள் இருவரும் எதிர் கண்டு நிற்க நேர்ந்தபோதிலும் அவர்கள் எதிரிகளாகி நிற்க வில்லை என்பதையும், குழப்பக்காரர்களைப் பழிதீர்ப்பதற்கே ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் கொந்தளித்து நின்றதையும் அச்சமயம் அவர்களைச் சந்தித்துப் பிரிந்த அல்க்கமா இப்னு வக்காஸ் லைஸீ என்ற பெரியார் எழுதுகின்றனர்:

ஆயிஷா நாயகியாரின் படைகளோடு இணைந்து ஹழ்லரத் தல்ஹா, ஸுபைர் (ரலி) முதலியோர் உஸ்மான் (ரலி) அவர்களைக் கொன்றவர்களைப் பழி தீர்க்கவந்து பஸராவில் தங்கியிருந்தபோது ஒரு நாள் அவர்களைச் சந்திக்கச் சென்றேன். தல்ஹா (ரலி) கவலை சூழ்ந்தவர்களாகத் தனிமையில் அமர்ந்திருந்தார்கள். அவர்களின் கவலைக்கான காரணம் வினவினேன்.

''அல்க்கமா! வைரிகளை மாய்க்க நாங்கள் ஒருவரோடொருவர் இணைந்தவர்களாய், ஒருவருக்கொருவர் பரிந்தவர்களாய் அணிவகுத்து நின்ற காலம் ஒன்றிருந்தது. இன்று நாங்களே ஒருவருக்கெதிராய் மற்றவர் நிற்க நேர்ந்துள்ள கோலம் என்னை வருத்துகிறது. ஆனால் ஹழ்லரத் உஸ்மான் (ரலி) அவர்களின் விவகாரத்தில் நடந்து விட்ட பிசகுதலுக்குப் பரிகாரமாக என் உயிரை இழந்தாவது அவர்களை கொன்றவர்களைப் பழி தீர்க்கவே என் உணர்வுகள் என்னை உந்துகின்றன'' என்றார்கள் தல்ஹா (ரலி).

"தங்களின் குடும்பம் மிகப் பெரிது, தங்களின் உடைமைகளும் ஏராளம். எனவே தங்கள் மகனார் முஹம்மது (ரலி) அவர்களையாவது தாங்கள் வீடு திரும்பச் செய்யுங்கள். தங்களுக்கு ஏதேனும் நேர்ந்து விட்டாலும் அவர் அவற்றைப் பராமரித்துக் கொள்வார்" என்றேன்.

"அல்க்கமா! இது மிகவும் முக்கியத்துவம் பெற்ற நடவடிக்கை. இதில் எனக்குத் துணையாக நிற்கும் எவரையும் நான் விலகச் சொல்லமாட்டேன்" என அவர்கள் மறுத்து விட்டதாக அல்க்கமா அவர்கள் அறிவிக்கின்றனர்.

கலீஃபா அவர்களின் படைகளும் ஆயிஷா நாயகியாரின் படைகளும் எதிர் கொண்டு நின்றன. இரு புறமும் முஸ்லிம்கள்! மேலான நபிமணித் தோழர்களும் இருபுறமும் இருந்தனர்!

கண்ணியவான்கள் தூர்ப்பேறான இந்தப் போரைத் தவிர்க்க எல்லா முயற்சிகளையும் மேற்கொண்டனர். ஹழ்ரத் கஅகாஅ இப்னு அம்ரு (ரலி) அவர்கள் மேற்கொண்ட முயற்சியால் பிரிந்து நின்ற நபிமணித் தோழர்களின் மன மாச்சரியங்கள் விலகின. கலீஃபா அலீ (ரலி) அவர்களும் எதிரணியாக நின்ற தல்ஹா, ஸுபைர் (ரலி) போன்ற மேலானவர்களும் சந்தித்து அளவளாவினர். மன மொத்த ஒரு முடிவின்பால் தாங்கள் பிணைந்து விட்ட நிலையை மக்களுக்கறிவிக்க ஒரு விடியலுக்காக மட்டுமே அவர்கள் தாமதித்திருந்தனர். அந்த இரவோடிரவாக துரோகிகள் சதி சூழ்ந்து விளைவித்தே விட்டதே ஹிஜ்ரி 36-ம் ஆண்டு ஜமாதுல் ஆகிர் மாதம் 20-ம் நாள் நடைபெற்ற ஒட்டகைப் போர். கலீஃபா அலீ (ரலி) அவர்கள் அன்றைக்கு ஒரு கால நூற்றாண்டு முன்னதாகவே அண்ணலார் திரு நபி (ஸல) அவர்கள் முன்னறிவித்த ஓர் எச்சரிக்கையை நினைவூட்டக் கேட்டு ஹழ்ரத் ஸுபைர் (ரலி) அவர்கள் போர்க்களத்தை விட்டே வெளியேறினர். ஹழ்ரத் தல்ஹா (ரலி) அவர்களும் மனம் சோர்ந்தனர், இனி அவர்களும் வெளியேறியே தீருவார்கள் என்பதைப் புரிந்து

கொண்ட - முன்பே அவர்கள் பால் புழுக்கங் கொண்ட— அச்சமயம் அவர்களின் அணியிலேயே கலந்திருந்த ஒருவன் விஷந்தோய்க்கப்பட்ட ஓர் அம்பை மறைந்திருந்து அவர்கள் மீது செலுத்தினான். எதிர்பாராத நிலையில் அவர்களின் பாதத்தில் அவ்வம்பு துளைத்து இரத்தம் பிரவாக மெடுக்கச் செய்தது. அதனைஎடுக்கமேற்கொண்டமுயற்சிகள் பல னளிக்காதது மட்டுமின்றி வெளியேறும் இரத்தத்தையும் கட்டுப்படுத்த முடியாதாகி விட்டது. அவர்களின் நிலையை எதிரணியிலிருந்தே கண்காணித்துக் கொண்டிருந்த ஹழ்லரத் கஅகாஅ (ரலி) அவர்கள் விரைந்து வந்து அவர்களை வேண்டி களம் விட்டும் வெளியேறச் செய்தார்கள். அவர்களின் ஊழியர் அவர்களை தங்குமிடத்தில் கொண்டு சேர்ப்பதற்கு முன்பாகவே அவர்களின் புனித ஆன்மா விடைபெற்றுச் சென்றது.

மிக்க நகர சோதனை மிக்க வாழ்க்கையிலேயே தங்கள் வாணிபத்தைக் கண்ணும் கருத்துமாகக் கவனிக்கத் தவறாத ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் மதீனாவில் மிகப் பெருஞ் சீமானாகவும உடைமைக்காரராகவும் விளங்கினார்கள். இராக்கிலும் அவர்கள் அநேக நிலபுலன்களை விவசாயத்தில் ஈடுபடுத்தினார்கள். நிலங்களுக்கு நீர் பாய்ச்ச மட்டும் இருபது ஒட்டகைகள் பயன்படுத்தப்பட்டன. அவர்களின் ஒரு நாளைய வருமானம் ஓராயிரம் தங்கக்காசுகளாயிருந்தன. அத்தனையும் அனுமதிக்கப்பட்ட ஒழுங்கு முறைகளோடேயே தேடப்பட்டன. அச்செல்வத்திலும் தங்கள் இம்மை வாழ்வுக்காகச் சேமித்துக் கொண்டதைப் போன்ற பல மடங்கை தங்கள் மறுமைக்கான சேமிப்பாக இறைவனின் வழியில் அவர்கள் செலவழித்தார்கள். ''நீண்ட நாட்கள் அவர்களோடு பழகியிருக்கிறேன். கேட்காமலே அள்ளித் தரக் கூடியவராக அவர்களை விட மேலாக மற்றெவரையும் நான் காணவில்லை'' என கபீஸா இப்னு ஜாபிர் (ரலி) குறிப்பிட்டனர். ஈகை நெஞ்சமும் வள்ளன்மையும் கொண்ட அவர்களின் இல்லக் கதவுகள் வறியவர்கள், எளியவர்களின் வரவுக்காக எந்நாளும் திறந்தே கிடந்

தன. மதீனாவின் ஏழைகள் பலரின் வாழ்வுகள் அவர்களின் உதவிகளால் ஏற்றம் பெற்றன. இறைவனின் திருமறை கூறுவதே போன்று, வழங்கி உதவுவதில் உறவினர்களுக்கு அவர்கள் முன்னிடம் தந்தார்கள். ஒரு முறை அவர்களிடம் உதவி தேடி வந்த ஒரு மனிதர் தாம் ஒரு வகையில் அவர்களின் உறவினரே என விளக்கியபோது அப்படி ஓர் உறவுக் குடும்பம் இருப்பதை அது நாள் வரை தாம் அறியாமல் இருந்து விட்டதற்காக வருந்திய அவர்கள் உடனடியாகத் தமது ஒரு தோட்டத்தை ஹழ்லரத் உஃஸ்மான் (ரலி) அவர்களிடத்தில் விற்று அதன் மூலம் கிடைத்த மூன்று லட்சம் திர்ஹங்களையும் அவருக்கு அன்பளிப்பு செய்தார்கள்.

'ஹளரமவு'த்திலிருந்து லட்சக் கணக்கான திர்ஹங்கள் திடுமெடுன ஒரு சமயம் வந்து சேர்ந்தன. இறைவனின் நல்லருளில் நம்பிக்கை கொண்ட ஒருவன் இத்தனைப் பெருஞ் செல்வத்தைத் தேக்கி வைத்திருப்பது எங்ஙனம் பொருத்த முடையதாகும் என இரவெல்லாம் உறக்கமின்றி கழித்த அவர்கள், விடிந்ததுமே முஹாஜிர்களிலும் அன்ஸார்களிலுமிருந்த ஏழைகளை அழைத்து அவற்றைப் பங்கிட்டளித்த பின்னரே அமைதியடைந்தார்கள்.

''ஒரு சமயம் கவலை தோய்ந்த முகத்துடன் வீடு திரும்பிய அவர்களிடம் காரணம் கேட்டேன். ஒரு பெருந் தொகை கையிருப்பில் தங்கிக் கிடப்பதாக அவர்கள் கூறினர். அது பற்றிக் கவலை படுவானேன். தங்களின் குடும்பம் தான் பெரியதாயிற்றே அவர்களை யெல்லாம் அழைத்துப் பங்கிட்டு விடுங்கள் என்று சொன்னேன். அவ்வாறே அவர்கள் செய்து முடித்த போது பங்கிடு செய்தவரை அழைத்து தொகை எவ்வளவு என விசாரித்தேன். நான்கு லட்சம் திர்ஹங்கள் என்றாரவர்''—என அவர்களின் மனைவி ஸஅதா பின்த்து அவ்ஃப் கூறியதாக வரலாற்றாசிரியர் இப்னு ஸஅத் குறிப்பிட்டுள்ளார்.

எத்தனையோ குமருகள், விதைவைகளின் வாழ்வுகள் இவர்களால் வளம் பெற்றன. அன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடம் தனி பற்றுதல் கொண்ட இவர்கள் ஆண்டு தோறும் பதினாயிரம் தங்கக் காசுகளை அவர்களுக்கு அன்பளிப்புச் செய்தனர்.

முஸ்லிம்கள் மட்டுமேயன்றி முஸ்லிமல்லாதவர்களும் கூட அவர்களின் நெஞ்ச விசாலத்தில் நிழல் பெற்ற சம் பவங்களும் உண்டு. யமானியப் பகுதியில் அவர்கள் பயண மேற்கொண்டிருந்த ஒரு சமயம் வனாந்திர வழியில் தங்கி வாழ்ந்த கிறிஸ்த்துவத் துறவிகள் தண்ணீருக்காகத் தவித்த சிரமம் கண்ட இவர்கள், அங்கேயே யமானியத் தலைவ ராக விளங்கிய ஒருவருக்கு உடைமையான நீர் ஊற்றை விலை பேசிப் பெற்று அத்துறவிகள் அனுபவிக்க அறச் செத்தாக்கி அர்ப்பணித்துப் பிரிந்தனர்.

அவர்களின் நெஞ்ச விசாலத்திற்கேற்ப எந்த அளவு அவர்கள் ஈந்துச் சிறந்துக் கொண்டிருந்தார்களோ அது போல் பல மடங்கு, அல்லாஹ்வும் அவர்களுக்குத் தன் அருளை அள்ளிச் சொரிந்து கொண்டிருந்தான். மாரி போல் வாரி வழங்கிய பின்னரும் அவர்கள் மரணித்தபோது ஏராளமான உடைமைகளை அவர்களின் வழிவாறுகள் பெற் றனர். பிந்திய காலத்தில் அவர்களின் ஒரு மகனார் மூஸா (ரஹ்) அவர்களைச் சந்தித்த ஹழ்லரத் முஆவியா (ரலி) அவர்கள், 'உம் தந்தையார் உங்களுக்காக என்ன விட்டுச் சென்றார்' என வினவியபோது, ஏராளமான தங்கம் வெள்ளியோடு இரண்டு லட்சம் தீனார்களையும் இருபது லட்சம் திர்ஹங்களையும் மூன்று கோடி தங்கக் காசுகள் மதிப்புடைய சொத்துக்களையும் தம் தந்தையார் விட்டுச் சென்றதாகக் கூறினார் அச்செல்வர்.

உறவினர்களோடு அதிலும் குறிப்பாக ஹிஜ்ரத்தை யடுத்து உடன்பிறப்பாகப் பிணைக்கப் பெற்ற ஹழ்லரத் கஅப் (ரலி) அவர்களோடு அவர்கள் கொண்டிருந்த பாசத்தை ஹழ்லரத் கஅப் இப்னு மாலிக் (ரலி) அவர்களே

கூறக் கேட்போம்: தபூக் போரில் கலந்து கொள்ளத் தவறி விட்ட குற்றத்துக்குரிய தீர்ப்பை இறைவன் புறமிருந்தே எதிர்பார்த்துக் காத்திருக்க நேர்ந்த ஹழ்லரத் கஅப் (ரலி) அவர்கள் இறுதியாக அது பிழைபொறுக்கப்பட்ட சேதி யறிந்து பெருமானார் (ஸல்) அவர்களைச் சந்திக்கச் சென்ற போது, ''பள்ளியினுள் நுழைந்த என்னைக் கண்ட தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் (ரலி) என்புறம் விரைந்தோடி வந்தார்; சோபனம் கூறினார்; என் கரங்களைப் பற்றினார்; பிழைபொறுக்கப் பெற்ற என்னை வாழ்த்தினார். ஆண்டவனின் மீதாணையாக அவரைத் தவிர முஹாஜிர்களில் மற்றெவரும் என்பால் எழுந்து வரவில்லை. தல்ஹா (ரலி) அவர்களின் அந்தக் கோலத்தை நான் ஒரு நாளும் மறவேன்'' என்கிறார்கள் ஹழ்லரத் கஅபு (ரலி).

ஹழ்லரத் கஅபு (ரலி) அவர்களின் பிழை பொறுக்கப் பட்டது கண்டு மற்ற முஹாஜிர்கள் மகிழவில்லை என்பதல்ல அதன் பொருள். அவர்களனைவரின் முகங்களுமே மலர்ந்தே ஒளிர்ந்தன. ஆனால் அவர்களனைவரும் அண்ணலார் (ஸல்) அவர்களின் சந்நிதானத்தைப் பேணி அடக்கத்துடன் அமர்ந்திருந்த சமயம் ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் மட்டும் தங்கள் உணர்வுகளை அடக்கமுடியாது பாச மிகுதியால் எழுந்து ஓடினர்.

அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் உடன் பிறந்தார் உம்மு குல்ஸூம் (ரலி) அவர்களையும், அன்னை ஸைனப் (ரலி) அவர்களின் உடன்பிறந்த ஹம்னா (ரலி) அவர்களையும், அன்னை உம்மு ஹபீபா (ரலி) அவர்களின் உடன் பிறந்த பாரிஆ (ரலி) அவர்களையும், அன்னை உம்மு ஸலமா (ரலி) அவர்களின் உடன் பிறந்த ருக்கையா (ரலி) அவர்களையும் மணமுடித்து ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் நான்கு வழியாகவும் அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களோடு தங்கள் குடும்ப உறவை மேலும் வளம் பெறச் செய்தார்கள். இந்தப் பேற்றினை மற்றெந்த நபி மணித் தோழரும் பெற்றிருக்கவில்லை.

அந்நாள்வரையன்றி மற்றும் ஏழு பெண்களை அவர்கள் வெவ்வேறு காலங்களில் மணமுடித்திருந்தார்கள். அவ் வனைவோர் மூலமாகவும் பதினோரு ஆண்மக்களையும் நான்கு பெண்மக்களையும் அவர்கள் பெற்றிருந்தார்கள். ஆண்மக்களில் தலையானவரான ஹழ்லரத் முஹம்மத் (ரலி) அவர்களின் பெயர் கொண்டே அவர்கள் அபூ முஹம்மத் என அழைக்கப் பெற்றார்கள். முஹம்மத் இப்னு தல்ஹா (ரலி) அவர்களும் அவ்வொட்டகைப் போரிலேயே ஷஹீதாயினர். பெண்மக்களில் உம்மு இஸ்ஹாக் என்பார் முதலில் ஹஸன் (ரலி) அவர்களோடும் அவர்களின் மரணத் துக்குப் பின் ஹுஸைன் (ரலி) அவர்களோடும் மணவாழ்வு கொண்டு இருவர் மூலமும் மக்களைப் பெற்றனர்.

ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்களின் குணச் சிறப் பைப் புரிந்து கொள்ளத் தக்க நயமான ஒரு செய்தியை கன்ஸுல் அஅமால் என்ற நூலாசிரியர் எழுதுகிறார்: உத்பா இப்னு ரபீஆ என்றமானின் மகள் உம்மு அபானை மணக்க எழுபெரும் கண்ணியவான்கள் போட்டியிட்ட போது, ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்களின் தூதையே உம்மு அபான் தெரிவு செய்தார். அதற்கு அவர் கூறிய காரணம்: ''அவரின் குணச்சிறப்புகளே! வீட்டினுள் நுழை யும் போதெல்லாம் அவர் சிரித்தபடியே நுழைவார். பிரிந்து புறப்படும் போதெல்லாம் அவரின் உதடுகள் புன்முறுவலைச் சிந்தும். எவர் எதைக் கேட்டும் அவர் மறுத்ததில்லை; மவுனத்துடன் நிற்பவர்களின் வாய்கள் திறக்கட்டுமே என அவர் தாமதிப்பதில்லை; தாமே அன்பளிப்புகளுடன் முந்து வார். நிறைகளைக் கண்டு நெஞ்சம் விரித்திடும் அவர் குறை களைக் காணும் போதெல்லாம் காணாதவராகவே திரும்பிக் கொள்வார்.'' என்பதாகும்.

ஏறத்தாழ 62 அல்லது 64 வயது வரை வாழ்ந்த அச் சுவனப் பெருந்தோழரின் புனித உடல் ஒட்டகைப் போர் நடைபெற்ற அப்பள்ளத்தாக்கிலேயே முதலில் அடக்கப்

பெற்றது. எனினும் அப்பள்ளத்தாக்கில் ஓடிக் கொண்டிருந்த ஒரு வாய்க்காலின் தண்ணீர் அவர்களின் மண்ணறையை நனைத்துக் கொண்டிருந்ததால் தம்முடைய மண்ணறையை மாற்றும் படியாக அவர்களே தம் நண்பரின் கனவில் தோன்றிக் கூறியதன் பேரில் அந் நண்பரிடமிருந்து அச் செய்தியறிந்த பஸராவின் பிந்திய ஆளுநர் ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், அபூ பக்கர் என்ற மற்றொரு நபி மணித் தோழருக்குச் சொந்தமாக பஸராவிலிருந்த ஓர் இல்லத்தை பதினாயிரம் திர்ஹங்களுக்கு வாங்கி அதில் மண்ணறையமைத்து ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்களின் புனித உடலை மாற்றி அடக்கம் செய்தார்கள்.

இறவாப் புகழ் பெற்ற அந் நபிமணித் தோழரின் புனித உடல் பல நாட்களுக்குப் பின்னர் தோண்டப்பட்ட போதும் அன்றே அடக்கம் செய்யப்பட்டது போன்ற பொலிவுடன் காணப்பட்டது மட்டுமல்ல, அவர்களின் கண் இமைகளின் மேல் வைக்கப்பட்டிருந்த கற்பூரமும் கூட கரையாமல் மணம் பரப்பிக் கொண்டிருந்தது.



## ஹஜ்ரத்

# அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி)

"ஆமினா அம்மையாரின் கர்ப்பத்திலிருந்து வெளிப் பட்ட குழந்தையை என் கரங்களில் ஏந்தினேன். அக் குழந்தையின் குரல் மற்றக் குழந்தைகளின் பிறப்புகளின் போது ஒலித்ததைவிட உச்சமாகவே ஒலித்தது. அச்சமயம் 'உமது இரட்சகன் உம்மீது கருணை புரிவானாக' என்ற குரலும் அசரீரியாக ஒலிக்கக் கேட்டேன். கிழக்கிலிருந்து மேற்குவரை அனைத்துப் பொருள்களும் அப்போது எனக் குத் தெளிவாகப் புலப்பட்டன. (ஸிரியாவாகிய) ஷாம் நாட்டின் உப்பரிகைகளையும் என் கண்களால் அப்போது நான் கண்டேன்..........." என்று அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் பிறப்பின்போது தங்களுக்குக் காணக் கிடைத்த வியத்தகு நிகழ்ச்சிகளையெல்லாம் விவரித்த 'ஸொஹ்ரா' கோத்திரத்தைச் சார்ந்த "ஷிஃபாஊ" அம்மை யார், "அந்த நிகழ்ச்சி என் சிந்தனையில் ஆழமாகப் பதிந்தேயிருந்தது. எங்கள் குலக்கண்மணி தம்மை அல்லாஹ் வின் தூதரென அறிவித்த காலை அவர்களின் கரம்பற்ற அச்சம்பவமே என்னை விரையச் செய்தது" என்கிறார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களைப் பெற்ற ஆமினா அம்மையாரும் 'ஸொஹ்ரா' கோத்திரத்தைச் சார்ந்தவர் களே. எனவேதான் அவர்கள் தம் கற்பகக் கருவைப் பிரச வித்த சமயம் அருகே தாதியாக நிற்கப் பேறு பெற்றவர் களில் 'ஷிஃபாஊ' அம்மையாரும் இடம் பெற முடிந்தது. மாநிலத்தனக்கு ஒளிவீச வந்த மணிவிளக்கை முதன் முத லாகக் கரமேந்தப் பேறுபெற்ற அப்பெருமகளார்தம் மணி வயிற்றில் அன்றைக்குப் பதின்மூன்றாண்டுகள் கழிந்துப்

பிறந்த நற்றவச் செல்வரே ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி).

தந்தை அவ்ஃபும் ஸொஹ்ரா குடும்பத்தைச் சார்ந்தவரே. அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் இப்னு அப்து இப்னு ஹாரிஃஸ் இப்னு ஸொஹ்ரா, என இவர்களின் பாரம்பரியம் ஹழ்லரத் ஸஅது இப்னு அபீ வக்காஸ் (ரலி) அவர்களின் முப்பாட்டனாரை எத்துகிறது. அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்களின் மூதாதை குஸ்ஸாவின் உடன் பிறந்தவரே ஸொஹ்ரா என்பது ஈண்டு நினைவு கொள்ளத்தக்கது. தந்தையின் பெயரைப் போன்று ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் அவர்களின் அன்னை 'ஷிஃபா ஆ' (ரலி) அவர்களைப் பெற்ற பாட்டனின் பெயரும் 'அவ்ஃப்' என்பதாகவே இருந்தது. பெற்றோர்களால் 'அம்ரு' என்றே பெயர் சூட்டப்பட்டு அழைக்கப்பட்டுவந்த அவர்களுக்கு அண்ணலார் (ஸல்) அவர்களே அப்துர் ரஹ்மான் என அவர்கள் இஸ்லாத்தை ஏற்றபின் பெயர் சூட்டினார்கள்.

ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களோடும் இவர்களுக்கிருந்த உறவு முறையோடன்றி தங்களின் மேலான வாழ்க்கை-குண ஒழுக்கத்தினால் தோழமையும் மிக இருந்தது. அன்றாடம் அபூபக்கர் (ரலி) அவர்களின் குடிலில் கூடி உரையாடி மகிழும் வாலாயமுடையவர்களில் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களும் ஒருவரேயாவர்.

தந்தை அவ்ஃப் மக்காவின் பெரும் வணிகர்களில் ஒருவராக விளங்கினார். தம் தனயரையும் தம்மைப் போன்றே வாணிபத்தில் திறன் பெறச் செய்ய வேண்டும் என அவர் நாடினார். எனவே தாம் செல்லும் வணிகப் பயணங்களில் தனையர் அப்துர் ரஹ்மானையும் அவர் உடன் அழைத்துச் செல்வதுண்டு. அவ்வாறான ஒரு பயணத்தில் ஹழ்லரத் காலித் ஸைஃபுல்லாஹ் (ரலி) அவர்களின் தந்தையுடன் பிறந்த ஃபாக்கா இப்னு முகீராவும் ஹழ்லரத் உஃஸ்மான் (ரலி) அவர்களும் அவர்களின் தந்தை அப்ஃபானும் கூட சேர்ந்து சென்றனர். பாலை வழியில் எதிர்பட்ட கொள்ளை

யர்கள் அப்பயணக் கூட்டத்தைத் தாக்கி அவ்ஃபையும் ஃபாக்காவையும் கொன்று விட்டனர். மற்றவர்கள் தப்பித்தனர். அச்சமயம் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் திரமுடன் போராடி, தம் தந்தையைக் கொன்றவனைப் பழி தீர்த்துப் பிணமாக்கிச் சாய்த்த பின்னரே அவ்விடம் விட்டுத் திரும்பினர் என்ற செய்தி இளமையிலேயே ஹழ்லரத் அப்துர் ரஹ்மான்(ரலி)அவர்களுக்கிருந்த வலிவையும் துணிவையும் புரிய வைக்கின்றது!

ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் மூலமே அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களைக் கண்டு இஸ்லாத்தை ஏற்ற-அச்சமயம் இருபத்தேழே வயதுகளை எத்தியிருந்த— அப்பெரியார் தாம் அருள்வழி திரும்பத் தூண்டுதலாயிருந்த சம்பவத்தை விவரிக்கிறார்கள் : அண்ணல் எம்பெருமான் (ஸல்) நபித்துவம் பெறுவதற்கு ஓராண்டு முன்னதாக நான் வாணிப நிமித்தம் யமன் நாடு சென்றிருந்தேன். அங்கு நான் 'அக்கான் இப்னு அவாமிர் ஹமீரி' என்பவரின் குடிலில் தங்கியிருந்தேன். நீண்ட வாழ்நாளைக் கடந்துவிட்டிருந்த முதுபெருங் கிழவர் அவர்; இடுப்போடு கூன் வளைந்து கோழிக்குஞ்சைப் போன்றிருந்தார். யமன் நாடு செல்லும்போதெல்லாம் நான் அவரிடமே தங்குவது வாலாயம். மக்காவைப் பற்றிய செய்திகளை அவ்வப்போது என்னிடம் கேட்டறியும் வழக்கமுடைய அவர் அன்று "மக்காவில் எவரும் புனிதர் தோன்றியுள்ளனரா? உங்கள் பூர்விக மார்க்கத்துக்கு மாற்றமான ஏதேனும் புதிய அறிவிப்புகள் செய்யப்பட்டுள்ளனவா?' என்றெல்லாம் என்னைக் கேட்டார். 'அப்படியொன்றும் இல்லையே' என நான் விடையளித்தேன். பின்னர் அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்கள் நபித்துவத்தை வெளியிட்ட நாளிலும் நான் அவரிடமே தங்கியிருக்க நேர்ந்தது. முகமன் கூறி என்னை வரவேற்ற அவரின் முகம் மலர்ந்திருந்தது. "உம்முடைய வாணிபத்தை விட மேலான ஒரு நற்செய்தியை உமக்கு நான் கூறுவேன்"

7

எனப் பேச தொடங்கிய அவர் "உம் கூட்டத்தாரிடையே அல்லாஹ் புதியதொரு நபியைத் தோற்றுவித்துவிட்டான். சிலை வணக்கத்தைத் தடுத்து சத்திய வழியின்பால் அழைப்பு களைக் கொண்ட தன் வேதத்தை அவர்பால் இறக்கி விட்டான். மெய்யைக் கொண்டே வி பொய்யைப் புறங்காட்டச் செய்யும் அந்தக் கண்ணியவான் ஹாஷிம் குடும்பத்தில் தோன்றியுள்ளார். நீரும் அவர்களின் ஒரு சகோதரரே யன்றோ! எனவே விரைந்து புறப்படுவீராக; அவரைச் சந்திப்பீராக; மெய்ப்படுத்துவீராக. என் சார்பாக இந்த வாழ்த்துப் பாமாலையையும் அவரிடம் சமர்ப்பிப்பீராக" எனக் கூறி அண்ணலார் (ஸல்) அவர்களை வாழ்த்தி ஓர் அழகிய கவிதையையும் யாத்தளித்தார்.

நானும் அதனை மனைமிட்டுக் கொண்டவனாக மக்க மாநகரம் மீண்டேன். அபூ பக்ர் (ரலி) அவர்களைச் சந்தித்தேன். பயணத்தில் கிடைத்த அனுபவத்தை அவர் களிடம் விவரித்தேன். "ஆம்! முஹம்மதிப்னு அப்துல்லாஹ் (ஸல்) அவர்களை அல்லாஹ் தன் படைப்புகளிடையே தூத ராய் அனுப்பியுள்ளான். வாரும் அவர்களைச் சந்தியும்" எனக்கூறி அவர்கள் என்னை அழைத்துச் சென்றார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்கள் அச்சமயம் கதீஜா நாய கியாரின் இல்லத்தில் இருந்தார்கள். என்னைக் கண்டதுமே முறுவலித்த ஏந்தலார் (ஸல்) அவர்கள் "என்னே உம்முகத் தில் பெரும் மலர்ச்சியை நான் காண்கிறேன். அதனால் உமக்குப் பெரும் நன்மை விளையவே நான் ஆசிக்கிறேன். நீர் கொண்டு வந்துள்ள செய்தியைக் கூறும்" என்றார்கள்.

"அல்அமீன்! எந்த செய்தியைப் பற்றி வினவுகிறீர் கள்?" என நான் கேட்டேன்.

"அபா முஹம்மத்! உம்மிடம் ஒப்படைக்கப்பெற்று நீர் ஏந்தி வந்துள்ள அமானிதத்தைப் பற்றியே நான் வினவு கின்றேன்-விளக்குவீராக. அந்த ஹமீரி பெருமகன் மேலான நம்பிக்கையாளர் என்பதையும் நீர் உணர்வீராக" என என் நாயகர் புகலக்கேட்டு நான் வியர்த்தேன். முந்தி அவர்

தனின் கரம்பற்றி வணங்குவதற்குரியவனாக அல்லாஹ்வை யும் அவன் தூதராக அப்பெருமானையும் ஏற்று சாட்சியம் கூறிய பின்னரே நான் யமானியப் பெரியார் கூறிய கவிதை யையும் அவர்களிடம் சமர்ப்பித்தேன். அதனை முழுமை யாகச் செவியுற்று மனமகிழ்ந்த மாநபி (ஸல்) அவர்கள் "என்னைக் காணாமலே என் மீது நம்பிக்கை கொண்டு, நான் அவர்களுக்கு முன் இல்லாமலே என்னை உண்மைப் படுத்தும் அந்த மக்கள்தாம் எத்துணை நற்பேறு பெற்ற வர்கள். அவர்கள் என் உடன் பிறந்தார்கள்" என வாழ்த்தி னார்கள்—என ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் கூறியதாக அவர்களின் திருமகனார் ஹமீத் அறிவித்தார்கள்.

(—ஜமஅல் ஜவாமிஃ)

ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களால் இஸ்லாத்தின் பால் இணைக்கப் பெற்ற ஆரம்பகால முஸ்லிம்களில் ஒருவ ராக ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் காணப் பட்டாலும் வரிசையில் அவர்களின் எண்ணிக்கையைக் கணிப்பிட்டுக் காட்ட இயலவில்லை. ஆயினும் முதல் நாளி லேயே முஸ்லிம்களாகிவிட்ட ஒன்பது ஆண்களிடையே* அவர்களின் பெயர் காணப்படாததால் ஏழு நாட்களுக்குப் பின்னர்-ஆனால் அண்ணலார் (ஸல்) தாருல் அர்க்கமில் ஒதுங்கிடம் தேடுமுன்பாகவே—இஸ்லாத்தை அவர்கள் ஏற் றார்களென கொள்ளலாம். பதிமூன்றாவது முஸ்லிம் என ஒரு வரலாற்றாசிரியர் அவர்களைக் குறிப்பிடுகிறார்.

ஆரம்பகாலத்தில் மக்காவாசிகள் புரிந்த அளவற்ற கொடுமைகளை விட்டும் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களும் தப்பவில்லை. அதன் காரணமாகவே அவர்கள் மற்ற முஸ்லிம்களைப் போன்று மக்காவை விட்டும் வெளி யேறி அபிஸீனியா செல்ல நேர்ந்தது. அபிஸீனியாவுக்குச் சென்ற முதல் அணியோடேயே கலந்து ஹிஜ்ரத்துச் செய்த

* ஸித்தீக்குல் அக்பர் ஸையிதினா அபூபக்கர் (ரலி) பார்க்க.

இவர்கள் மீண்டும் மக்கா வந்தார்களாயினும் பிறந்தகத்தை நிரந்தரமாகவே துறந்து வெளியேற அண்ணலார் (ஸல்) அவர்களால் பணிக்கப் பட்டபோது மதீனாவுக்கு ஹிஜ்ரத் துச் செய்த முந்திய அணியோடேயே அவர்களும் வெளி யேறிச் சென்று விட்டார்கள்.

மதீனா வந்தடைந்த ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் ஸஅது இப்னு ரபீஉ என்ற அன்ஸாரியின் விருந் தினராகத் தங்கினார்கள். அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் தம் வரவுக்குப் பின் அவ்விருவரையுமே உடன் பிறந்தவர்களாய்ப் பிணைத்தார்கள். ஹழ்ரத் ஸஅது இப்னு ரபீஉ (ரலி) அவர்கள் பொருள் வளத்தோடு மேலான மன வளமும் பெற்றவராகவே விளங்கினர். ஒவ் வோர் அன்ஸாரித் தோழரும் தம் உடன் பிறந்தவராக மாறி விட்டிருந்த ஒவ்வொரு முஹாஜிர்த் தோழருக்கும் பிரித்துத் தரத் துணிந்ததே போன்று தம் உடைமைகளில் சரி பாதி யைப் பிரித்துத் தர முன்வந்தது மட்டுமல்லாமல், ஹழ்ரத் ஸஅது இப்னு ரபீஉ (ரலி) அவர்கள் தம்மோடு மணவாழ்வு கொண்டிருந்த பெண்மணிகள் இருவரிலும் ஒருவரை- இளையவரை - அழகில் சிறந்தவரை - மணவிடுதலை செய்து ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களின் வாழ்க் கைக்குத் துணைசேர்க்கவே துணிந்தனர். ஆனால் அப் பேருபகாரங்களுக்குப் பெருநன்றி காட்டி, தம் சகோதரரின் பெருவாழ்வில் மேலும் வளம்பெருக வழுத்திய ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் கடைத்தெருவை மட்டுமே தமக்குக் காட்டித்தருமாறு கேட்டார்கள்.

மதீனாவின் கடைத் தெருவில் வெண்ணெயையும் நெய் யையும் விற்கத் துவங்கிய அவர்களின் வாணிபம் ஆரம்பத்தி லிருந்தே விருத்தி கொண்டு வளரலாயிற்று. மிகச் சில நாட் களே கழிந்திருந்தன. வழமைபோல் ஒரு நாள் அண்ணலார் (ஸல்) அவர்களைச் சந்திக்க வந்தார்கள் ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் (ரலி). அவர்களின் வரவுக்கு முன்னே கட்டியங் கூறி வந்தது கஸ்தூரியின் நறுமணம். எதிரே வந்து முகமன்

கூறி நின்ற தம் தோழரின் ஆடையில் பட்டிருந்த நறுமண சாயத்தையும் கவனித்த பெருமானார் (ஸல்) அவர்கள் புன்னகைத்தவாறே கேட்டார்கள், ''அப்தர் ரஹ்மான்! திருமணமா முடித்துள்ளீர்?'' என.

ஆம்! ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் மணமுடித்தே வந்திருந்தார்கள். ''என் தந்தையும் தாயும் தங்களுக்கர்ப்பணம். ஏந்தலே! ஓர் அன்ஸாரி குடும்பத்தில் பெண் கொண்டுள்ளேன்'' என அவர்கள் கூறக்கேட்டு பெருமானார் (ஸல்) அவர்கள் 'மஹர் என்ன அளித்தீர்?' என வினவினார்கள். 'ஒரு பேரீத்தங் கொட்டையளவு பொன் கொடுத்தேன்'' என்றார்கள் ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் (ரலி). அது கேட்டு மகிழ்ந்த அண்ணலார் (ஸல்) அவர்கள் ''மிக்கச் சரி. வலீமா விருந்து கூட்டும், ஓர் ஆட்டை மட்டுமே அறுத்தாகிலுமிருக்கட்டும். இறைவன் உம் செல்வத்தை விருத்தியடையச் செய்வான்'' என வாழ்த்தினார்கள்.

''அண்ணலார் (ஸல்) அவர்கள் அவ்வாறாக என்னை வாழ்த்திய அந்த நாள் முதல் என் செல்வத்தில் நான் எத்தகைய விருத்தியைக் கண்டேனெனில் ஒரு கல்லைத் தொட்டு நான் எடுத்தேனானாலும் சரியே, அதன் கீழ் தங்கத்தையோ வெள்ளியையோ நான் பெற்றுக்கொள்வேன் என்ற நம்பிக்கை எனக்கேற்படாதிருந்ததில்லை'' என ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) அறிவிக்கிறார்கள்!

அண்ணலார் (ஸல்) அவர்களின் அருளிறைஞ்சுதலின் பலனாக இவர்களின் வாணிபம் வளர்ந்த வண்ணமே இருந்தது. கூட்டங் கூட்டமாக ஒட்டகைகள் மதீனாவை விட்டும் வெளிச் செல்வதும் திரும்புவதுமாக இருந்தன. நாயகத் தோழர்கள் யாவரிலும் பெருஞ்சீமானாகி விட்ட இவர்களின் வாணிபத்தால் மதீனாவாழ் மக்களின் தேவைப் பொருள்கள் அனைத்தும் தட்டின்றி நகரில் வந்து குவிந்தன. மதீனாவின் விளை பொருள்களில் மக்களின் தேவைக்கு மிகுதமானவை அனைத்தும் வெளிச் சந்தைகளில் வேகமாக

ஏற்பனையாயின. மக்காவின் சீமானாகிய — ஹழ்லரத் பிலால் (ரலி) அவர்களின் முந்திய எசமானன்- உமையா இப்னு கலஃபுடன் இவர்களுக்கு ஓர் உடன்பாடும் இருந்தது. அதன்படி இவர்கள் மக்காவுக்குச் செல்லும் போது இவர்களின் பாதுகாப்பை அவன் ஏற்பதென்றும் உமையா மதீனாவுக்கு வரும்போது அவனது பாதுகாப்பை இவர்கள் ஏற்பதென்றும் காணப்பட்டிருந்தது. ஹிஜ்ரத்துக்குப் பின்னரும் இவர்கள் வாணிபத்தின் பொருட்டு மக்கமாநகரம் சென்று வந்ததையே இவ்வொப்பந்தம் உணர்த்துகிறது. ஆனால் பத்ருப் போரில் ஹழ்லரத் பிலால் (ரலி) அவர்களின் கூக்குரலையும் சபதத்தையும் கேட்ட அன்ஸார்கள் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் தந்த பாதுகாப்பு வளையத்துள் புகுந்தே உமையாவைக் கொன்று விட்டார்கள்.

வளமுடைய வாணிபத்தையும் வற்றாத செல்வத்தையும் பெற்றிருந்த ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் வீரமும் வள்ளன்மையும் தம்முள் கொள்ளப் பெற்றிருந்தார்கள். பத்ருப் போரில் பங்கேற்ற இவர்கள் உமைர் இப்னு கஅப் என்ற குரைஷித் தலைவனைத் தம் வாளாலேயே வெட்டி வீழ்த்தினார்கள். பத்ருப் போரின் இரண்டு சம்பவங்கள் பற்றி இவர்களால் அறிவிக்கப்பட்ட செய்திகளை ஹதீஸ் தொகுப்பாளர்கள் ஏற்றுள்ளனர். ஒன்று அபூ ஜஹலைக் கொன்ற முஆஃத், முஅவ்விஃத் (ரலி) ஆகிய இரு அன்ஸார்களைப் பற்றியது, மற்றொன்று உமையா இப்னு கலஃப் பற்றியது.

உஹதுடைய போர்க்களத்திலும் இவர்களின் நெஞ்சத் துணிவு போற்றுதற்குரியதாக இருந்தது. குரைஷி ஒருவனைக் கொன்று திரும்பிய ஹழ்லரத் ஹாரிஃஸ் இப்னு ஸம்ஆ (ரலி) அவர்களிடத்தில் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் ''அப்துர் ரஹ்மானைக் கண்டீரோ?'' என வினவியபோது ''மலையின் புறமாக அவர்களை இணைவைப்பாளர்களிடையே கண்டேன். அவரிடம் செல்

லவே நாடினேன். அதற்குள் தாங்கள் என் பார்வையில் படவே தங்களிடம் வந்தேன்'' எனறனர் அத்தோழர். ''விண்ணவர்கள் அவரைக் காத்து நிற்பர்'' என்றார்கள் நபி பெருமான் (ஸல்). ஹழ்லரத் ஹாரிஃஸ் (ரலி) அவர்கள் திரும்பச் சென்று பார்த்தபோது ஹழ்லரத் அப்துர் ரஹ் மான் (ரலி) அவர்களின் முன் எழுவரின் உடல்கள் மண் ணில் புரண்டு கிடந்தன. ''இவ்வெழுவரையும் நீரே கொன் றீரோ?'' என ஹழ்லரத் ஹாரிஃஸ் (ரலி) அவர்கள் வின வியபோது ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள், ''அர்தாத்லையும் மேலும் இருவரையும் நான் கொன்றேன். மற்ற நாலவரைக் கொன்றவரை நான் காணவில்லை'' என உரைத்தார்கள்.

ஓடுபவர்கள் சிலர் ஓடிக்கொண்டிருந்தபோது உறுதி கொண்ட நெஞ்சினரிடையே ஒருவராய் நின்று போராடிய இவர்களின் உடலில் இருபத்தோரு காயங்கள் ஏற்பட்ட தாக 'பிலாதுரீ, இப்னு கல்தூன்' போன்ற வரலாற்றாசிரி யர்கள் குறிப்பிட்டுள்ளனராயினும் அவற்றுள் மூன்று வெகு ஆழமாகப் பதிந்து விட்டிருந்தன. உஹதுப் போரில் அவர் களின் ஒரு காலும் ஊனமடைந்து அதன் காரணமாக அவர்கள் வாழ்நாள் முழுவதும் நொண்டியே நடக்க வேண்டி யதாயிற்று. அதன் காரணமாகவே பின்னர் நடைபெற்ற போர்களில் பெருமளவு பங்கேற்க அவர்களால் முடியா தாகி விட்டபோதிலும் தங்களின் பெரும் பொருளை அள்ளி வழங்கி இறையருளை அவர்கள் விலை பேசினார்கள்.

அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் அருளி றைஞ்சுதல் காரணமாக ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் வெறும் பொருட்செல்வம் மட்டும் மிகைக்கப் பெற்றிருக்கவில்லை. அவர்களின் தோழமையில் இணை பிரி யாதிருந்ததன் பலனாக அறிவியல்தீர்க்க ஞானமும், தெளிந்த தூர நோக்கமும் கொண்டவர்களாக விளங்கினார்கள். அதன் காரணமாகவே ஆரம்பகால இரு கலீஃபாக்களின்

ஆட்சி காலத்திலும் எல்லாவித அரசியல் நடவடிக்கைகளி லும் இவர்களும் ஒரு முக்கிய ஆலோசகராக ஈர்க்கப் பட்டிருந்தார்கள். கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்கள் தம் இறுதித் தறுவாயில் தமக்குப் பின் பிரதிநிதியாக ஒருவரைத் தெரிந்தெடுக்கப் படவேண்டியது பற்றி முதலில் இவர்களி டமே கலந்தாலோசித்தார்கள். ஹழ்லரத் உமர் (ரலி) அவர் களைப் பற்றி கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்கள் கருத்தறிய முற்பட்டபோது உமர் (ரலி) அவர்களின் கடினசித்தம் பற்றிப் பேச முதலாவதாகத் துணிந்தவர்கள் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களே. ஆயினும் அந்தக் கடினசித்தம் தமது மறைவுக்குப் பின் அகன்று விடும் என கலீஃபா அவர்கள் கூறியதையும் இவர்கள் ஏற்றார்கள்.

இரண்டாம் கலீஃபா ஹழ்லரத் உமர் (ரலி) அவர்களின் காலத்திலும் கலீஃபா அவர்களின் ஆலோசகர்களில் இவர் கள் முக்கிய இடம் வகித்தனர். கலீஃபா அவர்கள் பல முடிவுகளை இவர்கள் கூறியபடியே ஏற்றார்கள். இராக்கின் புறம் செல்ல மதீனாவில் பெரும் படை திரட்டப்பட்டு கலீஃபா உமர் (ரலி) அவர்களே அதன் தலைமையேற்றுப் புறப்பட்டபோது அதனைக் கடுமையாக எதிர்த்தவர்கள் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களே. நாணயத்தின் இரு புறங்களைப் போன்று முடிவுகளைக் கொண்ட போரில் கலீஃபா அவர்களின் உயிருக்கே ஊறு விளைந்திடுமானால் சமுதாயத்தின் அழிவைத் தடுத்து நிறுத்தவே முடியாது என்ற அவர்களின் தீர்க்க ஞானத்தை அனைவரும் ஏற்ற னர். ''அமீரல் முஉமினீன்! தாங்கள் மதீனாவிலேயே தங்கி யிருங்கள். ஒருக்கால் முஸ்லிம்கள் போர்க்களத்தில் எந்த சோதனையையும் சந்திக்க நேர்ந்திடுமானால் சருகிடும் அவர்களைத் தாங்கிட உங்களின் திறன்பட்ட முயற்சியால் மதீனாவிலிருந்து அவர்களுக்கு உதவிடலாம்'' என ஹழ் லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் தந்த அறிவுரை கலீஃபா அவர்களுக்கும் மனப் பொருத்தமுடையதாகவே இருந்தது. எனினும் படையின் தலைமையை பொறுப்புடன்

ஒப்புவிக்கத் தம் மனப் பொருத்தத்துக்குரியவராக ஒருவ ரையும் காணவில்லையே என கலீஃபா அவர்கள் கவலை யுற்றார்கள். 'நான் காட்டுகிறேன்' என அவர்களுக்கு உற் சாகமளித்த ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் அச்சமயம் தாயிஃபிலிருந்த ஹழ்ரத் ஸஅது இப்னு அபீவக் காஸ் (ரலி) அவர்களை கலீஃபா அவர்களுக்கு நினைவூட்டி னார்கள். அவர்கள் கணித்தபடியே, படைத் தலைமை யேற்று பாரஸீகத்தின் புறம் சென்ற ஹழ்ரத் ஸஅது இப்னு அபீவக்காஸ் (ரலி) அவர்கள் வெற்றி மேல் வெற்றி களாகப் பெற்றுச் சேர்த்தார்கள்.

ஃபாரூக்குல் அஃலம் ஸையிதினா உமர் (ரலி) அவர் கள் ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களின் சீர்மை யில் கொண்டிருந்த நம்பிக்கைக்கு தம் இறுதித் தருணத்தில் அவர்கள் கூறிச் சென்ற ஓர் அறிவுரையே சான்றாக நிற் கிறது. கிலாஃபத்துக்கென ஒருவரைத் தெரிந்தெடுக்கப்பட அறுபெரும் நபித்தோழர்களின் பெயர்களை அறிவித்த கஃலீபா அவர்கள் அவ்வறுவருள் ஒருவராய் ஹழ்ரத் அப் துர் ரஹ்மான் (ரலி) அவர்களையும் அறிவித்ததோடேயே யன்றி அவர்களின் தகுதிக்கும் தகைமைக்கும் அளித்துச் சென்ற ஒப்புதலுக்கான குறிப்புகளையும் வரலாறு காட்டுகிறது.

கிலாஃபத்துக்கென அறிவிக்கப்பட்ட அறுபெரும் நபி மணித் தோழர்களின் சிறப்புகளையும் தனித்தனியாக விளக்கிய கலீஃபா உமர் (ரலி) அவர்கள் ''அப்துர் ரஹ்மான் தீர்க்கமான கருத்துடையவர். இறைவனின் புறமிருந்து அவர் வழி நடத்தப்படுகிறார். எனவே (அவரே கலீஃபா வாகத் தெரிந்தெடுக்கப்பட்டாலும்) அவர் சொல்கிறபடி கட்டுப்படுங்கள்'' என ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களைப் பற்றியும் குறிப்பிட்டார்கள்.

கலீஃபாவைத் தெரிந்தெடுக்கும் வழிமுறையை விளக்கி, ஆய்வின்போது மற்றெவரும் கலந்து குழப்பம் விளைவிக்கா

திருக்க ஹழ்ரத் அபூ தல்ஹா அன்ஸாரீ (ரலி) அவர்களை ஐம்பதின்மரோடு காவலாய் நிற்கப் பணித்த கலீஃபா அவர்கள், ஹழ்ரத் மிக்தாத் இப்னு அஸ்வத் (ரலி) அவர்களை அழைத்து, "ஆய்வின் போது அப்துல்லாஹ் இப்னு உமரும் இருக்கட்டும். நீரும் அவரருகே இரும். ஐவர் ஒரு முகப்பட்டுச் செய்யும் முடிவை ஒரேயொருவர் ஏற்க மறுப்பாராகில் அவரது கழுத்தை நீர் துணித்துவிடும். நால்வர் ஒருமுகப்பட்டு இருவர் பிளவுபட்டு நிற்பராயின் அவ்விருவரின் கழுத்துக்களையும் துணித்துவிடும். மூவர் மூவராகக் கருத்து மாறுபட்டு முடிவு அவர்களுக்கிடைப்படுமாயின் அவர்களிடையே அப்துல்லாஹ் தீர்ப்பளிக்கட்டும். அப்துல்லாஹ்வின் தீர்ப்பை அவர்கள் ஏற்க மறுப்பரேல் அப்துர் ரஹ்மானிப்னு அவ்ஃப் எந்தக் குழுவில் இருப்பரோ அந்தக் குழுவோடு நீரும் சேர்ந்து மற்றவர்களைக் கொன்று விடும்" எனக் கூறியும் சென்றார்கள்.

கலீஃபா உமர் (ரலி) அவர்களின் புனித உடல் அடக்கம் செய்யப்பட்டது. புதிய கலீஃபாவாக இன்னும் எவரும் தெரிவு செய்யப்படாத நிலையிலேயே இரண்டு முழு நாட்களும் கழிந்து விட்டிருந்தன. முடிவு தெரிய மூன்று நாட்களுக்கு மேல் ஆகலாகாது என்பது ஹழ்ரத் உமர் (ரலி) அவர்களின் கட்டளை. அப்படி ஆகுமானால் விளையக் கூடிய அரசியல் விபரீதங்களை வெளிச்சங்கண்டவர்களாக ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் மூன்றாம் நாள் புலர்ந்துவிட்டதை நினைவூட்டினார்கள். அவர்களின் விரைவைக் கண்ட மற்ற தோழர்கள் "எங்களனைவருக்கும் பொதுவாக, தாங்களே கிலாஃபத்தை ஏற்றுக் கொள்ளுங்கள், அந்தத் தகுதி தங்களுக்குண்டு" என அவர்களையே தூண்டினார்கள்.

"இல்லை, இந்தக் காரியத்தில் உங்களனைவரையும் முந்தினவனாக ஒருபோதும் நான் இருக்கமாட்டேன்" என விவேகத்தோடு விலகி நின்றார்கள் ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் (ரலி).

''வேண்டுமானால்—நீங்கள் யாவரும் மனமொப்பி ஏற்பதானால் கிலாஃபத்துக்கு ஒருவரைத் தெரிந்தெடுக்கும் சிரமத்தை நானே ஏற்கிறேன்—இந்த முயற்சியினிடையில் எந்த உறவு நெருக்கமோ பந்த பாசமோ என் உள்ளத்தில் ஊசலாட நான் இடம் தர மாட்டேன் என உறுதி கூறு கிறேன்''—என ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர் கள் வாக்களித்தார்கள். அவர்களின் பரிசுத்தத் தன்மையை, பய பக்தியுடன் கூடிய நேர்மையை உணர்ந்திருந்த மற்ற நபிமணித் தோழர்களனைவரும் அவ்வாக்கினை ஏற்றார் கள்.

ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களின் கவனம் முதலாவதாக ஹழ்லரத் அலீ (ரலி) அவர்களின் புறமே திரும்பியது. ஏனெனில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களுக்கு மிக நெருக்கமான இரத்த பந்தமுடையவர் களாக மற்ற யாவரையும் விட அவர்களே இருந்தார்கள். கிலாஃபத்தை நடத்துவதற்குண்டான அறிவுத் தெளிவும் மனத் துணிவும் மிகப் பெற்றவர்களாகவும் அவர்கள் விளங் கினார்கள். நீதியை நிலைப்படுத்துவதிலும் முந்திய கலீஃபா உமர் (ரலி) அவர்களிடமிருந்ததைப் போன்ற கண்டிப்பு அலீ (ரலி) அவர்களிடமே இருந்தது. அவர்களைத் தனிமையில் அழைத்துச் சென்ற ஹழ்லரத் அப்துர் ரஹ் மான் (ரலி) அவர்கள், ''அபல்ஹஸன்! மார்க்கத்தில் தாங் கள் பெற்றுள்ள முன்னிடத்தாலும் நன்மையான ஒவ்வொரு நடவடிக்கைகளிலும் பங்கேற்க விரைந்து வெற்றி சேர்த்த தகுதிகளாலும் கிலாஃபத்தின் உரிமை உங்களையே சாரும். ஆயினும் ஏதேனும் ஒரு நிர்ப்பந்தம் காரணமாக அதனை ஏற்க தங்களுக்கு வாய்ப்பற்றுப்போகும் நிலையில் மற்றவர் களில் கிலாஃபத்துக்குத் தகுதியுடையவராய் எவரைத் தாங் கள் எண்ணுகிறீர்கள்?'' என வினவினார்கள்.

''அந்நிலையில் உஃஸ்மானே என் கருத்தில் முதலிடம் பெறுபவர்'' என்றார்கள் ஹழ்லரத் அலீ (ரலி).

அடுத்து, ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களின் கவனம் ஹழ்லரத் உஃஸ்மான் (ரலி) அவர்களின் புறம் திரும்பியது. அவர்களே மற்ற அனைவரினும் முதியவரா யிருந்தனர். அத்துடன் அவர்களின் இயல்பில் அமைந்திருந்த மென்மையினாலும் ஈகைக் குணத்தினாலும் அனைவராலும் விரும்பப்பட்டவர்களாகவும் விளங்கினார்கள். அவர்களைத் தனிமையில் அழைத்துச் சென்று ஹழ்லரத் அப்துர் ரஹ் மான் (ரலி) அவர்கள், ''அண்ணலார் (ஸல்) அவர்களின் மருகர் தாங்கள். அவர்களின் இரு கண்மணிகளை ஒருவர் பின் ஒருவராய் மணந்தீர்கள். இத்தகைய பேற்றினை மற் றெவரும் பெற்றிருக்கவில்லை. அதன் காரணமாகக் கிலா ஃபத்தில் தங்களுக்கே முதலிடம் தரப்பட வேண்டும். ஆயி னும் ஒருக்கால் நீங்கள் அதனை விரும்பவில்லை யானால் வேறு யாரை அதற்கான முதலிடம் பெற்றவராகத் தாங்கள் எண்ணுகிறீர்கள்'' என வினவியபோது ஹழ்லரத் உஃஸ் மான் (ரலி) அவர்கள் ''அலீ (ரலி)யை'' எனக் கூறினார்கள்.

இதற்கிடையே ஹழ்லரத் ஸுபைர், ஸஅது (ரலி) ஆகிய இருவரும்கூட உஃஸ்மான், அலீ (ரலி) ஆகிய இருவர் இருக்க கிலாஃபத்தைத் தாங்கள் ஏற்பதில் பொருத்தம் காணாத வர்களாக, தாங்களும் தேர்விலிருந்து விலகிவிட்டதாக அறிவித்து விட்டனர்.

இனி ஹழ்லரத் உஃஸ்மான், அலீ (ரலி) ஆகிய இருவருள் ஒருவரைக் கலீஃபாவாகத் தெரிந்தெடுத்து அறிவிக்க வேண் டிய முழுப் பொறுப்பும் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களுடையதாயிற்று. இந்த இருவருள் ஒருவரே கிலா ஃபத்தை ஏற்பர் என்றானபோது ஒரு புதிய சூழ்நிலை உருவா யிற்று. அலீ (ரலி) அவர்கள் பிறந்திருந்த ஹாஷிம் குடும் பத்தவர்களும் உஃஸ்மான் (ரலி) அவர்கள் பிறந்திருந்த உமையா குடும்பத்தவர்களும் தங்களைச் சார்ந்தவரே கலீஃபாவாகிட வேண்டுமென்ற ஆவலை வெளிப்படுத்த லானார்கள். ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள்

அன்றைய எஞ்சிய பொழுதோடு தொடர்ந்த இரவு முழுவது மாக முஹாஜிர்கள், அன்ஸார்கள், மாநபித்தோழர்கள், படைத்தலைவர்கள், அதிகாரிகள், பொது மக்கள் ஆகிய அனைத்துப் பிரிவினரிடையேயும் உலவி அவர்களில் பலரின் கருத்துக்களையும் கேட்டு ஆய்ந்தனர். மறுநாள் காலை பள்ளியில் கூடிய மக்கள் முன் ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள், தாம் கேட்டறிந்த பெரும்பான்மைக் கருத்து களின்படி ஹழ்ரத் உஸ்மான் (ரலி) அவர்களையே கலீஃபாவாக அறிவித்தார்கள். ஹழ்ரத் உஸ்மான்(ரலி)அவர் களின் கரம் பிடித்து ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் பிரமாணம் செய்ய அவர்களை யடுத்து ஹழ்ரத் அலீ (ரலி) அவர்களும் பிரமாணம் செய்தார்கள். இவ்வா றாக கிலாஃபத் பற்றிய முக்கிய அரசியல் பிரச்னை ஹழ் ரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களால் முடித்து வைக் கப்பட்டது.

அரசியல் துறையில் மட்டுமின்றி மார்க்கத் துறையிலும் இவர்களின் வழிகாட்டுதல்களால் பல்வேறு சிக்கல்கள் தீர்க் கப்பட்டன. கலீஃபா அபூ பக்கர் (ரலி) அவர்களிடம் அண்ணலார் (ஸல்) அவர்கள் விட்டுச் சென்ற உடைமைகளுக்கு வாரிசுரிமை கோரப்பட்டபோது, 'நபி மார்கள் விட்டுச் செல்லும் உடைமைகள் வாரிசுரிமை கொள் ளப்படமாட்டா' என்ற நபிமொழியை உண்மைப் படுத்திய வர்கள் இவர்களே, அதே போன்று ஹிம்மஸில் காலரா பரவி மக்களைக் கொள்ளை கொண்ட சமயம் கலீஃபா உமர் (ரலி) அவர்கள் அங்கு செல்வதா, கூடாதா என தர்க்கிக்கப்பட்ட போது, 'காலரா கண்டவிடத்துக்கு நீங்கள் செல்லவும் வேண்டாம். காலரா கண்டவிடத்திலிருந்து நீங்கள் வெளியேறவும் வேண்டாம்' என அண்ணலார் (ஸல்) அவர்கள் கூறத் தாம் கேட்டதாக இவர்களே அறிவித்தார் கள். மது அருந்தியவருக்கு என்ன தண்டனை வழங்குவ தென கலீஃபா உமர் (ரலி) அவர்களின் அவையில் ஆயப் பட்ட சமயம், 'மது அருந்தியவருக்குக் குறைந்த தண்டனை

என்பது கலைசயடிகளே' என்பதற்கு ஆதாரம் தெரிவித்தவர்கள் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களே.

ஹழ்லரத் உஃஸ்மான் (ரலி) அவர்கள் கிலாஃபத்தை ஏற்ற முதலாண்டின்போதைய ஹஜ்ஜில் பங்கேற்க கலீஃபா அவர்களின் உடல் நலம் இடம் தராமல் போகவே அவர்களுக்குப் பகரமாக ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களே அவ்வாண்டு ஹஜ்ஜுடைத் தலைவராகப் பொறுப்பேற்றார்கள். கலீஃபா அவர்களால் அவ்வப்போது ஆலோசனைகளுக்கும் அழைக்கப்பட்டார்கள் என்றாலும் ஹழ்லரத் அப்துர்ரஹ்மான் (ரலி) தமது முதுமையின் காரணமாக அமைதியோடு ஒதுங்கியே வாழலானார்கள். ஏறத்தாழ எழுபது வயதுகளை எட்டியிருந்த அப்பெரியார் அப்பிந்தியகாலத்தில் எவ்வித அரசியல் நடவடிக்கைகளிலும் தீவிரப் பங்கு கொள்ளவில்லை.

நாற்பெருங்கலீஃபாக்களாலும் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் மதிக்கப்படக் காரணம் நாயகத் திருமேனி (ஸல்) அவர்களோடு அத்தோழர் கொண்டிருந்த நெருக்கமும் நேசமுமேயாகும். பெருமானார் திரு நபி (ஸல்) அவர்களின் கரம் பிடித்து இஸ்லாத்தை ஏற்ற நாள் முதல் அல்லாஹ்வின் அத்தூதர் (ஸல்) இவ்வுலக வாழ்வை நிறைவு செய்துப் பிரிந்த நாள்வரை அவர்கள் பால் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் தங்கள் அன்பையும் பாசத்தையும் மழையெனவே பொழிந்தார்கள். களங்களில் அவர்களின் வைரிகளைச் சந்திப்பதிலும் முன்னின்ற ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் உஹதுப் போரில் தங்கள் கால் ஊனமடைந்து ஊன்றி நின்று போர் செய்ய முடியாதாகி விட்ட நிலையிலும் பொருளை அள்ளித்தந்து அல்லாஹ்வின் அருளையும் அவனின் தூதரின் ஆசியையும் அள்ளிச் சேர்க்கச் சளைத்தனரேயில்லை.

உடுத்திய ஆடைகளோடு மட்டுமே அவர்கள் மதீனாவில் அடியெடுத்து வைத்தார்கள். ஆனால் அங்கே

அவர்கள் துவக்கிய வாணிபம் சிறந்து வளர்ந்து, விரைந்தே வளவாழ்வுக்கதிபதியாகி விட்ட அவர்கள், அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் கேட்டபோதெல்லாமன்றி கேட்காதபோதும் அள்ளி அள்ளி வழங்கினார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களிடம் ஒரு முறை 4000 தங்கக் காசுகளை அறப்பொருளாக வழங்கிய இவர்கள் அடுத்து 40,000 வெள்ளிக்காசுகளை ஒன்றுக்கு இருமுறை வழங்கினார்கள். 200 குதிரைகளையும் 500 ஒட்டகைகளையும் போர்த்தளவாடங்களாக அளித்தார்கள். தபூக் போருக்காக அண்ணலார் (ஸல்) அவர்கள் பொருள் திரட்டிய சமயத்தில் அனைவருக்கும் முதலாக 200 ஊக்கியா தங்கத்தோடு வந்து நின்றவர்கள் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) அவர்களே. "அப்தர் ரஹ்மான்! அல்லாஹ்வுக்காக நீவிர் வழங்கியவற்றிலும் உமது குடும்பத்துக்காக நீர் வைத்துக் கொண்டவற்றிலும் அல்லாஹ் வளத்தையே அருள்வான்" என அண்ணலார் (ஸல்) அவர்கள் அவர்களை வாழ்த்தினார்கள்.

اَللّٰهُمَّ اسْقِ عَبْدَ الرَّحْمٰنِ بْنَ عَوْفٍ مِنْ سَلْسَبِيْلِ الْجَنَّةِ

"என் இறைவா! அவஃபுடைய மகன் அப்துர் ரஹ்மானுக்கு சுவனத்தின் மதுர ஊற்றிலிருந்து பொழியச் செய்வாயாக" எனவும் அண்ணலார் (ஸல்) அவர்கள் தம்முடைய அத்தோழருக்காக ஒரு சமயம் இறைஞ்சினதாக அன்னை உம்முஸலமா (ரலி) அறிவித்திருக்கிறார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களின் மறைவுக்குப் பின்னரும் அவர்களின் மனைவிமார்களான உம்முல் முஃமினீன்களிடம் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் தங்கள் வாழ்நாள் பரியந்தம் மிகுந்த அன்புடனும் கண்ணியத்துடனும் நடந்து கொண்டார்கள். அவர்களின் வாழ்க்கைச் செலவுக்காக இவர்களால் அன்பளிப்பாக்கப்பட்ட ஒரு நிலம் 40,000 திர்ஹங்களுக்கு விலையாயிற்று. அத்துடன் மட்டு

மின்றி அவர்களில் ஒவ்வொருவருக்கும் தேவைப்பட்ட போதெல்லாம் அனைத்துதவிகளையும் தாராளமாகவே செய்தார்கள். ஹஜ்ஜுக்காக அன்னையர் புறப்படும் போதும் அவர்களின் மற்ற பயணகாலங்களிலும் ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களே அவர்களோடிருந்து அவர்களுக்கான வாகன முன்னேற்பாடுகளையும் தங்கு மிடங்களையும் சித்தப்படுத்துவர். ''எனது மரணத்துக்குப் பின்னர் உண்மையும் நன்மையும் நிறைந்த ஒருவர் என் குடும்பத்தினரைக் கவனித்துக் கொள்வார்'' என்ற அண்ணலார் (ஸல்) அவர்களின் முன்னறிவிப்புக்கு இவர்களே பொருத்தமுடையவர்களாயினர்.

அள்ளிவழங்கி மறுமைப்பேறுகளைக் கொள்ளை கொண்டிருந்த அவர்களின் வாழ்நாளில் ஒரு போதும் அவர்களின் செல்வம் குறைபட்டதே இல்லை. வளம் அவர்களை நாற்புறமும் சூழ்ந்தே நின்றது. ஒரு முறை மயக்கமடைந்த இவர்கள் உணர்வு மீண்டபோது ''பயங்கர வானவர் இருவர் என் அருகில் நின்றிருந்தனர். அவர்களில் ஒருவர் 'கண்ணியம் பொருந்திய இறைவனின் சமுகத்துக்குப் புறப்படும்' என என்னை அழைத்தார். அதற்குள் மற்றொருவர் 'வேண்டாம் அவரை விட்டுவிடும். தாயின் கர்ப்பத்திலேயே நற்பேறு முன்சென்று அவரை அணைத்துக் கொண்டுள்ளது' எனக் கூறி விட்டுவிட்டார்'' என்று அவர்கள் கூறியதாக அவர்களின் மகனார் ஹழ்ரத் இப்ராஹீம் (ரலி) அவர்கள் கூறினர்.

கால் நடைகளுக்கான பொது மேய்ச்சல் நிலங்களின் காவலர்களுக்கு கலீஃபா உமர் (ரலி) அவர்கள் ''உஃஸ்மான் இப்னு அப்ஃபான், அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) ஆகியோரின் கால் நடைகளை விட்டும் மேய்ச்சல் நிலங்களைக் காப்பீராக. அவை அங்கு நுழைந்துவிடுமானால் குறைந்த வருவாயுடையவர்களின் மிருகங்களுக்கு அங்கு இடமில்லாமலாகி அவை பசியின் காரணமாக வயல்களிலும் தோட்டங்களிலும் புகுந்து விளைச்சல்களைநாசப்

படுத்தி விடலாம்'' என எச்சரித்திருந்தார்களெனில் அவ்விருவரின் உடைமைகளான ஆடு மாடு ஒட்டகைகளின் பெருக்கத்தைக் கணித்துப் பார்க்கலாம். அவ்விருவருமே தங்கள் மிருகங்களுக்காக தனி மேய்ச்சல் நிலங்களையும் வைத்திருந்தார்கள்.

ஈகையும் கொடையும் மிகைத்திருந்தும் இப்பெரு வள்ளல் தங்களின் செல்வப்பெருக்கால் மறுமைப் பேற்றினை இழந்து விடுவோமோ என்ற அச்சத்தால் ஆட்கொள்ளப் படாமலுமில்லை. ஒரு முறை இவர்கள் உம்முல் முஉமினீன் ஹழ்லரத் உம்முஸலமா (ரலி) அவர்களிடம், ''அன்னையே! என் செல்வப் பெருக்கு என்னை அழித்து விடுமோ என அஞ்சுகிறேன்'' என்று வருந்தியபோது அன்னையார் உம்மு ஸலமா (ரலி) அவர்கள், ''அல்லாஹ்வின் பாதையில் உம்முடைய கருவூலங்களைத் திறந்து வைப்பீராக. 'என் தோழர்களில் சிலர் நீண்ட பிரிவினைக்குப் பின்னரே என்னைச் சந்திப்பார்கள்' என நபி பெருமான் (ஸல்) அவர்கள் கூறக் கேட்டிருக்கிறேன்'' என்று கூறினார்கள்.

''செல்வந்தர்கள் சுவனம் புக ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னதாகவே என் சமூகத்திலுள்ள ஏழைகள் சுவனம் புகுந்திடுவார்கள்'' என அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் அருளினார்கள்.

''நபிமார்களில் ஹழ்லரத் ஸுலைமான் (அலை) அவர்களும் என் தோழர்களில் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃபுமே இறுதியாக சுவனம் புகுவார்கள்'' என்றும் பெருமானார் (ஸல்) அவர்கள் ஒரு சமயம் அறிவித்தார்கள்.

இவற்றையெல்லாம் செவியுற்ற ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) அவர்கள் தாங்கள் தேடிய செல்வத்தையெல்லாம் முழுமையாகவே துறந்து விடத் துணிந்து விட்டார்கள். ஆயினும் அண்ணலார் (ஸல்) அவர்கள் அந்தத் தோழரை அழைத்து, விருந்தினரை உபசரிக்குமாறும் ஏழைகளின் பசி தீர்க்குமாறும் இரப்போர்க்கு

அள்ளி வழங்குமாறும் உறவினருக்கு முன்னிடம் தருமாறும் அவையே சுவனத்துள் புக அவர்களுக்குள்ள சிரமத்தை அகற்றப் போதுமானவை என வானவர் ஜிப்ரயீல் (அலை) தம்மிடம் அறிவித்துச் சென்றதாகக் கூறினார்கள்.

ஒரு மாலை நேர—மக்ரிபு—த் தொழுகைக்காக ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் 'ஒழ்லு' செய்து நிமிர்ந்தார்கள். அதே சமயம் அவர்களின் வாணிபக்குழு மதீனாவினுள் நுழைந்து கொண்டிருந்தது. ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களின் கவனம் அதன் புறம் திரும்பியது. வந்து கொண்டிருந்த ஒட்டகைகளின் வரிசைகளை அவர்கள் பார்வையிட்டுக் கொண்டிருந்த நிலையிலேயே தொழுகையின் முதல் ரக்அத்தே முடிந்துவிட்டது. இரண்டாம் ரக்அத்துக்கென எழுந்து நின்ற பெருமானார் (ஸல்) அவர்கள் 'ஃபாத்திஹா' அத்தியாயத்தை ஓதி முடித்து 'வல்—அஸ்ரி' எனத் துவங்கும் 103-வது அத்தியாயத்தை ஓதத் துவங்கினார்கள். ''காலத்தின் மீது சத்தியமாக மனிதன் நஷ்டமடைந்து விட்டான்'' என்ற பொருள் கொண்ட முதல் இரண்டு வசனங்கள் அண்ணலரின் வாய்வழி வெளிப்பட்டு ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களின் செவிப்பறைகளைத் தாக்கி அவர்களைப் பொறி கலங்கச் செய்தன! விரைந்து அவர்கள் தொழுகையில் கலந்து கொண்டார்கள்.

தொழுகை முடிந்தபோது அவர்களின் உள்ளத்தைக் கவலை சூழ்ந்திருந்தது. பெருமானார் (ஸல்) அவர்களை அண்மிய ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் அன்று வந்திருந்த தங்கள் வணிக உடைமைகளனைத்தையும் அவற்றைச் சுமந்திருந்த ஒட்டகைகளுட்பட அல்லாஹ்வுக்காகத் தாங்கள் அர்ப்பணித்து விட்டதாகவும் ஏற்றருளும்படியும் கூறினார்கள்.

''அப்தர் ரஹ்மான்! இப்படிச் செய்ய உம்மைத் தூண்டிய உணர்வெதுவோ?'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் வினவினார்கள்.

ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் "என் தந்தையும் தாயும் தங்களுக்கர்ப்பணம். அல்லாஹ்வின் தூதரவர்களே! 'காலத்தின் மீது சத்தியமாக மனிதன் நஷ்டமடைந்து விட்டான்' என தாங்கள் என்னையே சுட்டிக்காட்டியதாக உணர்ந்தேன். எனவேதான் என்னை நஷ்டப்படுத்திய இந்த உடைமைகளை அல்லாஹ்வுக்காக அர்ப்பணித்திட நான் துணிந்தேன்" என்றார்கள்.

"ஆம், உம்மைக் கவனித்தே நான் கூறினேன்* அப்தர் ரஹ்மான்! இந்த பூமி முழுவதுமே பொன்னாகி உமக்குக் கிடைத்து, அதனை நீர் முழுமையாகவே அறம் வழங்கி விட்டாலும் சரியே, தவறவிட்ட அந்த ஆரம்ப தக்பீர்—தஹ்ரீமாவு—க்குண்டான நன்மையை நீர் ஈடு செய்ய மாட்டீர்" என அண்ணலார் (ஸல்) அவர்கள் விளக்கக் கேட்டு ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் கண்ணீர் உகுத்தார்கள்.

"என் உம்மத்துகளில் உள்ள சீமான்களில் முதலாவதாக அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃபே சுவனம் புகுவார்"* என்றும் நபி பெருமான் (ஸல்) அவர்கள் அருளிச் சென்றார்கள்.

தொட்டதெல்லாம் பொன்னாகும் தட்டிலாப் பேறு பெற்றிருந்த ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் ஒரு முறை வாணிப நிமித்தம் வெளியூர் சென்று திரும்புகையில் அவர்களின் பின்னே அவர்கள் திரட்டிய செல்வம் எழுநூறு ஒட்டகைகளின் மீதேற்றிக் கொண்டு வரப்பட்டது. அவ்வொட்டகைகளைக் கட்டுவதற்கும் இடமில்லாமல் மதீனாவே அமர்க்களப்பட்டது. மக்களின் குரல் கேட்டுச் செய்திகளையறிந்த அன்னை ஆயிஷா நாயகியார், "அப்

* தங்களுக்கு முன்னால் நடப்பதைக் காண்பதேபோல் தங்களுக்குப் பின்னால் நடப்பதையும் காண்பது அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களுக்கு அருளப்பட்டிருந்த முஃஜிஸாக்களில் ஒன்றாகும்.

துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் தலை குனிந்த வண்ணம் சுவனத்துள் நுழைய நான் கண்டேன்'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் கூறத் தாம் செவியுற்றதாகப் பேசிக்கொண்டார்கள். இச் செய்தியைச் செவியுற்ற ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் 'இச் செல்வமே அதன் காரணமோ' என ஐயுற்றவர்களாக அச் செல்வமனைத்தையும் அதனைச் சுமந்து வந்த ஒட்டகைகளையும் அவற்றைக் கட்டியிருந்த கயிறுகளோடு தர்மம் செய்து விட்டார்கள். அச் செய்தியைக் கேள்வியுற்ற அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் ''அதனைப் பல மடங்காகச் சுவனத்தில் அவர் பெற்றுக் கொள்வார்'' என வாழ்த்தினார்கள்.

இத்தகைய இறையச்சத்தின் காரணமாக அத்துணைச் செல்வப் பெருக்கத்துக் கிடையிலும் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களின் வாழ்க்கை எளிமை மாறாமலே இருந்தது. தங்களின் அடிமைகளிடையே அமர்ந்து அவர்கள் உரையாடிக் கொண்டிருக்கையில் அவ்வடிமைகளை விட்டும் அவர்களைப் பிரித்தறிவது சிரமமாயிருந்தது. செல்வமும் சுகபோகமும் குடைபிடிக்கக் காத்திருந்த நிலையிலும் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களின் நினைவை விட்டும் வறுமையில் உழன்ற அவர்களின் முன்னோடிகள் ஒரு நாளும் மறையவில்லை.

ஒரு நாள் நெருங்கிய தோழர்கள் சிலரோடு இல்லம் வந்தடைந்த அவர்கள் உள்ளே சென்று நீராடி உடை மாற்றி மகிழ்ச்சியோடு அத்தோழர்களோடு உணவுண்ண அமர்ந்தார்கள். நல்ல ரொட்டியும் கறியும் சமைத்துக் கொணர்ந்து விரிப்பில் பரிமாறப்பட்டது. அவற்றைக் கண்டதுமே ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களின் கண்களில் நீர் வடிந்தது. ''நாங்கள் திடுக்கிட்டுக் காரணம் கேட்டோம். 'அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் வாழ்நாளில் அவர்களுக்கும் அவர்களின் குடும்பத்தார்க்கும் ஒரு நாளும் வயிறார சோளரொட்டியும் கிடைத்ததில்லை. அவர்களுக்

குப் பின் இத்தனை காலம் உயிரோடிருப்பதே நமது துர்ப் பேறாகும்' என அவர்கள் கூறினார்கள்—என்று னவ்ஃபில் இப்னு அயாஸ் என்ற பெரியார் அறிவிக்கின்றனர்.

ஒரு நாள் பகல் முழுவதும் நோன்பிருந்த அவர்கள் மாலை உணவுண்ண அமர்ந்தபோதும் கண்ணீர் வடித் தார்கள். ''உஹதுப் போரில் உயிர் நீத்த ஹம்ஸாவும், முஸ்அப் இப்னு உமைரும் என்னைவிட மேலானவர்கள். ஆயினும் அவர்களின் சடலங்களைப் பூரணமாகப் போர்த்து வதற்கும் அவர்களிடம் ஆடைகள் இருந்ததில்லை. தலை களைப் போர்த்திய போது கால்கள் வெளித் தெரிந்த நிலை யிலேயே அவர்கள் அடக்கப் பெற்றனர். ஆனால் உலகம் இன்று நமக்கு விரிவடைந்து விட்டது. இம்மையின் செல் வங்கள் நம்மிடம் பெருகிக் கிடக்கக் காணும்போது நாம் தேடிக் கொண்டவை நமக்கு இம்மை வாழ்வோடு முடிந்து விடுமோ என நான் அஞ்சுகிறேன்'' என்ற அவர்கள் அவ் வுணவிலிருந்து தம் கைகளை விலக்கிக் கொண்டார்கள்.

இத்தகைய இறையச்ச வாழ்வை இயல்பிலேயே கொண் டிருந்த ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களுக்கு அண்ணலார் (ஸல்) அவர்களின் வாழ்நாளிலேயே கிடைக் கப் பெற்ற ஒரு பெரும் பேற்றை அறுபெரும் 'ஹதீஃஸ்' பேழைகளில் ஒன்றான 'முஸ்லிமி'ல் அதன் ஆசிரியர் குறிப் பிடுகிறார்கள்:

''தபூக் போரில் அண்ணலார் (ஸல்) அவர்களுடன் கலந்து கொண்ட நான், ஒரு நாள் அவர்கள் காலைக்கடன் கழிக்கச் சென்றபோது தண்ணீர்க் குவளையுடன் அவர்களின் பின் சென்றேன். அவர்கள் திரும்பியபோது அவர்களின் கரங்களில் நான் தண்ணீர் ஊற்றினேன். அவர்கள் தங்களிரு கரங்களையும் மும்முறை கழுவினார்கள்; முகத்தையும் கழுவினார்கள்; சட்டையின் கைகளை உயர்த்தினார்கள்; அவை உயராதபடி இறுக்கமாக இருக்கவே அவற்றிலிருந்து தங்கள் கைகளை வெளியே உருவி முழங்கைகள் வரை

கழுவினார்கள்; காலணிகளின் மீது நீரால் துடைத்தார்கள்; பின்னர் நடந்தார்கள். நானும் நடந்தேன்.

மக்கள் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களை முன்னிருத்தித் தொழுது கொண்டிருந்தார்கள். நான் அவரை நகர்த்த எண்ணினேன். ஆனால் அண்ணலார் (ஸல்) அவர்கள் என்னைத் தடுத்து விட்டார்கள். அண்ணலார் (ஸல்) அவர்களுக்கு ஒரு ரக்அத்தே கிடைத்தது. அவர்கள் மக்களோடு சேர்ந்து நின்று அந்த ஒரு ரக்அத்தைத் தொழுது கொண்டார்கள். அப்துர் ரஹ்மான் (ரலி) தொழுகையை முடித்த பின் அண்ணலார் (ஸல்) அவர்கள் தமக்கு விடுபட்டுப்போன ஒரு ரக்அத்தை நிறைவுபடுத்த எழுந்தார்கள். அதனைக் கண்டு மக்கள் திகைப்புற்றனர். (அப்துர் ரஹ்மான் (ரலி) தவறி விட்டதாக எண்ணி அதனை உணர்த்த) 'ஸுப்ஹானல்லாஹ்' என்ற ஒலிகள் பலரிடமிருந்து வெளிப்பட்டன. தங்களின் தொழுகையை முடித்தபின் பெருமானார் (ஸல்) அவர்கள் ''தொழுகையின் நேரந்தவறிவிடாதிருக்கக் கருதி நீர் செய்தது மிகச் சரியே'' என்றதோடு, ''தக்வாவென்னும் இறையச்சமுடைய ஒருவரின் பின் நின்று தொழாது எந்த நபியும் மரணிப்பதில்லை'' என மக்களுக்கு அருளினார்கள்—என்ற இந்தச் செய்தி ஹழ்ரத் முகீரா இப்னு ஷுஅபா (ரலி) அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ளது.

அண்ணலார் (ஸல்) அவர்களின் திருவாயால் ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களின் 'தக்வா' அங்கீகரிக்கப்பட்ட மகத்தான நிகழ்ச்சி அது!

அல்லாஹ்வின் தூதரே தங்களின் பின் நின்று தொழ நற்பேறு பெற்ற நபிமணித் தோழர் ஹழ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களையல்லாமல் ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவஃப் (ரலி) அவர்கள் மட்டுமேயாவர்.

கலீஃபா உஃஸ்மான் (ரலி) அவர்களின் அவையில் ஒரு நாள் ஹழ்ரத் ஸுபைர் (ரலி) அவர்கள், ''உமர் இப்னுல் கத்தாப் (ரலி) அவர்களுக்கு பெருமானார் (ஸல்) அன்புடன் அளித்த ஒரு நிலத்தை உமர் (ரலி) அவர்களின்

ம்க்களிடமிருந்து விலை கொடுத்து வாங்கினேன். அப்துர் ரஹ்மான் (ரலி) தமக்கும் அண்ணலார் (ஸல்) அந்த நிலத்தை ஒட்டியே நிலம் ஒதுக்கியதாகவும் அதன் ஒரு பகுதி நான் வாங்கியுள்ள நிலத்துடன் சேர்ந்துள்ளதாகவும் வாதிடுகிறார்'' என முறையிட்டு நின்றனர். அதனைக் கேட்ட கலீஃபா அவர்கள் ''அப்துர் ரஹ்மான் (ரலி) அவர் களின் வாதம் உமக்குச் சாதகமாக இருந்தாலும் பாதக மாக இருந்தாலும் அது ஏற்கப்படும்'' என கூறிவிட்டார் கள் என இமாம் அஹ்மத் (ரஹ்) அவர்கள் தங்களின் மஸ்ன தில் குறிப்பிடுகிறார்கள்.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் வாழ் நாள் முழுவதும் அவர்களோடு தோழமை பூண்டிருந்தும் அவர் களின் அருள்மொழிகள் அறுபத்து ஐந்தையே ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) தங்கள் வாழ்நாள் முழுதும் அறிவித்துள்ளார்கள். ஹதீஃஸ் அறிவிப்பாளர்களின் வரிசை யில் அவர்கள் ஐம்பத்து ஓராவது இடத்திலேயே காணப் படினும் மிகச் சிக்கலான தருணங்களில் அவர்கள் மாநபி (ஸல்) அவர்களின் வாழ்வையும் வாக்கையும் நினைவூட்டி கலீஃபாக்களுக்கு உதவியிருக்கிறார்கள்.

பிற்காலத்தில் நோயுற்று விட்ட நிலையிலும் அவர் களின் தர்மத்தின் தலைவாசல் திறந்தே கிடந்தது. தங்க ளின் ஒரு தோட்டத்தை கலீஃபா உஃஸ்மான் (ரலி) அவர் களிடம் 40, 000 தங்கக் காசுகளுக்கு விற்பனை செய்து அத்தொகையை அப்படியே அறம் வழங்கினார்கள். ஒரே நாளில் முப்பது முப்பது அடிமைகளாக அவர்களால் உரிமை யளிக்கப்பட்டு வந்தனர். மரணப்படுக்கையிலும் தங்களின் அடிமைகளாக இருந்த ஆயிரம் பேர்களுக்கு அவர்கள் உரிமை வாழ்வளித்தார்கள்; ஐம்பதினாயிரம் தங்கக் காசு களையும் ஓராயிரம் குதிரைகளையும் அல்லாஹ்வின் பாதை யில் அர்ப்பணித்துச் சாஸனம் செய்தார்கள்; உம்முல் முஃமினீன்களுக்காக ஒரு பெருந்தோட்டத்தை சாஸனஞ்

செய்துவைத்தார்கள். அது பின்னர் நான்கு லட்சம் தங்கக் காசுகளுக்கு விற்பனையாயிற்று. அக்காலத்தில் உயிரோடிருந்த பத்ரு ஸஹாபாக்கள் ஒவ்வொருவருக்கும் நானூறு தங்கக் காசுகள் வீதம் அன்பளிப்புச் செய்தனர். தங்களின் வாழ்நாளில் அள்ளிக் கொடுப்பதேயன்றி ஒரு சல்லிக் காசையும் எவரிடமும் பெறத் தேவையற்றிருந்த சீமானாகிய கலீஃபா உஃஸ்மான் (ரலி) அவர்களும்கூட ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களால் தரப்பட்ட அவ்வன்பளிப்பை பரக்கத்துடைய அருட்செல்வமாகப் போற்றி ஏற்றுக் கொண்டார்கள்.

வரையிலாப் பெருங்கொடைக்குப் பின்னரும் வளர்ந்தோங்கி நின்ற அவர்களின் கருவூலங்கள் மரணத்துக்குப் பின் அவர்களின் குடும்பத்தாருக்கிடையே பங்கிடப்பட்ட போது அதில் எட்டிலொரு பாகத்தைப் பிரித்துக் கொண்ட நான்கு மனைவியர்களில் ஒவ்வொருவரும் எண்பதினாயிரம் தங்கக் காசுகள் வீதம் பெற்றனர். அவர்கள் தங்கள் குடும்பத்தாருக்கு ஓராயிரம் ஒட்டகைகளையும், ஒரு நூறு குதிரைகளையும், மூவாயிரம் ஆடுகளையும் விட்டுச் சென்றார்கள். அவர்கள் தம் உடைமைகளாய் விட்டுச் சென்ற, பொன்னாலும் வெள்ளியினாலும் ஆன பாளங்கள் சம்மட்டிகளால் வெட்டிப் பிளந்து பிரிக்கப்பட்டன. அப்பணியில் ஈடுபட்டிருந்தவர்களின் கரங்கள் கொப்புளித்துச் சோர்வடைந்தன.

ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் இஸ்லாத்துக்கு முன்னர் குரைஷித் தலைவனான உத்பாவின் மகள் உம்மு குல்ஸூமுடனும் உத்பாவின் உடன் பிறந்த ஷைபாவின் ஒரு மகளுடனும் இலலறம் நடத்தி வந்தனர். மக்காவிலேயே அவ்விருவரையும் துறந்து ஹிஜ்ரத்துச் செய்த அவர்கள் ஆஸிம் என்ற அன்ஸாரித் தோழரின் 'ஸஹ்லா' என்ற மகளோடு மணவாழ்வு கொண்டார்கள். அதன் பின்னும் அவர்கள் பல பெண்களை மணந்துள்ளார்கள். உக்பா இப்னு அபீமுஈத் என்ற குரைஷிக் கொடுங்கோல

னின் மகளான உம்மு குல்ஸூம் என்ற ஓர் அம்மையார் இஸ்லாத்தை ஏற்று ஹிஜ்ரத் செய்து மதீனாவில் வாழ்ந்து வந்தார். பின்னர் விதவையாகிவிட்ட அவருக்கும் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் வாழ்வளித்தார்கள். ஹிஜ்ரி 6-ம் ஆண்டில் அவர்களை ஒரு படையொடு தூமத்துல் ஜந்தலில் வாழ்ந்த கஅபு கூட்டத்தினரை வழிப்படுத்தி வர அனுப்பிய அண்ணலார் (ஸல்) அவர்கள், தங்கள் கரத்தாலேயே அவர்களுக்கு தலைப்பாகை கட்டிவிட்டு 'கஅபு' கள் சொல்லேற்று வழிப்பட்டு விடுவார்களாயின் அவர்களின் தலைவரான அஸ்பஃக் என்பவரின் மகளை அத்தலைவரின் சம்மதம் பெற்று, மணங்கொள்ள தங்கள் தோழரைப் பணித்தார்கள். அதே விதமாக அஸ்பஃகின் மகள் 'தமாளர்' என்ற பெண்மணியையும் மணமுடித்து வந்தார்கள். இவ்வாறாக, பல பெண்களின் மூலம் அவர்கள் இருபது ஆண் மக்களையும் எட்டு பெண் மக்களையும் பெற்றெடுத்தார்கள்.

வற்றாப் பெருஞ் செல்வராய் வாழ்ந்த அவ்வளமார் நபிமணித் தோழர் ஹிஜ்ரி 32-ம் ஆண்டில் தங்களின் 72-ம் வயதில் அழிவுடைய இவ்வுலக வாழ்வை நீத்து அழியாப் பேருலக வாழ்வை எய்தினார்கள். கலீஃபா உஃஸ்மான் (ரலி) அவர்களால் தொழுவிக்கப்பட்ட அவர்களின் புனித உடலை ஜன்னத்துல் பகீஇன் மண்ணறையில் ஹழ்லரத் ஸஅது இப்னு அபீ வக்காஸ் (ரலி) அவர்கள் இறங்கி அடக்கம் செய்தார்கள். அப்புனித நபித் தோழரின் மண்ணறைக்கு மேலாகப் பந்தலிடப்பட்டிருப்பதைக் கண்ட ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் தங்கள் அடிமையை அழைத்து, ''வாழ்ந்தபோது அவர் ஆற்றிய நற்செயல்களே அவருக்கு நிழலிடப் போதுமானவை. இதனை அகற்றிவிடுவாயாக'' என ஏவினார்கள்.



## ஹழ்லரத்

# ஸஈது இப்னு ஜைத் (ரலி)

அமீருல் முஃமினீன் ஸைய்யிதினா உமர் (ரலி) அவர்களின் பாட்டனார் னுஃபைல் இப்னு அம்ருவுக்குப் பிறந்த ஆண் மக்கள் இருவர். அவ்விருவரில் இளையவரே ஹழ்லரத் உமர் (ரலி) அவர்களின தந்தை கத்தாப். தமையனார் அம்ரு எனபவர் தம் தந்தைக்குத் தலை மகனாகப் பிறந்ததை யன்றி மற்றெந்த குறிப்பிடத்தக்க அம்சமும் பெற்றிலங்க வில்லை. எனினும் அம்ரின் மகனாகப் பிறந்த 'ஜைத்' என்பவா மட்டும் தமக்கென ஒரு தனிச் சிறப்பைத் தேடிக் கொண்டார். உலக வாழ்க்கையின் முடிவு வனாந்திரப் பாலையில் ஓர் அனாதையுடையதாகவே அவருக்கு அமைந்த தென்றாலும் ''மறுமையில் ஜைத் தன்னந்தனியராகவே ஒரு தனிச் சமுதாயமாக எழுப்பபப்படுவார்'' என அண்ணல் எம்பெருமான் முஹம்மது (ஸல்) அவர்களால் அவர் சிறப் பித்துக் கூறப் பெற்றார்.

அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் தங்கள் நபித்துவத்தைப் பிரகடனம் செய்வதற்கு முந்திய மக்கநகர வரலாற்றிலும் வாழ்க்கையில் ஒழுக்கமுறையைப் பேணிய சிலர்களான பத்து அல்லது பனிரண்டு பேர்கள் காணவே கிடைக்கின்றனர். படைத்துப் பரிபாலிக்கும் ஏகன் ஒருவனுக்கு மட்டுமே தலை வணங்கிய ஹழ்லரத் இப்ராஹீம் (அலை) அவர்களுடைய மார்க்கத்தைப் பற்றி அறிந்திருந்த அவர்கள், கஅபாவின் மருங்கில் காணப்பட்ட கற்சிலை களையெல்லாம் வெறுப்புக் கண்களாலேயே நோக்குவர். கல்லையும் மண்ணையும் உருக்களாகச் சமைத்து— ஆக்கவோ அழிக்கவோ ஆற்றலற்ற — அவற்றுக்கு முன்னால் மண்டியிட்டு நின்ற மக்களைக் காணும்போதெல்லாம் அந் நல்லோர்களின உள்ளங்கள் நைந்துருகின. மக்க மாநகரைக்

கவிழ்ந்திருந்த மவுட்டீக இருளுக்குள்ளேயே இங்கொன்றும் அங்கொன்றுமாக மிளிர்ந்த வெண் முத்துக்களில் அம்ருவின் திருமகனார் ஜைதும் ஒருவர்—மிக்கச் சிறப்புக்குரியவர்; ஆழ்ந்த சிந்தனையாளர்.

அவர் ஒரு நாளும் அந்தச் சிலைகளை வணங்கியவரல்லர்; மதுவைத் தீண்டியவரல்லர்; பிற மங்கையரை ஏறிட்டு நோக்கியவருமல்லர். குரைஷிகளின் அக்கால மவுட்டீகத்துக்கு முற்றிலும் மாற்றமான ஒரு மனிதராகவே அவர் விளங்கினார். பெண் மக்களையெல்லாம் பெருஞ்சாபக் கேடாக எண்ணி உயிருடன் அவர்களைப் புதைத்துக் கொண்டிருந்த அரபுகளிலேயே அம்மழலைகளின் வாழ்வுகளைத் துளிர்க்கச் செய்யும் ஒளிக்கதிராக ஜைத் விளங்கினார். அரக்க நெஞ்சங் கொண்ட தந்தையர்கள் தாங்கள் பெற்ற குழவிகளின் உயிர்களுக்கு உலை வைக்கத் துணியுந்தோறெல்லாம் இடையில் குறுக்கிட்டு, அம்மழலைகளை மீட்டு அவர்களை வளர்க்கப் பொறுப்பேற்று, கொண்டு செல்வதில் ஜைத் கண்ட இன்பம் ஓர் அலாதி! அப்படி அவரால் பொறுப்பேற்கப்படும் அப்பெண் குழந்தைகள் வளர்ந்து பருவமடைந்த பின்னரும்கூட—அவர்களைப் பெற்றவர்கள் பிரியப்பட்டால் மட்டுமே தங்கள் மக்களைத் திரும்ப அழைத்துச் செல்லலாமேயன்றி—அவர்களின் எதிர்காலத்தை மலரச் செய்யும் பொறுப்புகளையும் ஜைதே ஏற்றுக் கொள்வதுமுண்டு.

பட்டாடைகள் உடுத்தி, பொன்னாபரணங்கள் பூட்டி, பகட்டுடன் பெருவாழ்வு வாழ்ந்த—அரபு நாட்டின்—பெரும் பெருங் குடும்பத்தவரெல்லாம் கற்சிலைகளை வணங்கி, அவற்றின் முன்னால் தங்கள் கால்நடைகளைப் பலியிடும் காட்சிகளைக் காணும் போதெல்லாம் தம் சமூகத்தாரின் மதியீனத்தை எண்ணி மனங் கலங்கினார் ஜைத் இப்னு அம்ரு இப்னு னுஃபைல். அந்தப் பலிப்பொருளை அவர் உண்பதுமில்லை.

நாயகத் திருமேனி (ஸல்) அவர்களை அவர்களின் நபித்துவத்துக்கு முன்னர் ஜைத் சந்தித்ததுண்டு. 'தன்ஈ' மூக்குச் செல்லும் பாதையில் 'பல்தஹ்' என்னும் பள்ளத் தாக்கில் ஒரு முறை அண்ணலார் (ஸல்) அவர்களோடு அமர்ந்து ஜைத் அளவளாவிக் கொண்டிருக்கையில் அவ்விரு வருக்கும் முன்பாக குரைஷிகளின் ஒரு கூட்டத்தார் தங்கள் பலியுணவைச் சமர்ப்பித்தனர். அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் முதலில் அமைதியாக அதனை ஒதுக்கி விட்டார்கள். பின்னர் அவ்வுணவு ஹழ்லரத ஜைத் அவர் களுக்கு முன் வைக்கப்பட்டது. அன்னவரோ 'சிலைகளுக்கு முன்பாக நீங்கள் காணிக்கையாக வைத்த அவ்வுணவை நான் உண்ணமாட்டேன' என வெளிப்படையாகவே கூறிப் புறக்கணித்து விட்டார்.

இருட்டுக் குகைக்குள் நின்று தம் குருட்டுக் கண்களால் அவரைப் பார்த்த குரைஷிகளிடத்தில்—இப்ராஹீம் (அலை) அவர்களின் மார்க்கமே தமக்குச் சொந்தமானது என்று கூறிக் கொண்டதற்காக வேண்டி—அவர் பல கொடுமை களையும் அனுபவிக்க நேர்ந்தது. அவருக்குக் கொடுமை இழைததவர்களில் அவரின் சிறிய தந்தை கத்தாபே முதலி டம் பெற்று விளங்கினார்.

ஹழ்லரத் ஸுபைர் இப்னு அவ்வாம் (ரலி) அவர்களின் மனைவியாா அஸ்மா பின்த்து அபூபக்கர் (ரலி) தம் சிறு வயதில் காண நேர்ந்த ஒரு நிகழ்ச்சியினை விவரித்தனர்: ஒரு நாள் கஅபாவின சுவர்மீது சாய்ந்து கொண்டிருந்த அப்பெரியார் குரைஷிகளை நோக்கி ''என் உடன் பிறப்பு களே! இறைவனே இக்கால்நடைகளைப் படைத்தான். அவனே விண்ணிலிருந்து உங்களுக்கு மழையைப் பொழியச் செய்கிறான். அம்மழையின் மூலம் மண்ணில் புற்பூண்டு களை முளைக்கச் செய்கிறான். அந்த அல்லாஹ்வால் படைக் கப்பட்டு, அவனால்விளைவிக்கப்பட்டஉணவுகளையேஉண்டு வளர்ந்த இக்கால்நடைகளை கேவலம் இந்தக் கற்சிலை களின் பெயரால் பலியிடும் உங்களை நான் அறியாமையின்

திளைத்தவர்களாகவே காணுகிறேன்" என நல்லுரை பகன்றார்.

அதனைக் கேட்டுக் கொண்டிருந்த அவரின் சிறிய தந்தை-ஹழ்ரத் உமர் (ரலி) அவர்களைப் பெற்ற கத்தாப் "என்ன உளறிக் கொட்டி எங்களின் பொறுமைகளை கரை கடக்கச் செய்கிறாய்" என்று கேட்டவாறாக ஜைதின் முகத்தில் ஓங்கி அறைந்தார். அவரின் தூண்டுகலால் மற்ற குரைஷிகளும் ஒன்று சேர்ந்து தாக்கவே பெரியார் ஜைத் அங்கிருந்து 'ஹிரா' மலைக்கு ஓடிச் சென்று தங்கிடம் தேடிக் கொண்டார். சிறிய தந்தை கத்தாப் செய்திருந்த முன்னேற்பாடுகளின் படி இவரை மக்காவுக்குள் நுழையவிடாமல் குரைஷிகள் கண்காணித்து வந்தனர். அதன் காரணமாக மக்காவில் இவரின் நடமாட்டம் மறை முகமானதாகவே இருந்தது.

ஒரு நாள் ஜைத் இப்னு அம்ரு இப்னு னுஃபைல், வரக்கா இப்னு னவ்ஃபல், அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ், உஸ்மான் இப்னு ஹாரிஃஸ், (நபிபெருமான் (ஸல்) அவர்களின் மாமியான) உமைமா பின்த் அப்துல் முத்தலிப் ஆகியோர் இரகசியமாகக் கூடி அரபிகளின் வழி தவறியப் போக்கைப் பற்றி சிந்திக்கலானார்கள். தங்களுடைய முன்னோரான நபி இப்ராஹீம் (அலை) அவர்களுடைய மார்க்கத்தை அவர்கள் தவற விட்டதுமின்றி அதனைக் குழி தோண்டிப் புதைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதைத் தெளிவுபடுத்திய ஜைத் 'இதிலிருந்து தப்பி நீங்கள் ஈடேற்றத்தை விரும்பினால் புதிய ஒரு மார்க்கத்தைத் தேர்ந்தெடுங்கள்' என்று அவர்களுக்கு அறிவுறுத்தினார்.

பின்னர் நால்வரும் ஹழ்ரத் இப்ராஹீம் (அலை) அவர்களின் மார்க்கத்தைப் பற்றி அறிவதற்காக அக்காலத்தைய யூத, கிருஸ்துவ மார்க்க ஞானிகளை அணுகினர். வரக்கா இப்னு னவ்ஃபல் கிருஸ்துவ மார்க்கத்தில் இணைந்தார். அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷும் உஸ்மான் இப்னு ஹாரிஃஸும் எந்த முடிவுக்கும் வரவில்லை. ஜைதோ யூத,

கிருஸ்துவக் கொள்கைகளுக்கு இடைப்பட்டவராக இருந்தார். அவை இரண்டுமே அவருக்கு மன அமைதியை அளிக்கவில்லை. நிம்மதியிழந்த அவர் ஹழ்ரத் இப்ராஹீம் (அலை) அவர்களின் உண்மை மார்க்கத்தை அறியும் ஆவலுடன் மக்காவைத் துறந்து வெளியேறி ஊரூராகத் திரிந்தார்.

வழியெங்கும் அவரின் சந்திப்புக்குக் கிடைத்தகிருஸ்துவர்களுடையவும் யூதர்களுடையவும் நிலைமைகளும் ஏறத்தாழ இணைவைத்து வணங்கி வந்த மக்காவாசிகளின் நிலையை யொத்தே இருந்தன. பரமனைப் பிதாவாக ஆக்கி பிதாவோடு ஒரு சுதனையும் கூட்டாக்கிச் சேர்த்து, இல்லறம் நடத்திய இறங்கிய தகுதியில் இறைவனைக் காட்டிய அவர்களின் இழிதகைமயைக் கண்டு அழுது புலம்பிய ஜைத் மனஞ்சலித்தவராகத் தம் இருகரங்களையும் ஏந்தி "என் இரட்சகா! இப்ராஹீமின் மார்க்கத்தின் பேரிலேயே நான் இருக்கிறேன் என்பதற்கு நீயே சாட்சி" என பிரார்த்தித்தார்.

"என் இறைவனே! எந்த முறையில் வணங்கினால் நீ பொருத்தங்கொள்வாய் என்பதை நான் அறிந்தால் அதே முறையிலேயே உன்னை நான் வணங்குவேனே" என்று பிரலாபித்த அவர் நினைத்த போதெல்லாம் தம் உள்ளங்கையை விரித்து நெற்றியை அதில் பதிய வைத்து மண்டியிட்டு தியானம் செய்தார்.

இறுதியாக ஸிரியாவுக்கு வந்து சேர்ந்த ஜைத் அங்கே வாழ்ந்த யூத, கிருஸ்துவ ஞானிகளோடு தொடர்பு கொண்டு தம் பூர்வோத்திரத்தை விளக்கியபோது அவர்களில் ஒரு பாதிரியார் "கிருஸ்துவ மார்க்கம இறைவனின் கோபத்தைத் தேடிக் கொண்ட மார்க்கமாகும். யூதர்களோ இறைவனின் சாபத்திற்காளானவர்கள். ஹழ்ரத் இப்ராஹீம் (அலை) அவர்களோ கிருஸ்த்துவராகவோ யூதராகவோ இருக்கவில்லை. இப்ராஹீம் (அலை) அவர்களின் மார்க்கத்தை நீ எங்கும் சென்றடைய முடியாது. மக்காவிலிருந்து

வந்ததாகக் கூறும் நீ உன் சொந்த நகருக்கே திரும்பச் செல். ஹழ்ரத் இப்ராஹீம் (அலை) அவர்களின் மார்க்கத்தை உயிர்ப்பிக்கும் ஓர் இளைஞர் உன் கோத்திரத்திலிருந்தே வெளியாவார். அப்போது நீ அவரைப் பின்பற்று'' என்று அறிவுரை கூறி அனுப்பினார்.

அவ்வறிவுரையை ஏற்று ஹழ்ரத் ஜைத் அவர்கள் உடனடியாகவே மக்கா நோக்கி விரைந்தனர். அச்சமயம் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் மக்காவில் மரித்துக் கொண்டிருந்த-இப்ராஹீமிய-மார்க்கத்தை உயிர்ப்பிக்கத் துவங்கி விட்டார்களாயினும் அவர்களை வந்து சந்திக்கும் பேற்றை ஹழ்ரத் ஜைத் பெற்றுக்கொள்ளவில்லை. வழியிலேயே பாலைவன வாசிகளால் கொல்லப்பட்ட ஹழ்ரத் ஜைத் இப்னு அம்ரு இப்னு நுஃபைல் மரணத்தின் மடியில் தம் நிராசையை எண்ணி நைந்துருகியவராக, ''என் இறைவா! அப்பெரும் பேற்றினை அடையும் வாய்ப்பினை நான் பெற்றிராவிடினும் என் மகன் ஸஈதாகிலும் பெற்று விளங்க அருள்வாயாக'' என இறைஞ்சிய வண்ணமே உயிர் நீத்தார்.

ஹழ்ரத் ஜைத் அவர்களின் பிரார்த்தனை இறைவனின் திருச் சந்நிதானத்தில் புறக்கணிக்கப்படவில்லை. குரைஷிகளைச் சூழ்ந்திருந்த மவுட்டீக இருள் நுழையவே முடியாத ஒரு வீட்டினுள் பிறந்து, வாழ்நாள் முழுவதும் சத்தியத் தாகங் கொண்டிருந்த ஒரு தந்தையின் மடியில் வளர்ந்த ஹழ்ரத் ஸஈத் இப்னு ஜைத் (ரலி) அவர்கள் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் அழைப்பைப் பற்றிச் செவியுற்றபோது அதனை ஏற்க ஒரு கணமும் தாமதிக்கவில்லை. தாம் மட்டுமேயல்லாது தம் மனைவி—ஹழ்ரத் உமர் (ரலி) அவர்களின் உடன்பிறந்த—ஃபாத்திமா (ரலி) அவர்களையும் தம்மோடு அழைத்தே வந்து இஸ்லாத்தை ஏற்றனர். இவர்களுக்கு முன் இருபத்து ஆறே பேர் முஸ்லிம்களாகியிருந்தனர். ஃபாத்திமா (ரலி) இருபத்து ஏழாவதாகவும் ஹழ்ரத் ஸஈது (ரலி) இருபத்து

எட்டாவதாகவும் இஸ்லாத்தை ஏற்றனர். ஆயினும் அச் செய்தி ஹழ்ரத் உமர் (ரலி) அவர்களுக்கு—அவர்கள் அண்ணலார் (ஸல்) அவர்களைக் கொல்ல வாளேந்தி விரைந்த நாள்வரை—தெரியாமலே இருந்தது. அன்றைய தினம் தங்கள் அந்தரங்கம் வெளிப்பட்டபோது ஹழ்ரத் ஜைத் (ரலி) அவர்களும் ஃபாத்திமா (ரலி) அவர்களும் காட்டிய மன உறுதியே ஹழ்ரத் உமர் (ரலி) அவர்களின் மனநிலையையும் மாறிடச் செய்தது.

ஹிஜ்ரத் செய்து மதீனா வந்தடைந்த ஹழ்ரத் ஸஈது (ரலி) அவர்கள் ராஃபிஉ இப்னு மாலிக் (ரலி) என்ற அன்ஸாரித் தோழரின் உடன் பிறந்தாராகப் பிணைக்கப் பட்டார்கள். பத்ருப் போரின்போது அண்ணலார் (ஸல்) அவர்கள் இவர்களையும் ஹழ்ரத் தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் (ரலி) அவர்களையும் ஸிரியாவிலிருந்து மக்கா திரும்பிக் கொண்டிருந்த குரைஷிகளின் வாணிபக் கூட்டத்தைப் பற்றி துப்பறிந்துவரப் பணித்து அனுப்பியிருந்தார்கள். அவ்வாணிபக் கூட்டம் கடற்கரையோரமாகவே சென்று மக்கா சேர்ந்து விட்ட செய்தியோடு அவ்விருவரும் திரும்பியபோது பத்ருப் போர் முடிந்து விட்டிருந்தது. எனினும் அண்ணலார் (ஸல்) அவர்கள் போரில் கிடைத்த பொருள்களில் மற்றவர்களுக்கு அளித்த பங்கே போன்று அவ்விருவருக்கும் அளித்ததோடு பத்ருப் போரில் கலந்து கொண்டவர்களுக்குண்டானதே போன்ற மறுமைப் பேற்றைப் பற்றியும் நன்மாராயம் கூறினார்கள்.

பத்ருப் போருக்குப் பின் அண்ணலார் (ஸல்) அவர்களின் காலத்தில் நடைபெற்ற அனைத்துப் போர்களிலும் இவர்கள் பங்கேற்றனராயினும் அவை பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் விரிவாகக் காணக் கிடைக்கவில்லை. கலீஃபா அபூ பக்கர் (ரலி) அவர்களின் காலத்தில் ஸிரியாவின் புறம் அனுப்பப்பட்ட நான்கு படைப் பிரிவுகளில் ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்களின் தலைமையில் சென்ற பிரிவில்

இவர்களும் ஒரு துணைத் தலைவராகப் பொறுப்பேற்றுச் சென்றார்கள்.

இரண்டாம் கலீஃபா உமர் (ரலி) அவர்களின் காலத்தில் டமாஸ்கஸ் நகரம் முற்றுகையிடப்பட்டிருந்தது. முஸ்லிம்கள் டமாஸ்கஸ் நகரை முற்றுகையிட்டு நின்ற தறிந்து ரோமானிய மன்னர் ஹிராக்குலியஸ் ஒரு பெரும் படையை ரோமர்களுக்குதவியாக அனுப்பினார். இச் செய்தியறிந்து ஹழ்லரத் காலித் இப்னு வலீத் (ரலி)முஸ்லிம் களின் படையினரில் ஒரு பிரிவினரை முற்றுகையில் நிறுத்தி மறு பிரிவினரோடு உதவிப்படையினரை எதிர் கொள்ளப் புறப்பட்டனர். அச்சமயம் அவர்களில் புரவிப் படையின் தலைமையை ஏற்றுச் சென்ற ஹழ்லரத் ஸஈத் இப்னுல் ஜைத் (ரலி) அவர்கள் முன்னணியில் சென்று ரோமர்களின் உதவிப்படையைத் தடுத்து எதிர்த்தனர். ஹழ்லரத் முஆத் இப்னு ஜபல் (ரலி) அவர்கள் வலது சாரிப் படைக்கும் ஹழ் லரத் காலித் (ரலி) அவர்கள் இடது சாரிப் படைக்கும் தலைமையேற்றுத் தாக்கி ஹிராக்குலியஸின் உதவிப் படையைச் சிதறியோடச் செய்தார்கள். பின்னர் டமாஸ்கஸ் வெற்றி கொள்ளப்பட்டபோது ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள், இவர்களையே டமாஸ்கஸின் ஆளுநராக நியமித்துப் பிரிந்தனர். ஆனால் ஆட்சிப் பொறுப்பின் அயர்வு கண்ட ஹழ்லரத் ஸஈது இப்னு ஜைத் (ரலி) ''நீங்க ளெல்லாம் படைக்களத்தில் பவனி வருகையில் நான் மட்டும் ஆட்சிப் பொறுப்பில் அமர்ந்திருக்க விரும்பவில்லை'' என ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்களுக்கு எழுதவே அவர்கள் ஹழ்லரத் யஸீத் இப்னு அபூ ஸுஃப்யான் (ரலி) அவர்களை அப் பொறுப்பில் நியமித்து விட்டு இவர்களைப் போர் முனைக்கு அழைத்துக் கொண்டார்கள்.

இதற்குள் முஸ்லிம்கள் கைஸாரியா, பஅலபக் போன்ற வற்றை வென்று ஹிம்மஸ் நகரை முற்றுகையிட்டு நின்றி ருந்தார்கள். ஹிம்மஸின் தலைவன் 'மரீஸ்' முதலில் வெளி

வந்து போராடி, முஸ்லிம்களிடமிருந்து விரண்டோடி கோட்டையில் புகுந்து அமர்ந்து விட்டிருந்தான், முற்றுகையில் பல நாட்கள் கழிந்த பின்னர் முஸ்லிம்கள் வியூகம் வகுத்து தங்களின் படையினரில் ஒரு பிரிவினரைப் பதுங்கியிருக்கச் செய்து மற்றவர்கள் இடம் பெயர்ந்தனர். அவர்கள் சளைத்துப் புறப்பட்டதாகக் கற்பனை செய்துக் கொண்ட ரோமானியர்கள் கோட்டையைத் திறந்து தாக்கத் துவங்கினர். இஸ்லாமியப் படை இலேசாகத் திருப்பித் தாக்கியதோடு மேலும் பின் நகரத் துவங்கியது. அவர்கள் புறங்காட்டுவதாக எண்ணி ரோமர்கள் விரட்டலாயினர். கோட்டையைத் துறந்து போதுமான தொலை அவர்கள் வந்த பின்னர் பதுங்கியிருந்த முஸ்லிம்கள் பாய்ந்து வெளியாயினர். புயலாகச் சுழன்ற போர்க்கள அமளியினூடே ஹழ்லரத் ஸஈத் இப்னு ஜைத் (ரலி) அவர்கள் 'மரீஸை' மாண்டொழியச் செய்தார்கள். பின்னர் ஹிம்மஸும் வெற்றி கொள்ளப்பட்டது.

யர்மூக் போர்க்களத்திலும் ஹழ்லரத் ஸஈத் இப்னு ஜைத் (ரலி) அவர்கள் காலாட்படையின் ஓர் அதிகாரியாகக் கலந்து கொண்டாரிகள்.

ஸிரியாவின் பூரண வெற்றிக்குப் பின்னர் மதீனா திரும்பி விட்ட இவர்கள் 'அக்கீக்' என்ற தலத்தில் தங்கி தங்கள் எஞ்சிய காலத்தை அமைதியோடு கழிக்கலானார்கள். ஹழ்லரத் உமர் (ரலி) அவர்களின் காலத்திலேயே அரசியல் தொடர்புகளை விட்டும் ஒதுங்கி விட்ட இவர்கள் ஹழ்லரத் உஃஸ்மான் (ரலி) அவர்களின் காலத்திலும், அதனைத் தொடர்ந்தும் வளர்ந்த எல்லாக் குழப்பங்களையும் விட்டும் விடுபட்டே இருந்தார்கள். எனினும் உண்மையை மக்களுக்கு உணர்த்தக் கிடைத்த வாய்ப்புகளை இவர்கள் உதறி விடவில்லை. ஹழ்லரத் உஃஸ்மான் (ரலி) அவர்களின் கொலைக்குப் பின்னர் ஒரு சமயம் கூஃபாவின் பள்ளியில் உரையாற்ற நேர்ந்த இவர்கள், ''உஃஸ்மான் (ரலி) அவர்

களோடு நீங்கள் நடந்து கொண்ட முறைக்கு மாறாக உஹது மலை பெயர்ந்து குலுங்கியிருந்தாலும் அது எனக்கு வியப்பைத் தந்திராது'' என்று குறிப்பிட்டார்கள்.

ஹழ்லரத் முஆவியா (ரலி) அவர்களின் ஆளுநராக கூஃபாவில் ஹழ்லரத் முகீரா இப்னு ஷுஅபா (ரலி) அவர்கள் இருந்த சமயம் அவ்வவைக்கு வந்த ஹழ்லரத் ஸஈத் இப்னு ஜைத் (ரலி), ஹழ்லரத் முகீரா (ரலி) அவர்களால் மிகக் கண்ணியத்தோடு வரவேற்று அருகமர்த்தப் பட்டார்கள். அவர்களையடுத்து அங்கு வந்து சேர்ந்த ஒருவன் ஹழ்லரத் அலீ (ரலி) அவர்களைப் பற்றி அவதூறாகப் பேசலானான். அதனைக் கேட்டுக் கொதித்தெழுந்த ஹழ்லரத் ஸஈது (ரலி) அவர்கள், ''முகீரா! அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் அன்புக்குரிய ஒருவரை அவன் பழித்துரைப்பது கேட்டும் நீர் அவனைத் தடுக்காமலா அமர்ந்திருக்கிறீர்? அலீ (ரலி) அவர்கள் சுவனத்திற்கென வாக்களிக்கப் பெற்ற பதின்மரில் ஒருவர் என்பதை நீர் மறந்து விட வேண்டாம்.'' என ஆளுநரையே கண்டித்தார்கள்.

பொதுவாக ஹழ்லரத் ஸஈத் இப்னு ஜைத் (ரலி) அவர்கள் அமைதியான சுபாவங் கொண்டவர்களே ஆயினும் ஆன்மீக அச்சம் மிகக் கொண்டவர்களாயிருந்தார்கள்.

اَلَّذِيْنَ اٰمَنُوْا وَلَمْ يَلْبِسُوْٓا اِيْمَانَهُمْ بِظُلْمٍ اُولٰٓئِكَ لَهُمُ الْاَمْنُ وَهُمْ مُّهْتَدُوْنَ

''எவர்கள் மெய்யாகவே விசுவாசங் கொண்டு தங்கள் விசுவாசத்துடன் யாதொரு அக்கிரமத்தையும் கலந்து விடவில்லையோ அவர்களுக்கு நிச்சயமாக அபயமுண்டு'' என்ற (6 : 82) திருவசனச் சொற்றொடர் கேட்டு உள்ளம் நடுங்கிய இவர்கள் ''பெருமானே! நம்மில் அக்கிரமமே செய்யாதவர்கள் எவரே தாம்?'' எனக் கலங்கினார்கள். நபி பெருமான் (ஸல்) அவர்கள்,

إِنَّ الشِّرْكَ لَظُلْمٌ عَظِيمٌ

''இணை வைப்பதே மகத்தான அக்கிரமமாகும்'' (31 : 13) என ஓதிக் காட்டி அவர்களை அமைதிப்படுத்தினார்கள்.

தாம் ஒரு சுவனவாசியே என நபி பெருமான் (ஸல்) அவர்களின் திருவாயால் நல்வாக்கை அடையப் பெற்றிருந்தும் தம் தந்தை அண்ணலார் (ஸல்) அவர்களின் அருட் கரத்தைப் பற்ற பேறு பெறவில்லையே, அவர் கதி என்னவாகுமோ என்ற கவலை இவர்களை மிக வருத்தியதுண்டு. அக்கவலையின் காரணமாகவே அவர்கள் உணவையும் மறந்து உருகிய பல நாட்களுமுண்டு. பெற்ற தம் தந்தைக்காக அவலுறும் அத் தோழரிடத்தில் அண்ணலார் (ஸல்) அவர்கள் ''உம் தந்தை ஜைத் மறுமையில் தன்னந் தனியராய், தனியொரு சமுதாயமாக எழுப்பப்படுவார்'' என நன்மாராயம் கூறினார்கள்.

இத்தகைய உள்ளச்சமும் வாழ்க்கையில் ஒழுக்க சீலமும் கொண்டுலவியதால் அவர்கள் பெற்றிருந்த அருள் வன்மைக்கு ஆதாரமான ஒரு சம்பவத்தையும் வரலாறு தாங்கி நிற்கின்றது.

ஹழ்ரத் உமர் (ரலி) அவர்களின் காலத்திலிருந்தே 'அக்கீக்'கில் தங்கி வாழத்துவங்கிய இவர்கள் வேளாண்மையின் மூலமே தங்கள் வாழ்க்கையின் தேவைகளை ஈட்டிக் கொண்டனர். வேளாண்மைக்கான நிலங்களும் அவர்களுக்கு 'அக்கீக்'கில் இருந்தன. அவர்களின் நிலங்களை யடுத்து உர்வா பின்த்து உமைஸ் என்ற பெண்மணியின் நிலமும் இருந்தது.

மதீனாவின் ஆளுநராக மர்வான் இருந்த காலம் அது. தனது நிலத்தின் ஒரு பகுதியை ஹழ்ரத் ஸஈதிப்னு ஜைத் (ரலி) அவர்கள் தம் நிலத்தோடு சேர்த்துக் கொண்டதாக உர்வா பின்த்து உமைஸ் என்ற அப்பெண்மணி ஆளுநர்

மர்வானிடம் முறையிட்டாள். ஹழ்லரத் ஸஈது (ரலி) அவர்கள் பத்ருப்போரில் பங்கேற்ற நபிமணித் தோழர்களில் ஒருவர் என்பதையும், அண்ணலார் (ஸல்) அவர்களின் திருவாயால் சுவனவாசி என உறுதி கூறப்பெற்ற பதின்மரில் ஒருவர் என்பதையும் மர்வான் அப்பெண்மணிக்கு நினைவூட்டி அவர்களைப் பற்றி அவதூறாக வழக்கு கூறவேண்டாம் எனவும் எச்சரித்தார். அப் பெண்மணியோ தான் கூறுவது உண்மையேயன்றி அவதூறல்ல என உறுதியுடன் நின்றாள்.

மர்வான் தம் கடமைப்படி ஹழ்லரத் ஸஈது (ரலி) அவர்களை அழைத்து அது பற்றி வினவியபோது, "ஒரு சாண ளவு நிலத்தையும் அபகரித்தவனின் கழுத்தில் மறுமை நாளில் ஏழு பூமிகளையும் சுருட்டி கவசமாகப் பூட்டப்படும்' என அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் கூறியதைக் கேட்டுள்ள நான் எவருடைய நிலத்தையும் அபகரிக்க எங்ஙனம் துணிவேன்" என வியந்தார்கள் அப்பெரியார்.

"எனினும் நீதி மன்றத்தில் தாங்கள் இறைவன்மீது ஆணையிட்டுக் கூறி தங்கள் நிலையை வலுப்படுத்துங்கள்" என மர்வான் கூறக்கேட்ட ஹழ்லரத் ஸஈத் (ரலி) அவர்கள், "வாழ்நாளில் எத்தனையோ ஜீவாதாரமான பிரச்சனைகளையெல்லாம் எதிர்கண்ட போதும் என் இரட்சகனின் மீது ஆணையிடாத நான், கேவலம் ஒரு துண்டு நிலத்துக்காகவா ஆணையிட முடியும்? வேண்டுமானால் உர்வா குறிப்பிடுகின்ற நிலத்தை அவளே எடுத்துக்கொள்ளட்டும்" எனக் கூறி மறுத்துவிட்டார்கள். மர்வானும் வேறு வழியின்றி குறிப்பிட்ட நிலத்தைப் பற்றி முறையிட்டவளுக்கு அதனை அவளின் நிலத்தோடு சேர்த்துக் கொள்ள அனுமதியளித்து விட்டார்.

தம்மீது பொய்யாகக் கூறப்பட்ட பழியினால் வருத்தமுற்ற ஹழ்லரத் ஸஈது (ரலி) அவர்கள், "இறைவா! இப் பெண்மணி பொய்யானவளாக இருப்பின் இவளது பார்வையைப் பறித்து விடுவாயாக. பொய்யினால் அவள்

அடைந்த அந்நிலத்தையே அவளுக்குப் புதைகுழியாகவும் ஆக்குவாயாக'' என பிரார்த்தித்து விட்டார்கள். சில நாட்களில் உர்வா தன் பார்வையை இழந்தும் விட்டாள். தட்டுத் தடுமாறி நடந்து கொண்டிருந்த அவள் ஒரு நாள் அந்நிலத்திலேயே இருந்த குட்டையில் தடுமாறி விழுந்து இறந்தும் போனாள். அவள்மீது இயற்கையாகவே உருவாகிவிட்ட வெறுப்பின் காரணமாக மக்கள் எவரும் அவளது உடலை வெளியே எடுக்காமல் அக்குட்டையிலேயே மண்ணைத் தள்ளி மூடி விட்டனர் என்று முஹம்மத் இப்னு ஜைத் இப்னு அம்ரு (ரலி) அறிவிக்கின்றனர்.

ஆன்மீக வளம் பெற்ற இவ்வரும் தோழர் எண்பதாண்டு காலம் இவ்வுலகில் வாழ்ந்தனர். இறுதியாக இவர்கள் ஹிஜ்ரி 51-ம் ஆண்டில் 'அக்கீக்'கிலேயே மரணமடைந்தார்கள். ஹழ்ரத் ஸஅது இப்னு அபீ வக்காஸ் (ரலி) அவர்களால் நீராட்டப் பெற்ற இவர்களின் புனித உடலை மக்கள் மிகக் கண்ணியத்தோடு மதீனாவுக்குச் சுமந்து வந்தனர். ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்களால் தொழுவிக்கப் பெற்றபின் அப்புனித உடல் ஜன்னத்துல் பகீஇல் நல்லடக்கம் செய்யப்பட்டது.



## ஹழ்ரத்

# அபூ உபைதா இப்னு ஜர்ராஹ் (ரலி)

மதீனாவில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களைச் சந்திக்கவென அறுபது பேர்களைக் கொண்ட ஒரு தூதுக்குழு நஜ்ரானிலிருந்து வந்திருந்தது. யமன் நாட்டிலிருந்து ஏழு வழித் தங்கல்கள் தொலைவிலிருந்த ஒரு குறுநிலமே நஜ்ரான். அச்சமயம் அங்கே கிருஸ்துவ மார்க்கம் பரவி இருந்தது. படைப்புகளுக்குமுன் மண்டியிடும் பரிதாபகர மடைமை சூழ்ந்த அந்தகாரக் காடாக மக்கமா நகரை மையமாகக் கொண்ட முழு அரபு பூமியுமே கிடந்த நிலையில் பைஸாந்திய கிருஸ்துவர்களின் வரவினால் சில நூற்றாண்டுகளுக்குமுன் மறுமலர்ச்சியடைந்த கடற்கரைப் பிரதேசங்கள் யமன், நஜ்ரான் போன்றவை. ஒரு நவீன மார்க்கத்தின் புறம் திரும்பி விட்ட தங்களை நாகரீகவாதிகளாக அப்பிரதேச மக்கள் எண்ணிக் கொண்டாரிகளானாலும் நாளடைவில் அவர்களின் தெய்வீகக் கொள்கைகளும் முரண்பாடடைந்தே போயின; வேதச் செய்திகளைச் சொல்ல வந்த தூதர் ஈஸா (அலை) அவர்களை, அவர் அன்னை மர்யமின் வயிற்றிலிருந்து தந்தையின்றிப் பிறந்ததையே காரணமாக வைத்து அல்லாஹ்வின் புதல்வர் என்று கொள்ளலாயினர்; அதே சமயம் ஹழ்ரத் ஈஸா (அலை) அவர்கள், மரித்துப் போனவர்களை உயிர்ப்பித்தெழுப்பினதாலும், பிறவிக் குருடர்களையும் செவிடர்களையும் கோர நோயினால் சாவின் வசப்பட்டு விட்டவர்களையும் குணம் பெறச் செய்து விட்டதாலும், மறைவான செய்திகளையெல்லாம் வெளிப்படுத்தியதாலும், மண்ணில் உருச்சமைத்து அதில் தம் ஆவியை ஊதி அதனைப் பறக்கச் செய்ததாலும் அவரே அல்லாஹ் என்றும் கூறினர். அத்துடன் மட்டுமின்றி, வேத வெளிப்பாடுகளில் நாடே

செய்தோம், நம்முடைய கட்டளைகள், நம்முடைய படைப்புகள் என பன்மையிலேயே குறிப்பிடப்படுவதால் அல்லாஹ் ஒருவனல்லன், ஈஸா—மர்யம்—பரிசுத்த ஆவி ஆகிய மூன்றும் இணைந்த ஒரு வல்லமையே 'இலாஹ்'—வணக்கத்திற்குரியது என்றெல்லாம் மக்களை நம்பச் செய்திருந்தனர் அவர்களின் குருமார்கள்.

வணங்குதற்குரியோன் அல்லாஹ் ஒருவனே—அவன் தனித்தவன்; (துணையின்) தேவையற்றவன். எவரையும் பெற்றெடுக்கவில்லை அவன்; எவராலும் பெறப்படவுமில்லை. அவனுக்கு உவமை கூற ஒன்றும் இல்லை—என்ற புதிய தத்துவத்தின் தோற்றம்,

மவுட்டீகக் குடுவைக்குள் மனிதர்களையெல்லாம் புழுக்களாக மிதக்கவிட்டு மந்தகாசங் கொண்டிருந்த மக்கத்துக் குரைஷிகளின் சீற்றம்,

அவர்களுக்கிடையிலேயே அறிவின் பேரொளியாய், ஆன்மீகச் சுடரொளியாய், ஆண்டவனின் புகழொளியாய் அவதரித்த அண்ணலார் முஹம்மது (ஸல்) அவர்கள், தடைகளையும் தங்கடங்களையும் விலக்கிப் பெற்றிருந்த இருபதாண்டு கால ஏற்றம்—இவையனைத்தும் செவிவழிச் செய்திகளாகப் பாலைவனப் பயணிகளால் பரப்பப்பட நிரப்பந்தப்பட்டுவிட்ட கால கட்டத்தில்—அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் மற்ற பல குருநிலத் தலைவர்களுக்கும் பெரு நில மன்னர்களுக்கும் அனுப்பியதைப் போன்றதோர் அழைப்போலையை நஜ்ரானின் அதிபருக்கும் அனுப்பியிருந்தார்கள்.

''இப்ராஹீம், இஸ்ஹாக், யஅகூபின் இறைவனின் பெயரால்,

அல்லாஹ்வின் ரஸூல் முஹம்மது (ஸல்) நஜ்ரானியத் தலைவர்களுக்கும், மக்களுக்கும் எழுதுவது:

நீங்கள் இஸ்லாத்திலாகி விடுங்கள். நான் உங்களின் முன் இபராஹீம், இஸ்ஹாக், யஅகூபின் இறைவனின்

புகழையே சமர்ப்பிக்கிறேன். படைப்புகளை வணங்கு வதைக் கைவிட்டு படைத்தவனையே வணங்கவும், படைக் கப்பட்டவற்றின் தோழமையைப் புறமொதுக்கி படைத்த வனின் நெருக்கத்தைப் பெற்றுக் கொள்ளவும் நான் உங் களை அழைக்கிறேன். இதனை நீங்கள் ஏற்கவில்லை யானால் ஜிஸ்யா செலுத்தி எங்களின் பாதுகாப்பில் ஆகி விடுங்கள். அதையும் நீங்கள் ஏற்க மறுப்பீர்களானால் நான் உங்கள் மீது போர்ப்பிரகடனம் செய்கின்றேன். சமாதானமே நாடப்படுவது'' என எழுதப்பட்டிருந்த ஓலை யைப் பெற்று திகைப்படைந்தார் தலைமை அதிபர். தம் ஆலோசகர்களையெல்லாம் கூட்டி அதுபற்றி விவாதிக் கலானாரவர்.

இப்ராஹீம்—இஸ்ஹாக்—யஃகூபிய பாரம்பரியத்திலல் லாது நபிமார்கள் எவரும் அதுவரை அனுப்பப்பட்டதே யில்லை. ஆயினும் ஹழ்லரத் இப்ராஹீம் (அலை) அவர் களின் தலை மகனார் ஹழ்லரத் இஸ்மாயீல் (அலை) அவர்களின் வழிவாறுகளினின்றும் ஒரு தூதர் தோன்று வார்—அவரே தூதர்களில் இறுதியானவராகவும் மற்ற தூதர்களுக்கெல்லாம் நாதராகவும் இருப்பார் என்ற செய்தி களையெல்லாம் தங்களின் வேத நூல்களில் படித்தறிந்தவர் களும் இருந்தனர் அங்கே. மக்கமா நகர மக்கள் ஹழ்லரத் இஸ்மாயீல் (அலை) அவர்களின் வழிவாறுகளாகவே இருந்த தாலும், அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களும் அவர்களைச் சார்ந்தவர்களேயானதாலும் தங்களுக்கு 'அழைப்பனுப்பியுள்ள இந்த குரைஷிக் கனவானே' அந்த நபியாக ஏன் இருக்கக் கூடாது என அறிவுடையோர் வினாவெழுப்பினர். அரசியல் விவகாரமல்ல இது விவாதிக் கப்படுவதற்கு—நுபுவ்வத்தின் அறைகூவல்—என்ற உள்ளச் சங் கொண்ட அவர்கள் நேரில் சென்று நிலைமை தெளிந்து வரவே மதீனா வந்திருந்தனர்.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களோடு அவர்களின் சந்திப்பும் நடைபெற்றது. சந்தேகங்

கள் வினவப்பட்டன; விளக்கப்பட்டன. இறுதியாக ஈஸா (அலை) அவர்களைப் பற்றி அண்ணலார் (ஸல்) அவர்களின் கருத்தென்னவென நஜ்ரானியர்கள் வினவினர். 'அதனைப் பற்றி என் இறைவன் தெரிவிப்பதை நான் நாளை உங்களுக்குக் கூறுவேன்' என்றார்கள் அண்ணலார் (ஸல்). மறுநாள் பெருமானார் (ஸல்) அவர்கள், தங்களுக்கு அப்போதே இறங்கிய,

إِنَّ مَثَلَ عِيسَىٰ عِندَ اللَّهِ كَمَثَلِ آدَمَ خَلَقَهُ مِن تُرَابٍ ثُمَّ قَالَ لَهُ كُن فَيَكُونُ

''நிச்சயமாக அல்லாஹ்விடம் ஈஸாவுக்கு உதாரணம், ஆதமுடைய உதாரணத்தைப் போன்றதே. அவன் அவரை மண்ணால் உற்பத்தி செய்து ''(மனிதனாக) ஆகுக'' என்று கூறினான். உடனே அது (அவ்வாறு) ஆகிவிட்டது'' என்ற (3 : 59) வேத வசனத்தை ஓதிக்காட்டினார்கள்.

நஜ்ரானியர்கள் அதனை ஏற்க மறுத்து அண்ணலார் (ஸல்) அவர்களோடு தர்க்கித்தார்கள்.

الْحَقُّ مِن رَّبِّكَ فَلَا تَكُن مِّنَ الْمُمْتَرِينَ ۝ فَمَنْ حَاجَّكَ فِيهِ مِن بَعْدِ مَا جَاءَكَ مِنَ الْعِلْمِ فَقُلْ تَعَالَوْا نَدْعُ أَبْنَاءَنَا وَأَبْنَاءَكُمْ وَنِسَاءَنَا وَنِسَاءَكُمْ وَأَنفُسَنَا وَأَنفُسَكُمْ ثُمَّ نَبْتَهِلْ فَنَجْعَل لَّعْنَتَ اللَّهِ عَلَى الْكَاذِبِينَ

''(நபியே!) ஈஸாவைப் பற்றி உம் இறைவனிடமிருந்து கிடைத்த உண்மை(யான செய்தி) இதுதான். ஆகவே (இதைப் பற்றிச்) சந்தேகப்படுவோரில் ஒருவராக நீரும் ஆகிவிடவேண்டாம்.''

''(நபியே!) உமக்கு உண்மையான செய்தி கிடைத்த பின்னரும் இதைப்பற்றி உம்மிடம் எவரும் தர்க்கித்தால் (அவர்களுக்கு) நீர் கூறும் : 'வாருங்கள்; நாம் எங்களுடைய மக்களையும் உங்களுடைய மக்களையும் எங்களுடைய

மனைவிகளையும் உங்களுடைய மனைவிகளையும் எங்களை யும் உங்களையும் அழைத்து (ஒன்று சேர்த்து) வைத்துக் கொண்டு (ஒவ்வொருவரும் தத்தம் கூற்றே சரியெனச்) சத்தியம் செய்து (இதற்கு மாறாகக் கூறும்) 'பொய்யர் கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாவதாக' எனப் பிரார்த்திப்போம்'' என்று—என தொடர்ந்து இறை வசனங்கள் அண்ணலார் (ஸல்) அவர்கள் பால் இறங்கின. அவற்றையும் ஓதிக் காட்டி நஜ்ரானியர்களைப் பிரிந்த பெரு மானார் (ஸல்) அவர்கள், மறுநாள் காலை தங்களின் மகளார் ஃபாத்திமா, அலீ, ஹஸன், ஹுஸைன் (ரலி) ஆகி யோரோடு மேற்சொன்னபடி 'முபாஹலா' நடத்தச் சித்த மாகி வந்தார்களாயினும் நஜ்ரானியர்கள் அதற்குத் துணிய வில்லை. 'அவர் நபியாகவே இருந்தால் அவரின் சாபம் பலித்தே போகும்' என ஒருவர் அஞ்சினார். 'பின்னே நிற் கும் அவரின் மக்களின் தோற்றங்களைப் பார்த்தால், மலைகளைப் பார்த்து அவர்கள் நகரும்படி கட்டளையிட் டாலும் அவை நகர்ந்தே விடலாம் என நான் நினைக் கிறேன்' என ஒருவர் பயந்தார். மண்ணில் தங்கள் சுவடே யில்லாமல் அழிந்து போகக் கூடிய துர்ப்பேற்றைத் தாங்க ளாகவே தேடிக் கொள்ள வேண்டாம் என்ற முடிவுக்கு வந்த அவர்கள் பெருமானார் (ஸல்) அவர்களோடு உடன் பாடு கொண்டு வாழ ஒன்று பட்டனர். மனம் மாறி பலர் மாநபி (ஸல்) அவர்களின் கரம் பற்றி இஸ்லாத்தையே ஏற்றனர்.

விடை பெற விரும்பிய அவர்கள் தங்கள் நாட்டில் தங்களுக்கு வழிமுறைகளைக் கற்பிக்கவும் தங்களிடையே ஏற்படக் கூடிய கருத்து மாறுபாடுகளில் நீதி வழங்கவும் கூடிய நல்லதொரு நம்பிக்கையாளரைத் தங்களோடு அனுப் பித் தரும்படி பெருமானார் (ஸல்) அவர்களிடம் கோரினார் கள். ''மதியத் தொழுகையின் போது நீங்கள் என்னைச் சந்தியுங்கள். என் தோழர்கள் தொழுகைக்காக பள்ளியில் அனைவரும் கூடுவார்கள். அவர்களில் ஒரு நம்பிக்கையான

ரைத் தெரிந்தெடுத்து உங்களோடு அனுப்புவேன்'' என் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறி அவர்களைத் தாமதிக்கச் செய்தார்கள். அவ்வாறே ளுஹருடைய நேரத்தில் தம்மை நாடி வந்த நஜ்ரானியர்களுக்கு அண்ணலார் (ஸல்) அவர்கள் தொழுகைக்கென கூடியிருந்த தம் தோழர்களிடையிலிருந்து தெரிந்தறிவித்த நம்பிக்கையாளரே ஹழ்லரத் அபூ உபைதா—ஆமிர் இப்னு ஜர்ராஹ் (ரலி).

''ளுஹருடைய தொழுகைக்கு நான் அனைவருக்கும் முன்னதாகவே வந்துவிட்டேன். பெருமானார் (ஸல்) அவர்கள் குறிப்பிட்ட சிறப்புக்குரியவனாக அன்று நானே இருக்க வேண்டுமென்று நாடினேன். பெருமானார் (ஸல்) அவர்கள் தொழுகையை நிறைவுபடுத்தி, தங்கள் பார்வையை இரு புறமும் செலுத்தலானார்கள். அவர்களின் பார்வையில் பட வேண்டுமென்பதற்காக என் இருப்பிடத்தில் உந்தி உந்தி எழுந்தமர்ந்தேன். ஆனால் அண்ணலார் (ஸல்) அவர்கள் ''அபா உபைதா! நீர் அக்கிருஸ்துவர்களோடு சென்று அவர்களிடையே நீதி வழங்கி வாரும்'' என கட்டளையிடக் கேட்டு ''உண்மையையும் நேர்மையும் கொண்ட திருவாயால் நம்பிக்கையாளர் எனச்சிறப்பிக்கப்பெற்ற அபா உபைதா! உமக்குச் சோபனம்'' என உளமாற வாழ்த்தினேன்''—என ஹழ்லரத் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

لِكُلِّ أُمَّةٍ أَمِينٌ وَأَمِينُ هَٰذِهِ الْأُمَّةِ أَبُو عُبَيْدَةَ بْنُ الْجَرَّاحِ

''இவ்வொரு சமுதாயத்தாருக்காவும் ஒரு நம்பிக்கையாளர் உண்டு, அபூ உபைதா இந்த சமுதாயத்தின் நம்பிக்கையாளர் ஆவார்'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்களின் அத்தோழரைப் புகழ்ந்துள்ளார்கள்.

''குணநலச் செல்வர்களாகவும் ஒழுக்கச் சீலர்களாகவும், பொய் என்பதை அறியாதவர்களாகவும் குரைஷிகளில் நான் மூவரைக் கண்டேன். ஹழ்லரத் அபூபக்கர்

ஸித்தீக் (ரலி), ஹழ்ரத் உஸ்மான் இப்னு அப்ஃபான் (ரலி), ஹழ்ரத் அபூ உபைதா இப்னு ஜர்ராஹ் (ரலி) ஆகியோரே அம்மூவர்''—என ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் புகழ்கிறார்கள்.

''அமீனுல் உம்மத்—சமுதாயத்தில் நம்பிக்கையாளர்'' என அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களாலேயே அடையாளங்காட்டப் பெற்ற ஹழ்ரத் அபூ உபைதா—ஆமிர் இப்னு ஜர்ராஹ் (ரலி) அவர்கள், அண்ணலார் (ஸல்) அவர்களுக்காகத் துணைக்கரம் உயர்த்த முந்தி நின்ற முஹாஜிர்களில் ஒருவராவர். ஸையிதினா அபூ பக்கர் (ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்ற செய்தியை அவர்களிடமிருந்து அறிந்து அக்கணமே—அவர்களின் கரம் பிடித்தே சத்தியப் பிரமாணம் செய்த ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்கள், பின்னர் ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப், உஸ்மான் இப்னு மள்ஊன், அர்க்கம் இப்னு அபீ அர்க்கம் (ரலி) ஆகிய மூவரோடு சென்று அண்ணலவர்களின் கரமே பற்றி தங்கள் பிரமாணத்தை வலுப்படுத்தினார்கள்.

'ஆமிர்' என்பதே அவர்களின் இயற்பெயராகும். தந்தையின் பெயர் அப்துல்லாஹ். ஆயினும் பாட்டனாரின் பெயராலேயே 'இப்னு ஜர்ராஹ்' என அவர்கள் அழைக்கப் பட்டார்கள். தாயின் பெயர் உமைமா பின்த்து கனம். மக்காவிலேயே முஸ்லிமாகி விட்ட அவ்வம்மையார் அண்ணல் நபி (ஸல்) அவர்கள்பால் பெரும் நேசமுடைய தோழியராக விளங்கினார். கி. பி. 584-ம் ஆண்டு மக்காவில் பிறந்த ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களைவிட பதிமூன்றாண்டுகாலம் இளையவர்கள். குரைஷியாகிய இவர்களின் கொடிவழி அண்ணலார் (ஸல்) அவர்களின் பதினோராவது தலைமுறைப் பாட்டனார் ஃபிஹ்ர் இப்னு மாலிக்கில் சென்று இணைகிறது. ஆரம்ப கால முஸ்லிம்களுக்கு இழைக்கப் பெற்ற எல்லாத் துன்பங்களையும் துயரங்களையும் பகிர்ந்து கொள்ளவே

நேரிட்ட இவர்களும், அதன் காரணமாகவே அபிஸீனியாவுக்கு இரண்டாம் முறையாக வலசை கிளம்பிய குழுவினரோடு ஹிஜ்ரத்துச் செய்தார்கள். பின்னர் மதீனா வந்தடைந்த இவர்கள் ஹழ்லரத் அபூதல்ஹா அன்ஸாரி (ரலி) அவர்களின் உடன்பிறப்பாகப் பிணைக்கப்பட்டார்கள்.

قُلْ إِنْ كَانَ آبَاؤُكُمْ وَأَبْنَاؤُكُمْ وَإِخْوَانُكُمْ وَأَزْوَاجُكُمْ وَعَشِيرَتُكُمْ وَأَمْوَالٌ
اقْتَرَفْتُمُوهَا وَتِجَارَةٌ تَخْشَوْنَ كَسَادَهَا وَمَسَاكِنُ تَرْضَوْنَهَا أَحَبَّ إِلَيْكُمْ مِنَ
اللَّهِ وَرَسُولِهِ وَجِهَادٍ فِي سَبِيلِهِ فَتَرَبَّصُوا حَتَّى يَأْتِيَ اللَّهُ بِأَمْرِهِ

"(நபியே! விசுவாசிகளை நோக்கி) நீர் கூறும்: உங்களுடைய தந்தைகளும், உங்களுடைய மக்களும், உங்களுடைய சகோதரர்களும், உங்களுடைய துணைவர்களும், உங்களுடைய குடும்பமும், நீங்கள் சம்பாதித்து வைத்திருக்கும் (உங்களுடைய) பொருள்களும், நஷ்டமாகி விடுமோ என நீங்கள் பயந்து (மிக எச்சரிக்கையுடன்) செய்து வரும் வர்த்தகமும், உங்களுக்கு மிக்க விருப்பமுள்ள உங்கள் வீடுகளும் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் விடவும், அவனுடைய பாதையில் யுத்தம் புரிவதை விடவும் உங்களுக்கு மிக விருப்பமானவையாக இருந்தால் (நீங்கள் உண்மை விசுவாசிகளல்லர். நீங்கள் அடையவேண்டிய தண்டனையைப் பற்றிய) அல்லாஹ்வுடைய கட்டளையை நீங்கள் எதிர்பார்த்தேயிருங்கள்"—என எச்சரிக்கிறது திருக்குர்ஆன் (9 : 24)

ஈமானிய வலிமைக்கு இறைவனின் வேதம் சாற்றும் இந்த இலக்கணத்துக்கேயுரிய இலட்சியவாதிகள் தாங்களே என்பதை மக்காவிலிருந்து வெளியேறிய முஹாஜிர்கள் எண்பித்தார்கள். அல்லாஹ்வின் தூதர் அண்ணலார் (ஸல்) அவர்கள் பத்ரின் பாதையை அடையாளங் காட்டிய அத்தருணத்திலேயே அவர்கள் தங்கள் ஊரைத் துறந்தார்கள்;

உறவுகளைத் துறந்தார்கள்; உடைமைகளைத் துறந்தார்கள். உள்ளச் சிறையிலும் அவர்கள் எந்தப் பந்தத்தையும் பாசத்தையும் அணுவளவும் அமிழ்த்தி வைத்திருக்கவே இல்லை என்பதை அடையாளங் காட்டிய அற்புதத் திருத்தலமே பத்ருடைய போர்க்களம். அதனிடையே அஞ்சா நெஞ்சத்தோடும் வியத்தகு வீரத்தோடும் உலா வர விரைந்தனர் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி). அவர்களின் தோற்றமே கண்டவர்களை கதிகலங்கச் செய்துக் கொண்டிருந்தது. அவர்களின் வாள்வீச்சுக்கு தப்பாமல் பலரும் பலியாகிக் கொண்டிருந்தனர்.

எதிரிகளை அவர்கள் சிதறச் செய்துக் கொண்டிருந்த அதே போர்க்களத்தின் பிரிதொரு புறம் சில ஸஹாபாக்களும் திணறிக் கொண்டிருந்தார்கள் குரைஷி வீரன் ஒருவனிடம். இரண்டில் ஒன்றாய் தங்களின் தலை விதியை நிர்ணயிக்க இரு சாராருமே முழுமூச்சுடன் போர் நடத்திய ஒரு தருணத்தில் எழுந்த ஓங்காரக்குரல் கேட்டுத் திரும்பினார்கள் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி). அஞ்சாத அவ்வடலேறையும் திரும்பச் செய்த அவ்வகங்காரக் குரலுக்குடையோன் யார்?

அவர்களைப் பெற்றெடுத்த அப்துல்லாஹ் இப்னு ஜர்ராஹ்.........! அந்த ஒருவனின் வாளிடைப் பட்டே அருமை ஸஹாபாக்களில் சிலர் திணறிக் கொண்டிருந்தனர். அல்லாஹ்வின் மார்க்கத்தை நிலை நாட்டப் போரிடும்—தூதரின்—தோழர்கள் ஒரு புறம். அவர்களை மாய்க்கத் தன் முழுப் பலங்கொண்டு ஆர்ப்பரித்து நிற்கும் - தம்மைப் பெற்றெடுத்த - தந்தையே மறு புறம்! அருளும் இருளும் எதிர் கொண்ட இதயப்போர்க்களத்தினுள் கணப்பொழுதுக்கும் தயக்கத்துக்கோ தாமதத்துக்கோ இடமளியாது கடுகிப் பாய்ந்த ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள், தம் வாளின் ஒரே வீச்சில் தந்தையை வெட்டித் தரையில் சாய்த்தார்கள்.

ஒப்புவமைக்கு அப்பாற்பட்ட இத்தகைய மகத்தான தியாகத் துணிவை பத்ருப் போர்க்களம் முழுமையாகவே கண்டது. ஹம்ஸரத் உமர், அலீ, ஹம்ஸா, உபைதா இப்னு ஹாரிஃஸ் (ரலி) போன்ற ஸஹாபாக்கள் தங்கள் உற்ற உற வினர்களையே தத்தம் கரங்களாலேயே கொல்லப் பின்ன டையாவிடினும் பெற்ற தந்தையின் பாசத்தையே இறைவ னின் பேரன்புக்குப் பின் தள்ளிய ஹம்ஸரத் அபூ உபைதா (ரலி) அவர்களின் மனத்துணிவு அவை அனைத்துக்கும் மணிமகுடமாகி நின்றது. அதற்குப் புகழாரம் சூட்டுமாப் போன்று இறைவனின் திருவாக்கும் இறங்கியது.

لَا تَجِدُ قَوْمًا يُؤْمِنُونَ بِاللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ يُوَادُّونَ مَنْ حَادَّ اللَّهَ وَرَسُولَهُ وَلَوْ كَانُوا آبَاءَهُمْ أَوْ أَبْنَاءَهُمْ أَوْ إِخْوَانَهُمْ أَوْ عَشِيرَتَهُمْ أُولَٰئِكَ كَتَبَ فِي قُلُوبِهِمُ الْإِيمَانَ وَأَيَّدَهُمْ بِرُوحٍ مِنْهُ

("நபியே!) எந்த ஜனங்கள் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் (மெய்யாகவே) விசுவாசங் கொண்டிருக்கிறார் களோ அவர்கள், எவர்கள் அல்லாஹ்வுக்கும் அவன் தூத ருக்கும் மாறு செய்பவர்களாக இருக்கின்றார்களோ (அவர் களை நேசிக்க மாட்டார்கள்.) அவர்கள் தங்களுடைய மூதாதையர்களாக இருந்தபோதிலும், அல்லது தங்களு டைய சந்ததிகளாக இருந்தபோதிலும், அல்லது தங்களு டைய சகோதரர்களாக இருந்தபோதிலும், அல்லது தங்க ளுடைய பந்துக்களாக இருந்த போதிலும், அவர்களுடன் இவர்கள் உறவாடுவதை நீர் காணமாட்டீர். இத்தகை யோர்தாம்—இவர்களுடைய இருதயங்களில் அல்லாஹ் விசுவாசத்தைப் பதியவைத்துத் தன்னுடைய உணர்வைக் கொண்டும் இவர்களைப் பலப்படுத்தி வைத்திருக்கிறான்."
(58 : 22)

தனிமையில் நின்றிருந்த அண்ணலார் (ஸல்) அவர் களை நோக்கி, கிழக்குப் புறமிருந்து ஒருவர் பறவையைப்

போன்று விரையக் கண்டேன். அண்ணலார் (ஸல்) அவர்களைப் பாதுகாக்க நானும் விரைந்தேன். என்னையும் முந்திக் கொண்டு அண்ணலார் (ஸல்) அவர்களை அண்மி நின்றவர் அபூ உபைதாவே என்பதை அறிந்தேன்—என ஹழ்லரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்கள் உஹதுப் போரின் ஒரு சம்பவத்தை விவரித்தார்கள். பெருமானார் (ஸல்) அவர்களைத் தாக்க வந்த எதிரிகளின் ஒரு கூட்டத்திடமிருந்து அவர்களைப் பாதுகாக்க அன்ஸார்கள் பதின்மர் ஒருவர் பின் ஒருவராய்த் தங்களின் உயிர்களை அர்ப்பணித்து இறுதியாக ஹழ்லரத் தல்ஹா (ரலி) அவர்கள் எதிரிகளைத் தாக்கி விரட்டி, அவர்களின் தாக்குதல் பட்டு தாங்களும் மயங்கிச் சாய்ந்து விட்ட சமயமது! அண்ணலவர்களின் தனிமைத் தோற்றம் கண்டு மேலும் சில தோழர்களும் கூடி விட்டனர் அங்கு. அதே சமயம் எதிரிகளின் மற்றொரு கூட்டமும் அண்ணலவர்களை நோக்கிப் பாய்ந்தது. அவர்களின் தாக்குதலிலிருந்து அல்லாஹ்வின் தூதரைக்காக்க அரண்போல் வளைந்து நின்ற பதின்மருள் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்களும் ஒருவர். அச்சமயம் பெருமானார் (ஸல்) அவர்கள் அணிந்திருந்த கவசத்திலிருந்தே இரண்டு வளையங்கள் உடைந்து அவர்களின் முகத்தில் பதிந்து விட்டன. அவற்றைத் தம் பற்களால் கடித்து வெளியில் இழுத்திட ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் மேற்கொண்ட முயற்சியில் அவர்களின் முன் பற்கள் இரண்டும் பெயர்ந்து விட்டன; இரத்தமும் பிரவாக மெடுத்தது. பெருமானார் (ஸல்) அவர்களின் முகத்தில் பதிந்திருந்த வளையங்களும் பெயர்ந்து அவை பதிந்து நின்ற காயத்திலிருந்து பெருமானார் (ஸல்) அவர்களின் இரத்தமும் பீறிட்டு ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்களின் முகத்தில் தெறித்தது. அதனைக்கண்டு முகம் மலர்ந்த அண்ணலார் (ஸல்) அவர்கள் ''அபா உபைதா! என்னுடைய இரத்தம் எவருடைய இரத்தத்தோடு கலந்ததோ அவரின் உடலை நரகம் தீண்டுவது தடுக்கப்பட்டுள்ளது'' என நன்மாராயம் கூறினார்கள்.

அகழ்ப் போரிலும், அதன் பின்னர் பனீ குறைளா யூதர்களுக்கு எதிராக மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கை யிலும் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் பங் கேற்றுள்ளார்கள். ஹுதைபியாவில் அண்ணலார் (ஸல்) அவர்கள் குரைஷிகளோடு செய்துக் கொண்ட உடன் பாட்டில் அவர்களும் ஒரு சாட்சியாகக் கையொப்ப மிட்டார்கள்.

கைபர் போரிலும் மக்க மாநகரப் படையெடுப்பிலும் பின்னர் நடைபெற்ற ஹுனைன், தாயிஃப் போர்களிலும் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் பங்கேற்றார்கள். பெருமானார் (ஸல்) அவர்கள் இவ்வுலகைப் பிரியு முன் விடைபெற்ற இறுதி ஹஜ்ஜிலும் அவர்கள் உடன் கலந்தே யிருந்தார்கள். மதீனாவை விட்டும் வெளியே அண்ணலார் (ஸல்) அவர்களால் அனுப்பி வைக்கப்பட்ட படைப் பிரிவு களிலும் அவர்கள் கலந்து சென்ற சம்பவங்களும் வரலாற் றில் காணப்படுகின்றன. அவ்வாறான ஒரு படையெடுப் பில் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்களையும் அவர் களின் தோழர்களையும் அல்லாஹ்வின் அருள் சூழ்ந்த ஒரு சம்பவத்தை ஹழ்லரத் ஜாபிர் (ரலி) அவர்கள் விவரிக் கிறார்கள்:

ஒரு முறை அண்ணலார் (ஸல்) அவர்கள் முன்னூறு பேர்களைக் கொண்ட ஒருபடையை ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்களின் தலைமையில் 'ஜுஹைனா' என்ற அர பிக் கோத்திரத்தினரின் பால் அனுப்பி வைத்தார்கள். அப் படையினரின் பார்வையில் சிக்காது 'ஜுஹைனா'க்கள் தப்பிவிட்டார்களாயினும் அவர்களைத் தேடியே அப்படை யினர் தொடர்ந்த பயணம் கடற்கரையோரம் சென்று முடிந்ததால் வரலாற்றாசிரியர்கள் அப்படையெடுப்பை, 'ஸிரியத்துல் ஸைஃபுல் பஹ்ர்—கடற்கரைப் படையெடுப்பு' எனக் குறிப்பிட்டுள்ளார்கள்.

அப்படையெடுப்பின் போது எடுத்துச் செல்லப்பட்ட உணவு முற்றாகத் தீர்ந்து போனது. பேரீத்தம்

பழங்களும் ஆளுக் கொன்றாக நாள் தோறும் பங்கிட் டளிக்கப்பட்டன என ஹழ்லரத் ஜாபிர் (ரலி) அவர்கள் குறிப்பிட்டபோது "ஒரேயொரு பேரீத்தங் கனியைக் கொண்டு பசி தீர உங்களால் எப்படி முடிந்தது?" என அவர்களின் திருமகனார் குறுக்கிட்டார். "அவ்விதம் நீ வியப் படையாதே மகனே! அதுவும் பின்னர் குறைந்து ஒவ்வொரு பேரீத்தங்கனியையும் இருவர் இருவருக்காய்ப் பிய்த்துப் பங்கிட்டளிக்கப்பட்ட போதே ஒரு முழுக் கனியின் அரு மையை நாங்கள் உணரலானோம்' எனத் தொடர்ந்த ஹழ்லரத் ஜாபிர் (ரலி) அவர்கள் எஞ்சிய சம்பவத்தையும் விவரித்தார்கள்.

கைஸ் இப்னு ஸஅத் என்ற அன்ஸாரித் தோழர் மும் மூன்று ஒட்டகைகளாக ஒவ்வொரு நாளும் அறுத்துச் சமைத்து படைவீரர்களை உண்ணச் செய்தனர். அவ்வாறே தொடருமானால் பயணம் திரும்ப வாகனமில்லாமலும் ஆகி விடலாம் என்ற அச்சம் மிகுந்து ஹழ்லரத் உமர் (ரலி) அவர்கள் முறையிட்டதன் பேரில் படைத்தலைவர் அபூ உபைதா (ரலி) அவர்கள் அவ்வாறு செய்யவேண்டாமென அவரைத் தடுத்துவிட்டார்கள். இறுதியாக காய்ந்த சருகு களையும் நீரில் ஊறவைத்து மென்று உண்ண வேண்டிய கொடுஞ் சோதனையையும் முஸ்லிம் வீரர்கள் ஏற்றனர். அதன் பலனாக அவர்களின் உதடுகளெல்லாம் கிழிந்து வீங்கி ஒட்டகைகளின் உதடுகளைப் போன்று ஆகிவிட்டன. போதாக்குறைக்கு உப்பங்காற்றினால் அவர்களின் உடல்க ளெல்லாம் பூத்து சொறி பிடித்தவை போலாகி விட்டன.

ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் படையின ரைக் காத்தருளுமாறு இறைவனை வழுத்திய வண்ண மிருந்தார்கள். காய்ந்த சருகுகளுக்கும் கதியற்று இனி பட்டினியால் சாகத்தான் வேண்டுமோ என்ற கவலையி னூடே மூன்று நாட்கள் கழிந்து மாலை நெருங்கிய சமயம் கடலின் அலைகள் ஒரு பெரும் ராட்சத மீனைக் கரை யொதுக்குவதை அனைவரின் கண்களும் கண்டன. அம்

மீனைப் பிடித்து சமைத்து வீரர்களனைவரும் அன்று பசி தீர்ந்ததோடேயயன்றி பிந்திய பதினெட்டு நாட்கள் வரையும் உணவாக உட்கொண்டனர்; அதன் கொழுப்பையே உருக்கி தங்கள் உடல்களெல்லாம் தடவி நலிவு நீங்கப் பெற்றனர். மதீனா திரும்பிய அவர்களின் செய்தி கேட்ட அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்கள் தோழர்களின் உயிர் காக்க அல்லாஹ்வின் அருளாக வந்த அவ்வுணவில் எஞ்சி இருந்ததில் சிறிதை தாங்களும் பெற்று உண்டு மகிழ்ந்தார்கள்.

மீனின் பருமனை மதீனாவின் மக்கள் அறிவதற்காக ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் அதன் விலா முட்கள் இரண்டினையும் ஒன்றோடொன்று பொருந்தும்படியாக பூமியில் நட்டுவைத்தபோது அதனிடையே படையினரில் மிக உயரமான வீரர் தம் ஒட்டகையிலமர்ந்து நுழைந்து சென்றார். 'அதன் கண்குழியில் நான்கு பேர் இறங்கி அமர்ந்து கொண்டபோது வெளியில் நின்றிருந்த எவரும் எங்கள் பார்வையில் படவில்லை'—என ஹழ்ரத் ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றனர். அல்லாஹ்வின் திருச்சன்னிதானத்தில் ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் பெற்றிருந்த அருட்பேற்றுக்கு உதாரணமாக அறிஞர்கள் இச்சம்பவத்தை 'கராமாத்தெ ஸ ஹா பா — நபிமணித் தோழர்கள் விளைவித்த புதினங்கள்' என்ற தலைப்பில் கோர்த்தெழுதுகிறார்கள். ஆயினும் இமாம் புஹாரீ (ரஹ்) அவர்களும் அங்கீகரித்துள்ள ஆதாரமிக்க வரலாற்றுச் சம்பவமே இது!

கைபர் போரையடுத்து, ஸிரிய எல்லையோரம் வாழ்ந்த 'குஸாஆ' கோத்திர அரபிகளின் புறம் முன்னூறு பேர்களைக் கொண்ட ஒரு படையை அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹழ்ரத் அம்ர் இப்னுல் ஆஸ் (ரலி) அவர்களின் தலைமையில் அனுப்பி வைத்தார்கள். அதற்கு முந்திய காலங்களில் முஸ்லிம்களுக்கு எதிராகவே பல போர்களை நடத்திய ஹழ்ரத் அம்ர் இப்னுல் ஆஸ் (ரலி) அவர்கள்

இஸ்லாத்தை ஏற்ற பின் அவர்களிடமே தலைமை ஒப்படைக்கப்பட்ட முதற்படை அது. சென்றவிடத்தில் 'குஸாஆ'க்களின் படைப்பெருக்கத்தைக் கணித்து அதனைச் சமாளிக்க மேலும் வீரர்களின் தேவையை ஹழ்ரத் அம்ர் (ரலி) அவர்கள் தம் தூதரின் மூலம் தெரிவிக்க, அண்ணலார் (ஸல்) அவர்கள், மேலும் இருநூறு பேர்களை ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்களின் தலைமையில் அனுப்பிவைத்தார்கள். அத் துணைப்படையில் ஹழ்ரத் அபூ பக்கர், உமர் (ரலி) முதலானோரும் கலந்து சென்றனர். அவர்களையெல்லாம் வழியனுப்புகையில் அண்ணல் பெருமானார் (ஸல்) அவர்கள் ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்களிடம் ஒற்றுமை பற்றியும், இரு படைகளும் சேர்கையில் கருத்துப் பிணக்குகளுக்கு இடம் தந்திடலாகாது என்பது பற்றியும் எச்சரித்து அனுப்பி வைத்தார்கள். ஆரம்ப காலத்திலேயே இஸ்லாத்தை ஏற்று அதுவரையிலான அத்தனைப் போர்க்களங்களிலும் அனுபவமும் பெற்றிருந்த ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் படைகள் ஒன்று சேரும் போது முழுப்படையின் தலைமையும் தம்முடையதாகவே இருக்குமென எண்ணிச் சென்றார்கள். ஆனால், அவர்கள் துணைப்படையாகவே வந்ததால் முழுப் படையின் தலைமை தம்முடையதாகவே இருக்கவேண்டுமென ஹழ்ரத் அம்ர் இப்னுல் ஆஸ் (ரலி) அவர்கள் தர்க்கித்தபோதே ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் அண்ணலார் (ஸல்) அவர்கள் தூர நோக்கோடு தமக்குச் செய்த அறிவுரையை நினைவு கூர்ந்தார்கள். ''உமக்கு வழிப்பட்டவனாகவேயன்றி முரண்படுபவனாக ஒரு போதும் என்னை நீர் காணமாட்டீர்'' என அவர்கள் ஹழ்ரத் அம்ரிப்னுல் ஆஸ் (ரலி) அவர்களின் தலைமையை ஏற்றுக் கொண்டதோடன்றி தங்களைப் போன்றே மற்ற பெருந்தோழர்களுக்கும் அண்ணலார் (ஸல்) அவர்களின் முன்னறிவிப்பை நினைவூட்டி அனைவரையும் ஒன்றுபட்டியங்கச் செய்தனர். வெற்றி பெற்றுத் திரும்பிய படைகள்

தங்களைச் சந்தித்த சமயம் விவரித்த நிகழ்ச்சிகளைச் செவிமடுத்த பெருமானார் (ஸல்) அவர்கள் ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்களின் பெருந்தன்மையை அறிந்து மகிழ்ந்ததோடு ''அல்லாஹ் அவர்மீது தன் கிரு பாவாரியைச் சொரிந்தருள்வானாக'' என வாழ்த் தினார்கள்.

பெருமானார் திரு நபி (ஸல்) அவர்களைப் பிரிந்த உலகில் பேதங்கள் தோன்றிடாமல் தோழர்களையெல்லாம் இணைத்து அணைத்து அரசியலில் ஒரு புதுமையைச் சமைத்த பெருமையில் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர் களுக்கும் முக்கிய பங்குண்டு.

'ஸக்கீஃபா அல் பனீ ஸாஇதா'வில் கிலாஃபத் பற்றிய சர்ச்சைகளின் போது ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர் களும் அங்கிருந்தார்கள். கிலாஃபத்தில் தங்களின் உரிமையை அன்ஸார்கள் தொடர்ந்து வலியுறுத்திச் செய்துக் கொண் டிருந்த தர்க்கம் ஒரு விபரீத நிலையை எத்துவதை உணர்ந்து ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் உதிர்த்த சொற்கள் சமயத்துக்கேற்ற சஞ்சீவியாகப் பயன் பட்டு சமுதாயத்தைப் பிளவு பட்டு விடாமல் காத்தன! ''அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களுக்கு உதவி புரிந்து ஊக்கம் தருவதில் முதலிடம் பெற்ற அன்ஸார்களே! இன்று குதர்ப்பம் பேசிக் குழப்பம் விளைவிப்பதில் முந்தின வர்களாகி விடாதீர்கள்'' என்ற ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்களின் எச்சரிக்கை சகல சர்ச்சைகளையும் தடுத்து சரியான ஒரு முடிவெடுக்க நபிமணித் தோழர் களைத் திசை திருப்பியது. அவ்வாய்மையாளரைப் பற்றி மாநபி (ஸல்) அவர்கள் வழங்கிய முன்னறிவிப்பை நினைவு கூர்ந்த ஹழ்லரத் உமர் (ரலி) அவர்கள், ''அண்ணலார் (ஸல்) அவர்கள், சமுதாயத்தின் நம்பிக்கையாளர் எனப் புகழ்ந்த உம்மையே நாங்கள் எங்கள் கலீஃபாவாக ஏற் போம்'' எனக் கூறி பிரமாணம் செய்ய முந்தினார்களா யினும் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள்,

"ஸவ்ர் குகையில் அண்ணலார் (ஸல்) அவர்களோடு தனித்திருந்த ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் இருக்கையில் கிலாஃபத்தை ஏற்க என் கரங்கள் தகுதியுடையவையல்ல" எனக் கூறி ஸித்தீக்குல் அக்பர் (ரலி) அவர்களையே கிலாஃபத்தை ஏற்கச் செய்தார்கள்.

கிலாஃபத்தின் துவக்க காலத்தில் தோற்றமெடுத்த கொள்கைக் குழப்பங்கள் மதமாற்றத் துரோகங்கள் அனைத்தையும் ஒடுக்க கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்களுக்குத் துணைக்கரமாகத் திகழ்ந்தவர்களிலும் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் ஒருவராயிருந்தனர். அக்காலை மதீனாவின் பொருட்காப்பாளர் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்களே.

உள் நாட்டின் நிலைமைகள் சீரடைந்து, எல்லைகளை வலிவு பெறச் செய்ய கலீஃபா அவர்கள் நடவடிக்கைகளை மேற்கொண்டபோது ஸிரியாவின் புறம் படை நடத்திச் சென்ற நாற்பெரும் தள நாயகர்களுள் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்களும் ஒருவராய்ச் சென்றனர்.

அபூ உபைதா, யஸீத் இப்னு அபூ ஸுஃப்யான், ஷர்ஜீல் இப்னு ஹஸனா, அம்ரிப்னுல் ஆஸ் (ரலி) ஆகியோர்களை ஏழேழாயிரம் படைகளோடு முறையே ஹிம்மஸ், டமாஸ்கஸ், உர்துன், பாலஸ்தீன் ஆகிய நான்கு நகரங்களின் புறமும் அனுப்பி வைத்த கலீஃபா, நான்கு படைகளும் ஒன்று சேர ஒரு சூழ்நிலை உருவாகுமானால் முழுப் படைக்கும் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்களே தலைவராவார் எனப் பிரகடனம் செய்தார்கள். நாட்டின் எல்லையைத் தாண்டிச் சென்ற அந்நான்கு படைகளும் ரோமப் பேரரசர் வகுத்த போர்த் திட்டத்தை முறியடிக்க கலீஃபா அவர்கள் கணித்தபடி ஒன்று கூடவே நேரிட்டது. ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்களின் தலைமையின் கீழாகிவிட்ட அம்முழுப் படையும் ஈராக்கின் புறமிருந்தும் ஹழ்லரத் காலித் இப்னு வலீத் (ரலி) அவர்களின் தலை

மையில் வந்த உதவிப் படையுடனிணைந்து அஜ்னாதைனில் ரோமர்களை வெற்றி கொண்டன.

அடுத்து முஸ்லிம்கள் டமாஸ்கஸை முற்றுகையிட்டனர். அஜ்னாதைனில் பெற்ற தோல்வியால் ரோமர்கள் டமாஸ் கஸின் கோட்டைக் கதவுகளை அடைத்துக் கொண்டு அமர்ந்து விட்டனர். ஏறத்தாழ ஆறுமாதங்கள் நீடித்த அம்முற்றுகையால் முஸ்லிம்களின் படை சிறு சோர்வை எத்திய சமயம் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர் களைக் கானும் அரும்பேற்றினை ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் பெற்றனர். கனவில் ஓர் அருளாகத் திருத் தோற்றம் வழங்கிய அண்ணலார் (ஸல்) அவர்கள், ''அபா உபைதா! அயர்வு கொள்ள வேண்டாம். இன்று கோட் டையை நீங்களே வெல்வீர்கள்'' என நன்மாராயம் வழங்கி விரைந்தார்கள். பிரிந்த தங்கள் தலைவரை நெடுநாட் களுக்குப் பின் அன்றே கண்ட அத்தோழர், அண்ணலார் (ஸல்) அவர்கள் அமர்ந்திருந்த புரவியின் கடிவாளத்தைப் பற்றியவர்களாக, ''ஏந்தலே! ஏன் இத்தனை விரைவாகத் திரும்புகிறீர்கள்?'' என ஏக்கத்துடன் வினவ, நாயக மாமணி (ஸல்) அவர்கள், ''அபூ பக்கரின் அடக்கத்திற்காக விரைகின்றேன்'' எனக் கூறி மறைந்தார்கள்.

அப்படியானால், கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்களுக்கு என்ன நேர்ந்தது! திடுக்கிட்டு கண்விழித்த ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்களின் உள்ளத்தை உலைவு சூழ்ந்த தானாலும் அதனை வெளிப்படுத்த ஏற்ற தலமல்ல போர்க் களம். மறுநாள் காலை படையினரைக் கூட்டி தங்கள் பெரு மான் அறிவித்த நன்மாராயத்தை மட்டுமே அவர்களுக்கு எடுத்துரைத்த அபூ உபைதா (ரலி) அவர்கள் தாங்களும் அரிய தொரு சொற்பொழிவாற்றினார்கள்; ''அல்லாஹ் வின் கூட்டத்தார்களே! அல்லாஹ்வுக்கு உதவியாளர்களா யிருங்கள். அல்லாஹ்வும் உங்களுக்கு உதவிபுரிவான். பொறுமையோடு நீங்கள் இறைவனின் உதவியைத் தேடுங் கள். ஏனெனில் இறைவன் பொறுமையாளர்களோடு இருப்

பதாக வாக்களித்திருக்கிறான். பொறுமையே உங்களுக்கு நிராகரிப்போர்களிடமிருந்து வெற்றியைத் தேடித்தரும். அமைதியோடு உங்கள் ஆயுதங்களைச் சித்தப்படுத்துங்கள். இறைவனின் அருள் உங்களை நெருங்கி வருகிறது''—என்ற அவர்களின் குரல் படையினரிடையே புத்துணர்வை அலை பாயச் செய்தது. அதற்கேற்றாற்போல் ஹழ்ரத் காலித் (ரலி) அவர்களிடம் ஒற்றர்கள் சேதி வந்து கூறினர்—டமாஸ் கஸின் ஆளுநருக்கு இன்று ஆண்மகவு பிறந்த மகிழ்ச்சியில் நகரமே மதுவருந்தி மயங்கிக் கிடக்கிறது என்று.

கோட்டை வாசலின் புறம் ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் படையுடன் காத்திருந்த அதே சமயம் மறு புறம் காற்றடைத்த துருத்திகளை அகழியில் மிதக்கச் செய்து அதன் மீதாகத் தங்கள் ஒரு குழுவினருடன் மதி லேறி கோட்டையினுள் இறங்கி விட்ட ஹழ்ரத் காலித் (ரலி) அவர்கள் அயர்ந்து கிடந்த ரோமானிய வீரர்கள் மீது அடர்ந்து அவர்களைப் பதறியோடச் செய்தார்கள். அல்லாஹ்வின் வாள் விளைவித்த அமர்க்களத்தைச் சந்திக் கச் சக்தியிழந்த ரோமானியர்கள் விரைந்தோடி தாங்களா கவே கோட்டையின் கதவுகளைத் திறந்துவிட்டு அங்கு காத் திருந்த ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்களோடு சமா தானம் செய்துக் கொண்டார்கள். உடன் பாட்டை ஏற்று கோட்டையினுள் முழுமையாக நுழைந்த பின்னரே உள்ளே ஹழ்ரத் காலித் (ரலி) அவர்களின் கரமோங்கி எதிரிகள் சரணடைந்துள்ள செய்தி ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்களுக்குத் தெரிய வந்தது. அச்சமயம் எந்த உடன் பாட்டையும் ஏற்கத் தேவையேயில்லை என அவர்களிடம் விளக்கப்பட்டதானாலும் மண்ணின் ஆதிக்கத்துக்காக மனிதப் பண்பாட்டை விலைபேச ஒப்பாத அத்தளநாயகர் தங்கள் வாக்கை மாற்ற மறுத்து விட்டார்கள். உடன் பாட்டை நிலைப்படுத்தி ரோமானியக் கைதிகளனைவரையும் விடுதலை செய்வித்தார்கள்.

கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்களின் இறப்புச் செய்தி யும் புதிய கலீஃபாவாக ஹழ்ரத் உமர் (ரலி) அவர்கள்

பொறுப்பேற்ற செய்தியும் ஸிரியப் போர்க் களத்திலேயே ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்களுக்கு எட்டின. டமாஸ்கஸின் வெற்றியை யடுத்து முஸ்லிம்கள் தொடர்ந்து ஃபிஹ்ல், ஹிம்மஸ், உர்துன் போன்ற போர்முனைகளிலும் ரோமர்களை முறியடித்தனர். அதன் காரணமாகவே வெறி கொண்டுவிட்ட ரோமானிய மன்னர் ஹிராக்குலியஸ் முஸ்லிம்களை முறியடிக்கப் பெரும் திட்டம் வகுத்து யர்மூக்கில் தம் முழுப் படையையும் திரட்டிக் கொணர்ந்தார். ஸிரிய பூமியில் பல புறமும் பிரிந்திருந்த முஸ்லிம்கள் ரோமர்களின் பெரும் படையை முறியடிக்க ஒன்று திரள வேண்டியிருந்தது. வெற்றி பெற்ற பகுதிகளையும் அவர்கள் அதற்கென விட்டுப் பிரிய வேண்டியதாயிற்று. அச்சமயம் டமாஸ்கஸிலிருந்து வெளியேற நேர்ந்த ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் அங்கு வாழ்ந்த கிருஸ்துவர்களிடம் அவர்களின் பாதுகாப்புச் செலவுக்காக 'ஜிஸ்யா'வாக வசூலித்திருந்த லட்சக்கணக்கான திர்ஹங்களை, இப்போது தாங்கள் அப்பொறுப்பைக் கை விட்டுச் செல்வதால் திருப்பித் தரச் செய்தார்கள். கொடுமையையும் அநீதியையுமே ரோமர்களிடமிருந்து அன்றைய நாள்வரை கண்டிருந்த ஸிரியக் கிருஸ்துவர்கள் இஸ்லாமியத் தளபதியின் நீதியையும் நாணயத்தையும் கண்டு 'மீண்டும் அவர்களே தங்கள் பூமியை ஆளவரும் நாளென்றோ'வெனக் கதறி இறைஞ்சினார்கள்.

ஹழ்லரத் காலித் ஸைஃபுல்லாஹ், யஸீத் இப்னு அபூ ஸுஃப்யான், முஆவியா இப்னு அபூ ஸுஃப்யான், அம்ர் இப்னுல் ஆஸ், முஆத் இப்னு ஜபல், ஹாரிஃஸ் இப்னு ஹிஷாம், ஸுஹைல் இப்னு அம்ரு, உத்பா இப்னு ஸுஹைல் (ரலி) போன்ற தளபதிகளும் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்களின் தலைமையில் 'யர்மூக்'கில் கூடி ரோமர்களை முறியடித்தனர். பின்னர் அவரவர்கள் பிரிந்து சென்று தாங்கள் விட்டுவந்த நிலப்பரப்புகளை மீண்டும் மீட்டனர். ரோமர்கள் முற்றாகவே ஸிரியாவை

இழக்க நேரிட்டாலும் ஹழ்லரத் அம்ரிப்னுல் ஆஸ் (ரலி) அவர்களால் முற்றுகையிடப்பட்டிருந்த ஜெருஸலம் நகரம் மட்டும் பல மாதங்கள் வீழாமலே இருந்தது. ஹழ்லரத் அம்ர் இப்னுல் ஆஸ் (ரலி) அவர்களின் அழைப்பின் பேரில் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் துணைப்படையுடன் ஜெரூஸலம் வந்தடைந்தனர். அவர்களின் வருகைக்குப் பின் மனந்தளர்ந்த ஜெருஸலக் கிருஸ்துவர்கள் கோட்டையை முஸ்லிம்களிடம் ஒப்படைக்கச் சித்தமாகி விட்டனர்—முஸ்லிம்களின் கலீஃபா உமர் (ரலி) அவர்களே நேரடியாக வருகை புரிந்து அதனை ஏற்கவேண்டுமென்ற நிபந்தனையுடன்.

கலீஃபா அவர்களே வந்து நின்று பைத்துல் முகத் திஸை ஏற்றார்கள். முஸ்லிம்களுக்கும் கிருஸ்துவர்களுக்குமிடையே உடன்பாடு தோன்றி சுமுக வாழ்வு மலர்ந்தது. ஏறத்தாழ ஸிரியா முழுமையாகவே முஸ்லிம்களின் ஆளுகைக்குட்பட்டுவிட்டதால் இஸ்லாமியக் குடியரசுக்குப் போதுமான எல்லைப் பாதுகாப்பு கிடைத்து விட்டதாக உணர்ந்த கலீஃபா அவர்கள் ஸிரியாவின் நிர்வாகப் பொறுப்பை ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்களிடமே ஒப்படைத்துத் திரும்பினார்கள்.

ஸிரிய மக்களின் வாழ்வில் வளம் கொழித்தது. புதிய நிர்வாகத்தில் நாடு செழித்தது. அதே சமயம் ஹிஜாஸிலோ பஞ்சம் தோன்றி வதைத்தது. கலீஃபா அவர்களின் வேண்டுதலின் பேரில் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் ஸிரியாவிலிருந்து நான்காயிரம் பொதிகள் நிறைய தானியங்களை ஹிஜாஸுக்கு அனுப்பி உதவினார்கள். நெடுங்காலமாகவே ஸிரியாவில் குடியேறி வாழ்ந்து வந்த அரபுப்பழங்குடிகளும் ஸிரியக் கிருஸ்துவர்களும் ரோமானியர்களும் புதிதாகத் தங்களை ஆளவந்துள்ள கோமகனின் குணநலப் பண்புகளால் ஈர்க்கப்பட்டுப் பெரும் பெருங் கூட்டங்களாக இஸ்லாத்தில் இணையலானார்கள்.

அஞ்சா நெஞ்சமும் அடல்சேர் ஆண்மையும் குணநலப் பண்பாடுகளும் ஒருங்கிணைந்த இம் மாநபித் தோழர் கலீஃபா உமர் (ரலி) அவர்களின் வான் புகழ் ஆளுகைக்குப் பேருதவியாக இருந்தார்கள். எளிமையும் சேவை மனப்பான்மையும் தியாக உணர்வும் கொண்ட அவ்வாளுநரிடத்தில் கலீஃபா உமர் (ரலி) அவர்கள் பெருமதிப்பு கொண்டிருந்தார்கள்.

நிர்வாகத்தில் தமக்குதவ ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்களைப் போன்ற தோழர்கள் தம் அவையில் நிரம்பி இல்லையே என கலீஃபா உமர் (ரலி) அவர்கள் ஒருசமயம் தம் கவலையை வெளிப்படுத்தியதுண்டு.

ஆரம்பமுதல் இறுதிவரை ஹ ழ் ல ர த் அபூ உபைதா (ரலி) அவர்களின் வாழ்க்கை கடினமானதாகவே இருந்தது. மார்க்கப்போர்கள் அவர்களின் விழிப்புகளையும் மறுமையின் கவலைகள் அவர்களின் உறக்கத்தையும் முற்றாகப் பறித்து, அவர்களின் உடலைப் பெரிதும் நலிவடையச் செய்து விட்டிருந்தன. முகமும் தளர்ந்து நரம்புகள் புடைத்துத் தெரிந்தன. தாடியும் தலைமுடியும் நரைத்திருந்தன. உஹதுப் போர்க்களத்தில் அண்ணலார் (ஸல்) அவர்களின் முகத்தில் பதிந்த விட்ட இரும்புத் துண்டுகளைக் கடித்தெடுக்க மேற்கொண்ட முயற்சியில் தங்கள் முன் பற்கள் இரண்டையும் அவர்கள் இழந்து விட்டிருந்தார்கள். ஆயினும் அந்த இழப்பின்போதே அவர்கள் பெற்ற ஒரு பேறு பெறுதற்கரியதானதாயிருந்தது!

ஏறத்தாழ ஐம்பத்தாறாண்டு காலம் வாழ்ந்த அம்மா நபித்தோழர் அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்கள் காட்டிச் சென்ற வாழ்வுமுறையை என்றும் மாற்றிக் கொண்டதில்லை. டமாஸ்கஸின் வெற்றியையடுத்து ஃபிஹ்லில் பாசறை அமைத்திருந்த அவர்களைக் காணவந்த ரோமாவியத் தூதர் முஸ்லிம் படை வீரர்களிடையே எவ்வித ஏற்றத்தாழ்வையும் காணாமல் உங்களின் தலைவர் யார்? என அவர்களிடம் வினவியே தெரிந்துகொள்ள வேண்டி

பிருந்தது. முஸ்லிம்கள் அவருக்குச் சுட்டிக்காட்டிய அத்தலைவர் — அபூ உபைதா (ரலி) — மணற்தரையில் மற்றவர்களிடையே அமர்ந்து தங்கள் செருப்பைச் செப்பனிட்ட வண்ணமிருந்தார்கள்.

ஸிரியாவின் வெற்றிக்குப்பின் அந்நாட்டின் சிற்றரசர்களும், வெற்றி கொண்ட புதிய ஆளுநருக்கு விருந்தளிக்க விரும்பினர். அவ்விருந்தினை ஏற்க ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் தமக்களிக்கப் படுவதைப் போன்ற உணவே தம் படைவீரர்களனைவருக்கும் அளிக்கப்படவேண்டுமென நிபந்தனை விதித்தார்கள். அவ்வாறே ஏற்கப்பட்டு மிகச் சாதாரண உணவாலேயே அவ்விருந்து நடத்தி முடிக்கப் பட்டது.

'பைத்துல் முகத்திஸ்' வெற்றிச் சிறப்பை ஏற்க வந்த கலீஃபா உமர் (ரலி) அவர்கள் தங்களை எதிர் கொண்டழைக்க வந்த ஹழ்ரத் காலித் இப்னு வலீத், யஸீத் இப்னு அபூ ஸுஃப்யான் (ரலி) போன்ற தளகர்த்தர்கள் பூண்டிருந்த ஆடையலங்காரத்தையும் ஆடம்பரத்தையும் கண்டு சினங்கொண்டார்களாயினும், மாற்றார்களுக்கு தங்கள் தோற்றக் காம்பீரத்தைக் காட்டவே அத்தலைவர்கள் அவ்வாறு அணிந்து நின்றார்களேயின்றி உள்ளுக்குள் போர்க் கவசத்தையும் ஆயுதங்களையும் சுமக்கத் தவறிட வில்லை என்பதறிந்து அமைதி கொண்டார்கள். அச்சமயம் ''என் சதோதரர் எங்கே காணப்படவில்லை; என் உடன் பிறந்தவரெங்கே?'' என தேடத் துவங்கினார்கள் கலீஃபா. அவர்கள் எவரைத் தேடுகிறார்கள் என வினவப்பட்ட போது 'அபூ உபைதாவையே' என்றார்கள் கலீஃபா. சற்று நேரத்தில் ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்களும் அங்கு வந்து சேர்ந்தனர். கலீஃபா உமர் (ரலி) அவர்களின் கூற்று மிகச் சரியாக இருந்தது. அவர்களின் உடன் பிறந்தவர் என்று ஒப்பிடத்தக்கவாறே மிக எளிமையான உடையுடனேயே நின்றிருந்தனர் ஹழ்ரத் அபூ உபைதா (ரலி)—மதீனாவிலிருந்து அவர்கள் புறப்பட்டபோது அணிந்திருந்ததே போன்ற உடை.

தலை நகர் நீங்கி, தங்களைச் சந்திக்க வந்திருந்த கலீஃபா அவர்களுக்குத் தோழர்கள் ஒவ்வொருவரும் மாறி மாறி விருந்தளித்தனர். அவர்களின் கூடாரங்களுக்கெல்லாம் சென்றனர் மக்கள் தலைவர். ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்களின் கூடாரத்துக்குச் சென்றபோது கலீஃபா அவர்களின் கண்களுக்கு வாளும் கேடயமும் ஒட்டகையும் மட்டுமே காட்சி தந்தன. ''அபா உபைதா! மிகத்தேவையான பொருள்களும் கூட உம்மிடம் காணப்படவில்லையே?'' என கலீஃபா அவர்கள் வினவியபோது, ''அமீரல் முஉமினீன்! மண்ணறை வரையிலும் என் பயணத்தை முடிக்க இவையே எனக்குப் போதுமானவை'' என்றார்கள் அம் மாநபித் தோழர். உணவுண்ணும் நேரம் வந்தது. அவ்விருவருக்குமிடையே எளிமையான உணவே பரிமாறப்பட்டது. அதனை ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் மனப் பொருத்தங் கொண்டு உண்ட பாங்கைக் கண்டு கலீஃபா அவர்களின் கண்களும் கசிந்தன. நாடு திரும்பிய கலீஃபா அவர்கள் ஒரு முறை நானூறு திர்ஹங்களையும் பிரிதொரு முறை நான்காயிரம் திர்ஹங்களையும் அபூ உபைதா (ரலி) அவர்களின் சொந்த செலவினங்களுக்காக அனுப்பிவைத்தார்கள். அவற்றில் ஒரேயொரு காசையும் மிச்சப்படுத்தாது அபூ உபைதா (ரலி) அவர்கள் படைவீரர்களிடையே ஒவ்வொரு முறையும் பங்கிட்டளித்தார்கள் என்ற செய்தி கிடைத்தபோது, இப்படியும் மனிதர்களைத் தம் தோழமையில் தந்திருப்பதற்காக இறைவனைப் புகழ்ந்த கலீஃபா உமர் (ரலி) அவர்கள் தமது அவ்வாளுநரை 'பொறுமையின் மிகப் பெரும் எடுத்துக்காட்'டெனப் போற்றினார்கள்.

பெரும் பயணங்களிலும் போர்களிலுமே தங்களின் வாழ் நாளைக் கழித்து விட்டிருந்த ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்களின் இல்லற வாழ்க்கையின் சிறப்பம்சங்களை வரலாற்றின் ஏடுகளில் மிகுதமாகக் காண முடியவில்லை. அரபுகளின் வழமைக்கு மாறாக அவர்கள் ஒரே மனைவியோடேயே வாழ்ந்தார்கள். ஹிந்த் பின்த்து

ஜாபிர் (ரலி) என்ற அம்மங்கை நல்லார் மூலம் யஸீத், உமைர் என்ற இரு ஆண்மக்களும் பிறந்திருந்தனர். ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் நெடு நாட்கள் வாழவுமில்லை. அண்ணலாரின் திருவாயால் புவன வாழ்விலேயே சுவன நன்மாராயம் பெற்ற தோழர்கள் பதின்மரில் ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களையடுத்து முதன்முதலாக மறைந்தவர்கள் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்களே.

ஸிரியப் போர்க்களங்களில் அவர்கள் படை நடத்திக் கொண்டிருந்தபோதே 'அம்வா'ஸில் தோற்றமெடுத்து பல்லாயிரம் வீரர்களின் உயிர்களைப் பறித்துச் சென்ற காலரா கொள்ளை நோய் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்களையும் விட்டுச் செல்லவில்லை. அச்சமயம் அம்வாஸை நோக்கியே பயணம் செய்து கொண்டிருந்த கலீஃபா உமர் (ரலி) அவர்கள் 'காலரா கண்டவிடத்துக்கு நீங்கள் செல்ல வேண்டாம்' என்ற நபி மொழியைச் செவியேற்று மதீனா திருப்பி விட்டார்கள். அதே சமயம் 'காலரா கண்டவிடத்தில் நீங்கள் இருந்தால் அதனை விட்டும் வெளியேறாதீர்கள்' என்ற நபிமொழிக்கு வழிப்பட்டு ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் அம்வாஸை விட்டும் வெளிவர மறுத்து விட்டார்கள். எப்படியும் அவர்களை மதீனா வரவழைக்க எண்ணிய கலீஃபா உமர் (ரலி) அவர்கள் 'உம்மைக் கொண்டு ஓர் அவசர காரியம் எனக்கு ஆக வேண்டியுள்ளது. எனவே உடனடியாகப் புறப்பட்டு மதீனா வரவும்' என கட்டளை எழுதினார்கள். கலீஃபா அவர்களின் நோக்கத்தைப் புரிந்து கொண்டார்கள் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி).

''தங்களுக்கு என்னைக் கொண்டு என்ன அவசரத் தேவை ஏற்பட்டிருக்கிறதென்பதை நான் புரிந்து கொண்டேன். அமீரல் முஉமினீன்! என் உயிர் காக்க எண்ணும் தங்கள் மீது அல்லாஹ் பேரருள் பாலிப்பானாக. எனினும் பல்லாயிரம் வீரர்கள் மரணத்தோடு போராடிக் கொண்டிருக்கும் நிலையில் அவர்களை விட்டுப் பிரிய என் மனம் துணியவில்லை. எனவே தங்கள் ஆணையைத் தளர்த்தி இறைவன் அவர்களைப் பற்றிய தன் முடிவை வெளிப்படுத்தும் வரை என்னையும் அவர்களோடேயே தங்கியிருக்க அனுமதிப்பீர்களாக'' என பதில் எழுதிவிட்ட அத்தலைவர் காலரா நோய்வயப்பட்டிருந்த தம் வீரர்களைக் காக்க இரவும் பகலுமாக உழைந்தனர். அவ்வுழைச்சலினூடேயே

காலரா நோய் அவர்களையும் பற்றிக் கொண்டது. கிழக்கே புராத் நதிக்கரையிலிருந்து மேற்கே மைனர் ஆசியா வரை வெற்றிக்கு நடை பழக்கிய அப்பெருந் தளபதி எவ்வித மனச் சோர்வும் கொள்ளவில்லை. தொழுகையை நடத்த ஹழ்ல ரத் முஆது இப்னு ஜபல்(ரலி)அவர்களை நியமித்த அவர்கள் தம்மைக் கொள்ள வந்துள்ள காலரா கொள்ளை நோயை அல்லாஹ்வின் அருளெனவே கொண்டார்கள். மரணத்தைத் தம் அண்ணலாரைக் காண அழைத்துச் செல்லும் திருவாச லாகவே வர்ணித்தார்கள். மரணத்தின் மடியிலும் மன உறுதி தளராத அப் பெருந்தோழர் ''உங்களில் எவரும் ஆயிர மாண்டு கால வாழ்வை அளிக்கப் பெற்றபோதிலும் அவரும் ஒரு நாள் இன்று நான் அடைந்துள்ள இறுதி நிலையை அடைந்தேயாக வேண்டும். அந்நிலையில் இறைவனுக்கு முற் றிலும் அடிபணிபடிந்தவராக மறுமைக்கான பலனை மிகுதமா கத் தேடிக் கொள்வதே அறிவுடைமையாகும்'' எனப் பகர்ந் தவர்களாக விடை பெற்றார்கள்.

அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களின் தோழமை யில் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் பெற்றிருந்த மனப்பக்குவம் மிக மேலானது. அவர்கள் நோய்வயப்பட்ட ஒரு சமயத்தில் அவர்களைக் காணவந்து, அவர்களின் நிலை கண்டிரங்கியவர்களிடம் அவர்கள், ''எந்த ஒரு நம்பிக்கையாளன் தனக்காகவும், தன்னைச் சார்ந்தவர் களுக்காகவும்செலவழித்தது போகஎஞ்சியதைஅல்லாஹ்வின் பாதையில் அர்ப்பணித்தானோ அவன் அதனைப்போல் எழு நூறு மடங்கான பலனைப் பெறுவான். தன்னைச் சார்ந்தவர் களுக்காக அவன் செலவழித்து விட்டதைப் போன்ற பதின் மடங்கான பலனையும் பெறுவான்; பிராயச்சித்தம் செய்யப் பின்னடையாதவனும் அதைப்போல் பதின்மடங்கான நன் மைகள் அடையப் பெறுவான்'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன். அத்துடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ''நோன்பு ஒரு கேடயம். எவனொருவன் பால் அல்லாஹ் சோதனையையும் சிரமத்தையும் வெளிப் படுத்துகிறானோ அவனின் பாவங்கள் உதிர்ந்துவிடு கின்றன' எனவும் அருளினார்கள்'' என்று கூறினார்கள்.






கண்ணியமிக்கவர்களான அபூ பக்கர், உமர், உஃஸ்மான், அலீ (ரலி) ஆகியோரைக் கொண்டு இறைவன் பொருத்தங் கொள்வானாக.

சிறப்புக்குரியவர்களான ஸஅது, ஸஈது, ஸுபைர், தல்ஹா, அபூ உபைதா, அவ்ஃபின் திருமகனாம் அப்துர் ரஹ்மான் ஆகியோரைக் கொண்டும் இறைவன் பொருத்தங் கொள்வானாக.

—இமாம் ஷர்ஃபுத்தீன் முஹம்மது அல்-பூஸிரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் இயற்றிய—
புர்தா ஷரீஃபிலிருந்து

# முன்னுரை

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

அண்ணலார் முஹம்மது(ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் திருவாயால் புவன வாழ்விலேயே சுவனத்தைப் பற்றிய நன்மாராயம் கூறப் பெற்ற பதின் மரில் முந்தினவர்களான ஹழ்லரத் அபூபக்கர், உமர், உஃஸ்மான், அலீ (ரழ்லியல்லாஹு அன்ஹும்) ஆகிய நான்கு கலீஃபாக்களையடுத்த அறு பெருந்தோழர்களின் நடமாட்டத்தலமே இந்நூல். 'ஸஹாபா'க்களான நபி மணித் தோழர்களின் படித்தரங்களை வரிசைப்படுத்திய 'ஸாலிஹீன்'களான நல்லோர்கள் முந்திய நாற்பெருங் கலீஃபாக்களையடுத்த ஐந்தாவதிடத்தில் இவ்வறுபெருந் தோழர்களையே நிறுத்துகிறார்கள்.

ரழ்லியல்லாஹு அன்ஹும் வரழ்லூ அன்ஹு— அல்லாஹ் அவர்களைப் பொருந்திக் கொண்டான், அவர் களும் அவனைப் பொருந்திக் கொண்டனர்—என்ற அங்கீ கார முத்திரை அண்ணலார் (ஸல்) அவர்களின் தோழ மையை ஏற்ற அனைவருக்குமே பொதுவானதாகும். ஆண்டவனின் தூதரின் அருள் முகத்தை ஈமானிய இதயத் தோடு அணுப் பொழுதேனும் காணப் பேறு பெற்றவர் அனைவருமே சுவனஞ்சேர்வர் என்பதே நம்முடைய விசு வாசம். எனினும் அவர்களில் ஒரு கூட்டத்திரை, 'ஸாபிக் கூனல் அவ்வலூன மினல் முஹாஜிரீன வல் அன்ஸார்— முஹாஜிர்களிலும் அன்ஸார்களிலும் இஸ்லாத்தை ஏற்க முந்திக் கொண்ட முன்னவர்கள்' என்ற பட்டயஞ் சூட்டி அடையாளங்காட்டுகிறதே அல்லாஹ்வின் திருமறை.

அத்தவச்சீலர்களிலும் ஹழ்லரத் அபூ பக்கர், உமர், உஃஸ்மான், அலீ, ஸஅது, ஸுபைர், தல்ஹா, அப்துர் ரஹ்மான், ஸஈது, அபூ உபைதா (ரலி) ஆகிய பதின்

மரையும் அண்ணலார் (ஸல்) அவர்கள் தனித் தனியாக பெயர் குறிப்பிட்டு 'சுவனவாசிகளே' என சோபனங் கூறிய செய்தியை 'திர்மிதீ' 'இப்னு மாஜா' ஆகிய கோர்வைகள் சுமந்து நிற்கின்றன.

''அவர்கள் தங்கள் முகங்களில் புழுதி படிந்தவர்களாகப் போர்க்களங்களிடையே வெளிப்படுத்திய ஆற்றல் உங்களில் எவரும் நபி நூஹ் (அலை) அவர்களைப் போல் (தொள்ளாயிரத்து ஐம்பதாண்டு காலம்)வாழ்ந்து தேடிக் கொள்ளக் கூடிய நன்மைகளைவிட உயர்வானது'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் அப்பதின்மரையும் குறித்து மற்ற தோழர்களிடையே புகழ்ந்துரைத்தார்கள்.

'அஷரத்துல் முபஷ்ஷரஹ்' எனப்பட்ட-புவன வாழ்விலேயே சுவன நன்மாராயம் அருளப் பெற்ற அப்பதின்மருள் முதன்மையான, ஸித்தீக்குல் அக்பர் ஸையிதினா அபூ பக்கர் (ரலி) அவர்கள், பதினெட்டே வயதுடைய தம் இளமைப் பருவத்திலிருந்து அண்ணலார் (ஸல்) அவர்களோடு அழகிய தோழமை பூண்டிருந்தார்கள். அல்லாஹ்வின் தூதராக அண்ணலார்(ஸல்) அவர்கள் தம்மை அறிவித்த காலை அட்டியின்றி அவர்களின் கரம் பற்ற முந்திய அம்முன்னவர் அவ்வண்ணலரைத் தம் உடலுக்கும், உயிருக்கும், உடைமைகளுக்கும், எல்லா உறவுகளுக்கும் மேலாக மதித்துச் செய்த அர்ப்பணங்களை பிந்திய காலத்தில் நினைத்து நெகிழ்ந்த பெருமானார் (ஸல்) அவர்கள், ''ஒவ்வொருவரும் எனக்குச் செய்த உபகாரங்களனைத்துக்கும் நான் பிரதி செய்துவிட்டேன். அபூபக்கர் எனக்குச் செய்துள்ள உபகாரங்களுக்கான பிரதியை என் இறைவனே அவருக்கு மறுமையில் செய்வான்'' எனக் குறிப்பிட்டார்கள்.

'முஉமின்களனைவருக்கும் இறைவன் தன்னுடைய 'லிக்கா' வென்னும் திருக்காட்சியைப் பொதுவாக வழங்

குவான், அபூபக்கருக்கோ தனியாக வழங்குவான்'' என்பது அண்ணலார் (ஸல்) அவர்களின் அருள்வாக்கு.

இரண்டாமவர்களான, ஃபாருக்குல் அ'அலம் ஸையிதினா உமர்(ரலி)அவர்களைப் பற்றிஅண்ணலார்(ஸல்)அவர்கள், ''நபித்துவம் என்னோடு முற்று பெறாதிருக்குமானால் உமர் நபியாகத் தகுந்தவரே'' எனச் சிறப்பித்தார்கள். உமர் (ரலி)அவர்களின் எண்ணங்களுக்கேற்ப இறை வசனங்களே இறங்கின. எதையும் ஆய்ந்து, உணர்ந்து, தெளிந்து, துணிந்து செயல்படுத்தும் ஆற்றலை இளமையிலிருந்தே பெற்ற அவர்கள் அதன் காரணமாகவே ஆரம்பத்தில் அண்ணலார் (ஸல்) அவர்களையும் எதிர்த்து நின்றார்களாயினும், இறைவனின் பேரருளால் இஸ்லாத்தின் பால் ஈர்க்கப்பட்ட பின்னர் இறை மார்க்கத்தை உயர்த்தவும் பூமியில் இறையாட்சியை நிலை நாட்டவும் மேற்கொண்ட செயல்திறன் அவர்களை இஸ்லாத்தின் இரண்டாம் நிறுவனராகவே வரலாற்றில் உயர்த்திவிட்டது. ''அரஃபா வாசிகளைக் கொண்டு பெருமை கொள்ளும் அல்லாஹ் உமரைக் கொண்டு அதிகம் பெருமை கொள்வான்'' என உரைத்த அண்ணலார் (ஸல்) அவர்கள், விண்ணவர்களும் உமர் (ரலி) அவர்களுக்குக் கண்ணியம் தருவதாகக் குறிப்பிட்டார்கள்.

மூன்றாம் கலீஃபாவாகிய ஸையிதினா உஃஸ்மான் கனீ துன்னூரைன் (ரலி) அவர்கள், அண்ணலார் (ஸல்) அவர்களின் இரு கண்மணிகளை ஒருவர் பின் ஒருவரையாக மணந்து 'இரு பேரொளி கொண்டவர்' என்ற சிறப்பை ஏற்றவர்கள். மாபெரும் வணிகச் சீமானாக விளங்கிய அவர்கள் மடையிலாக் கடல்போல் தங்கள் செல்வக் கருவூலத்தை வாரி வழங்கி அண்ணலார் (ஸல்) அவர்களிடமே சுவனத்தை ஒரு முறையல்ல, மும்முறை விலை பேசிப் பெற்றவர்கள்.

நான்காம் கலீஃபாவான ஸையிதினா அலீ — அல் — ஹைதர் (ரலி) அவர்கள் கஅபாவின் உள்ளேயே பிறந்தார்கள். பிறந்து, கண் திறந்து முதன் முதலாக அவர்கள் கண்டதும் முஹம்மதெம் கோமான் (ஸல்) அவர்களின் திருமுகத்தையே. சோதனைகள் தம்மைச் சூழ்ந்த காலத்திலும் மரணத்துணிவோடு தமக்குத் துணை நிற்கத் துணிந்த அச் செல்வரை 'ஞானக்கோட்டையின் தலைவாசல்' என நாயகத் திருமேனி (ஸல்) வர்ணித்தார்கள்.

அந்நல்லோர்கள் நால்வரின் வரலாறுகளை தனித் தனியாக வெளியிட்ட பின்னர் எஞ்சிய அறுவரின் வரலாற்றுச் சிறப்புகளை விளக்கக் கிடைத்த வாய்ப்புக்காக இறைவனுக்கு நன்றி செலுத்துகிறேன். அல்லாஹ்வின் திருத்தூதரின் அருளாசி பெற்ற இந்நல்லோர்கள் எப்படியெல்லாம் தங்கள் உடல்களையும் உடைமைகளையும் உறவுகளையும் உயிர்களையும் முதலீடு செய்தார்கள் என்ற முன்னுதாரணங்களை முன்வைக்கவே நான் முயன்றிருக்கிறேன். என் முயற்சிக்கு உதவிய அனைவருக்கும் என் நன்றி.

கருணையுள்ள ரஹ்மான் நான் இழைத்து விட்டிருக்கக் கூடிய குற்றங்களைப் பொறுத்தருள்வானாக; கற்றோர்களின் கண் கொண்டு குறைகளை நீக்கி நிறைவு தந்தருள்வானாக!

வஸ்ஸலாம்,

சென்னை
5-8-1988

எம்.எஸ். முஹம்மது தம்பி